# 'தனியான பெண்கள்: தணியாத லட்சியங்கள்!

**ம**துரை வில்லாபுரம் வார்டு கவுன்சிலர் லீலாவதி (மார்க். கம்யூ.) கொலை வழக்கை மறந்திருக்க மாட்டீர்கள். தமிழகத்தையே கலக்கிய கொடூரமான கொலை அது.

குற்றம்சாட்டப்பட்ட ஆறு பேருக்கும் சென்ற மாதம் ஆயுள் தண்டனை விதித்துத் தீர்ப்புக் கூறியிருக்கிறார், நீதிபதி ராமலிங்கம்.

"ஒட்டுமொத்த மதுரைவாசிகளின் உணர்வைப் பிரதிபலித்திருக்கும் நியாயமான தீர்ப்பு இது!" என்று நெகிழ்ச்சியுடன் குறிப்பிடும் லீலாவதியின் குடும்பத்தாரைச் சந்தித்தோம்.

பெத்தானியாபுரத்தில் ஓர் ஒண்டுக்குடித்தன வீட்டில் மிக மிக எளிமையாக வாழ்ந்து வருகிறார்கள், லீலாவதியின் கணவர் குப்புசாமியும் மூன்று பெண்களும்.

உட்கார ஒரு நாற்காலி கூட இல்லாத வீடு எனினும் மனத்தில் அபாரமான தன்னம்பிக்கையும் துணிச்சலும் கல்வி வெறியும் கொண்டிருக்கிறார்கள், லீலாவதியின் மூன்று பெண்களும்.

"அம்மாவைக் கொன்னுட்டாங்க. ஆனா, நீதியைக் கொல்ல முடியலை இல்லியா? அது போதும் சார் எங்களுக்கு!" என்று துடிப்புடன் பேசுகிறார், மூத்த மகள் கலாவதி.

தாயார் மறைவுக்குப் பின் கம்யூனிஸ்ட் கட்சியின் முழு நேர உறுப்பினராகி, சமூகப் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டு வருகிறார் கலாவதி.

"பெண்கள் கண்டிப்பா அரசியலுக்கு வரணும் சார். வந்தால், பாதுகாப்பு

• கலாவதி, துர்கா, தான்யா

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

உண்டுங்கறதை உறுதிப்படுத்துது, இந்தத் தீர்ப்பு. எங்கம்மா, நேர்மையான அரசியல்வாதி. வில்லாபுரம் தொகுதி மக்களுக்குத் தண்ணீர்ப் பிரச்னைதான் பெரிய விஷயம். லாரி தண்ணிதான் முன்ன வரும். அதுல ஏராளமா கமிஷன் அடிச்சிட்டிருந்தாங்க, அங்க உள்ள சில சமூக விரோதிகள். எங்கம்மா, அந்த வார்டுக்குத் தண்ணி வசதி செய்து கொடுத்து, 'அவங்க' வருமானத்தைக் கெடுத்துட்ட வெறுப்பிலதான் கொன்னு போட்டாங்க'' என்கிறார் கலாவதி.

லீலாவதியின் இரண்டாவது மகள் துர்கா, பி.ஏ., வரலாறு படித்துக் கொண்டிருக்கிறார். மூன்றாவது மகள் தான்யா, இயற்பியல் பட்டப் படிப்பில் இருக்கிறார்.

"எனக்கும் முழு நேர கட்சிப் பணிதாங்க! மனைவி இறந்ததும் கட்சி கொடுத்த பணத்தை, மூணு பிள்ளைங்க பேர்லேயும் டெபாஸிட் செய்திருக்கேன். வட்டி ரெண்டாயிரம் வருது. அதுல படிப்புச் செலவு நடந்துடுது. என் பேருக்குக் கட்சி முதலீடு செஞ்ச பணத்துக்கு 2500 ருபா வருது. அதுல குடும்பத்தை நடத்தறோம். லீலாவதி இறந்ததும், குடும்பப் பாதுகாப்புக்காக மக்கள் பணம் திரட்டிப் பதினைந்து லட்சம் தந்தாங்க. வில்லாபுரத்துல அவங்க பேருல ஒரு மணிமண்டபம் கட்டற திட்டம் இருக்குது. அந்த நிதி அதுக்குத்தான்'' என்கிறார் குப்புசாமி.

**"எ**க்கச்சக்கமா படிக்கப் போறோம். ஆனா, படிச்ச பிறகு முழு நேரக் கட்சி ஊழியம்தான்'' என்கிறார்கள் தான்யாவும் துர்காவும்.

"அரசியல் ஆர்வம் அப்பா மூலம் உண்டானதுதாங்க. இந்த நாட்டுல இருக்கற கட்சிகளிலேயே ஒரு செயல் திட்டத்தைக் கொடுத்து, அதுபடி செய்யுங்கன்னு சொல்ற ஒரே கட்சி மார்க்ஸிஸ்ட் கட்சிதான்! கட்டுப்பாடு, சமூக அக்கறை, மக்கள் சேவை - இதுல சமரசம் இல்லாத பார்ட்டிங்கறதாலதான் எங்களால முழு மனசோட ஈடுபட முடியுது. மக்களுக்குச் சேவை செய்யணுங்கற உணர்வு அம்மா மூலமா வந்ததுதான். அதைக் கடைசி வரைக்கும் கடைபிடிக்கறதுதானே அவங்களுக்கு செய்யற சரியான அஞ்சலியா இருக்க முடியும்?'' என்கிறார் கலாவதி.

**லீ**லாவதி கொலை வழக்கு விசாரணை நடந்து கொண்டிருந்தபோது தாம் சந்தித்த அச்சுறுத்தல்களும் மிரட்டல்களும் ஏராளம் என்கிறார் குப்புசாமி.

"நீதித்துறை கூட விலைபோகக்கூடிய மோசமான காலகட்டம் சார் இது! ஆனா, நீதிபதி ராமலிங்கம் ஒட்டுமொத்த தமிழக மக்களோட நம்பிக்கைக்கு நீர் வார்த்திருக்கார்! அரசு வழக்கறிஞர் ராமசாமிக்கும் எத்தனையோ பிரச்னைகள், இந்த வழக்குல. அவரோட ஆணித்தரமான வாதங்களுக்குக் கிடைச்ச வெற்றியாகவும் இதை எடுத்துக்கணும்!'' என்று நெகிழ்ந்து குறிப்பிடுகிறார் குப்புசாமி.



• குப்புசாமி

— ஸ்ரீராம்

படங்கள் : வெங்கடேஷ்

# தியானம் - போலீஸ் சாய்ஸ்!

• கோமதி

**உ**ரெல்லாம் சிறைக் கைதிகளுக்கு யோகா கற்றுத் தரும் திருவிழா நடந்து கொண்டிருக்க, மதுரையில் ஒரு சிறு மாறுதல்.

காவல் துறையினருக்கு தியானம் கற்றுத் தரும் படி பிரம்மகுமாரிகள் ஈஸ்வர விஸ்வ வித்யாலயத்தினரிடம் கேட்டுக்கொண்டிருக்கிறார், கமிஷனர் சுப்பிரமணியன்.

சுமார் எழுபத்து மூன்று நாடுகளில் கிளை பரப்பியுள்ள பிரம்மகுமாரிகள் அமைப்பின் மதுரை கிளையில், சகோதரிகள் உமா, கோமதி, சாந்தி ஆகியோரைச் சந்தித்தோம்.

"முழு உலகையும் போரற்ற, பொறாமையற்ற, துவேஷங்களற்ற அமைதிமயமாக்குவதுதான் எங்கள் அமைப்பின் நோக்கம். ஒவ்வொரு தனிமனிதனும் தனக்குள் பரிபூரண அமைதியைக் காண்பதுதான் உலக அமைதி என்கிற பெருங்கனவைச் சாத்தியமாக்கும். தியானம் மூலமும் ராஜயோகப் பயிற்சி மூலமும் அளவு கடந்த கடவுள் நம்பிக்கையையும் அளவு கடந்த அன்பையும் மனத்தில் நிரந்தரமாக்க முடியும். அதைத்தான் நாங்கள் செய்து கொண்டிருக்கிறோம்" என்கிறார்கள் இவர்கள்.

மதுரை காவலர்களுக்கு தியான வகுப்புகள் ஆரம்பித்து விட்டீர்களா என்றதும், "ஓ! எத்தனையோ பிரச்னைகள், மன இறுக்கம், கோபம், அதன் மூலம் நரம்புகள் பாதிப்பு வரை அவர்களுக்குப் பல கஷ்டங்கள். தியானப் பயிற்சி அவர்களுக்கு அமைதியையும் புத்துணர்ச்சியையும் தரும். பணியின் மீதும் பொதுமக்கள் மீதும் அதிக அன்பும் அக்கறையும் உருவாகச் செய்யும்" என்பவர்கள், தினசரி, பேட்ச் பேட்சாக ராஜ யோக வகுப்புகள் (இலவசமாகத்தான்!) எடுக்கிறார்கள்.

• உமா

கிராமப்புறங்களுக்கும் சென்று படிப்பறிவில்லாத மக்களிடையே ஆன்மிக விழிப்புணர்வு ஊட்டி வருகிறார்கள் இந்தச் சகோதரிகள்.

"தியானம், ராஜயோகமெல்லாம் பெரிய விஷயம்; புரியாது என்பது போன்ற மாயைகளை நாங்கள் வேரறுத்து விடுகிறோம். மக்களின் மொழியில் விளக்கிச் சொல்லும்போது பாமரரும் புரிந்துகொண்டு, ஆர்வமுடன் கற்க முன்வருகிறார்கள்" என்கிறார்கள்.

இந்தியாவில், இவ்வமைப்பின் தலைமையகம் மத்திய பிரதேசத்தில் உள்ள மவுண்ட் அபுவில் உள்ளது. தலைமையகம் உண்டே தவிர, தலைவர், குரு, சீனியர் – ஜூனியர் பாகுபாடுகள் இவர்களிடமில்லை.

"பிரம்மத்தின் குழந்தைகள் நாம். இதில் பெரியவர், சிறியவர் வேறுபாடே இல்லை" என்கிறார்கள்.

— ரம்யா

படங்கள்: வெங்கடேஷ்



• மதுரையிலுள்ள ராஜயோக தியான மையம்

# ''இத்தா கொலக்காரி!''

மதுரையிலுள்ள ஆயுதப்படை காவல் பிரிவிலிருந்து (ரிஸர்வ் போலீஸ்) நமக்கொரு கடிதம் வந்திருந்தது. சுமார் 650 பேர் உள்ள இப்பிரிவில் பாதி பேருக்கு மேல் வேலையே இல்லை என்றும் நூற்றுக்கணக்கான காவலர்கள் டிரைவர்களாகப் பணியாற்றுகிறார்களென்றும் மேலும் சில நூறு பேர் அதிகாரிகள் வீட்டு வேலைக்காரர்களாக உள்ளார்கள் என்றும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. 'எங்களுக்கொரு விடிவு பிறக்காதா' என்று முடிந்திருந்த அக்கடிதத்தின் அடிப்படையில் விசாரிக்க முடிவு செய்தோம்.

மதுரை – நத்தம் சாலையில் மிகப் பெரிய மைதானத்தின் நடுவே இருக்கிறது, ஆயுதப்படை பிரிவு அலுவலகம்.

நாம் சென்ற பிற்பகல் வேளையில், சட்டையைக் கழற்றிவிட்டுப் பல காவலர்கள் மரத்தடியில் அமர்ந்து குடும்பக்கதை பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஒரு சில காவலர்களிடம் விஷயத்தைச் சொல்லி விசாரித்தோம். மிகவும் பயந்து, நாலாபுறமும் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே பேசினார்கள்.

''வாஸ்தவம்தான் சார். அதிகாரிகள் வீட்டு வேலைக்குப் போறது எல்லா இடத்திலும் நடக்கறதுதான். இங்க கொஞ்சம் அதிகம். காய்கறி வாங்கறது, இஸ்திரி போடறது, தண்ணி பிடிக்கறதுன்னு பலதும் செய்ய வேண்டியிருக்கு. ஆனா 650 பேருக்கு வேலையே இல்லைங்கறது சரியில்லை. மதுரை, ரொம்ப ஜனத்தொகை உள்ள ஏரியா. திருவிழா, பொதுக் கூட்டம்னு எப்பவும் ஏதாச்சும் இருக்கும். நாங்கதான் அதுக்கு பாதுகாப்புக்குப் போகணும். தவிர ஜெயில் கைதிகளை கோர்ட்டுக்கு அழைச்சிட்டுப் போய் வர்ற வேலையும் எங்களுதுதான். எங்க வேலைல எங்களை இருக்க விட்டாப் போதும். எடுபிடி வேலைகள் ஏராளமா செய்யறதுதான் அவமானமா இருக்கு'' என்றார் ஒருவர்.

''வருஷத்துக்குப் பன்னெண்டு நாள் காஷுவல் லீவ் உண்டுன்னு பேரு. ஆனா, எடுக்க விட மாட்டாங்க. அதிகாரிங்க டூர் போனாக் கூட நாங்கதான் வண்டி ஓட்டிட்டுப் போகணும். நாங்க மெடிகல் லீவ் கூடப் போட முடியாது. போட்டா 'பிளாக் மார்க்' பண்ணிடறாங்க. வளர்ச்சிக்கு வழியே இல்லாம போயிடுது'' என்றார்கள் சில காவலர்கள்.

ஆயுதப்படைப் பிரிவுக்கென ஒரு மாரியம்மன் கோயில், இவர்களது அலுவலக வளாகத்துக்கு அருகில் உள்ளது. இக்கோயிலின் வருட வருமானம் சுமார் இரண்டு கோடி. ஆனால் ஒழுங்கான கணக்குக் காட்டாமல் அதிகாரிகளே பங்கு பிரித்துக் கொள்கிறார்கள் என்று வேறு விதப் புகார் ஒன்றும் சில காவலர்களால் சொல்லப்பட்டது.

இந்தப் புகார்களின் அடிப்படையில், மதுரை காவல்துறை கமிஷனர் ஆ. சுப்ரமணியனைச் சந்தித்தோம்.

''650 காவலர்களுக்கு வேலையே இல்லையாமே இங்கு?''

''650 பேர் போதவில்லை என்பதுதான் சரி.



• ஆயுதப்படை காவலர்கள் முகாம்



• கமிஷனர் சுப்ரமணியன்



• கூட்டத்தைச் சமாளிப்பதே இவர்களின் முக்கியப் பணி!

ஆயிரம் பேர் வந்தாலும் மதுரையில் பணிச்சுமை அதிகம். இது அவர்களுக்கே தெரியாததல்ல."

"அப்படியிருக்கும்போது அதிகாரிகள் வீட்டு வேலைக்கும் டிரைவர் வேலை பார்க்கவும் இவர்கள் ஏன் போக வேண்டும்?"

"அதிகாரிகள் வீடுகளில் சிறு உதவிகள் செய்வது எல்லா இடங்களிலும் உண்டு. ஆனால், என் வீட்டில் அது கிடையாது. நீங்களே சுற்றிப் பார்க்கலாம்! ஆனால் இங்கு அப்படி பிற அதிகாரிகளின் வீட்டு வேலையே முழு நேர வேலையாகச் செய்கிறார்களா என்று தெரியவில்லை. உடனே கவனிக்கிறேன்.

"டிரைவராகப் பணியாற்றுபவர்கள் பற்றிச் சொன்னீர்கள்: அதை முழுமையாக மறுக்க மாட்டேன். எங்களுக்கு வாகனங்கள் இருக்கிற அளவு டிரைவர்கள் இல்லை. அதுதான் பிரச்னை. அரசுதான் இதைத் தீர்க்க வேண்டும்."

"கேஷுவல் லீவ்கூட எடுக்க விட மாட்டேனென்கிறீர்களாமே?"

"அதெல்லாமில்லை. பல சமயங்களில், காவலர்கள் லீவ் எடுக்க இது சமயமில்லை என்று அரசிடமிருந்து கடிதம் வரும். சட்டசபைக் காலங்கள், பிற முக்கிய நிகழ்ச்சி நேரங்கள், போராட்டங்கள் மாதிரி மக்களை நேரடியாக பாதிக்கும் சம்பவங்கள் நடக்கிறபோது விடுமுறை அளிப்பதில்லை என்பது உண்மையே. பிரச்னை இல்லாத நேரங்களில் கட்டுப்பாடு ஏதும் விதிப்பதில்லை. உரிய காரணங்களுடன் மெடிக்கல் லீவுக்கு விண்ணப்பித்தால் அதுவும் கிடைக்காமல் போகாது. ஆயுதப்படை பிரிவு என்ன, எங்களுக்கு விரோதியா? அவர்களும் மக்கள் பணியில் இருப்பவர்கள்தானே?"

"மாரியம்மன் கோயில் வருமானம்?"

"அதெல்லாம் வீண் புரளி. ஒழுங்காகத் தணிக்கை செய்யப்பட்டு கணக்குகள் இருக்கிறது. மாரியம்மன் சொத்தைக் களவாட இங்கு யாருக்கும் தைரியம் கிடையாது. அவள் பயங்கர கோபக்காரி!"

**— நமது நிருபர்**

படங்கள்:
**வெங்கடேஷ்**





# எருமை முதுகும் ஓகேதான்!

"கடந்த ஞாயிறு மாலை ரஜினி படம் போட்ட சன் டீ.விக்கு நன்றி!"

"முலாயமின் திருமகனார் சைலேஷ் யாதவை ஜெயிக்க வைத்த உ.பி. மக்களுக்கு நன்றி!"

என்ன இதெல்லாம்? மதுரை நகரத்து சுவர்களில் நீக்கமற நிறைந்திருக்கும் போஸ்டர்களிலிருந்து சாம்பிள்கள்; அவ்வளவுதான்!

பிறந்த நாள், இறந்த நாள், திருமண நாள் (இருமனம் இணைவதை வாழ்த்தும் நெஞ்சங்கள்) பூப்புனித நீராட்டு விழா, மேற்படிப்புக்கு வெளிநாடு செல்லும் வைபவம்– எதுவுமே விலக்கல்ல!

பதினைந்து பேர் இணைந்து ஆளுக்குப் பத்து ரூபாய் போட்டால் நூறு போஸ்டர்கள் ரெடி.

"மதுரை ஜனங்களுக்கு எதையும் ஊரறிய செய்யணும் சார்! போஸ்டர் அடிக்கறது இங்க சர்வசாதாரணம். பணக்கார வீட்டுப் பையன்களை ஒண்ணாங்கிளாஸ்ல சேர்த்தால்கூட போஸ்டர் போட்ருவாங்க, என்னமோ அப்துல் கலாமுக்கு நிகரா ராக்கெட் விட்ட மாதிரி!" என்கிறார் ஆட்டோ டிரைவர் மோகன்.

"அரசியல்வாதிங்க ஆரம்பிச்சி வெச்சது தாங்க. இங்க கட்சிகளுக்கு உள்ற நெறைய பாலிடிக்ஸ் பண்ணிக்குவாங்க. ஒருத்தன் மேல ஒருத்தன் பழிபோட, ராவோட ராவா போஸ்டர் அடிச்சி ஒட்டிட்டு, 'இவன் - பொதுமக்கள்'னு போட்ருவாங்க. அவனைத் திட்டி இவன் ஒட்டுவான்; இவன் போஸ்டர் மேல இன்னொருத்தன் ஒட்டுவான். அதுலயே சண்டை வந்துடும். அப்புறம் சாணி அடிச்சிப்பாங்க" என்றார் அரசியல் போஸ்டர்கள் அச்சடிக்கும் ஓர் அச்சக உரிமையாளர்.

"இந்த வம்பே வேணாம்னு தான் நான் அரசியல் போஸ்டர் ஆர்டருங்களையே எடுத்துக்கறதில்லை. சினிமா, கல்யாணம், திருவிழாதான் நம்ம ரூட்டு" என்றார் அய்யனார் அச்சக உரிமையாளர், ரமேஷ்.

"மதுரை டவுனுக்குள்ற மட்டும் அம்பது ப்ரெஸ்ஸுங்க இருக்குது சார். எல்லாத்துலயும் ராப்பகலா வேலை நடக்கும். இங்க ஃபெயிலியரே ஆகாத தொழில் இது" என்றார் சண்முகம் என்ற அச்சக ஊழியர்.

சுவர்கள் தவிர, ஆட்டோக்களின் முதுகு, பேருந்துகள், குப்பைத்தொட்டி–சமயத்தில் எருமை மாடுகளின் மீதும் போஸ்டர் ஒட்டுவதுண்டாம்!

நகருக்குள் 35 திரையரங்குகள் இருப்பதாலும் அச்சகங்களுக்கு ஆர்டர் பிரச்னை எப்போதும் இருப்பதில்லை.

சட்டமன்ற, பாராளுமன்றத் தேர்தல்களை விட மதுரை அச்சகத்தார் அதிகம் விரும்புவது பஞ்சாயத்து தேர்தல்களைத்தான்.

"கிரவுன் சைஸ் ஆர்டினரி பேப்பர்ல அடிச்சி தள்ளிரலாம் சார்! அந்த ஒரு மாசம் சம்பாதிக்கறதை வெச்சிக்கிட்டு ஒரு வருசம் ஓட்டிறலாம்!" என்கிறார் 'அய்யனார்' ரமேஷ்.

— பார்ஸார்தி

படங்கள்: வெங்கடேஷ்

# ரூ. 6,250 கோடி பட்டுவாடா.

# 15 லட்சம் பேருக்கு மேல் வேலை வாய்ப்பு.

## ஊக்கம் அளித்த 25 லட்சம் உள்ளங்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி!




நம்வாழ்வின் இலக்கணத்தை போதிக்கும் ஆசான் இயற்கை. கடல் நீர் மழையாகும். மழை நதியாக மாறி, நிலத்தில் ஓடி, கடலில் கலக்கும்.

ஒன்றை ஒன்று சார்ந்து வளர்வதே இயல்பான வளர்ச்சி. ஸ்ரீராம் சிட்டு திட்டங்களும் அப்படித் தான். பலர் ஒன்று கூடி சேமித்து உயர்வதற்கு சிறந்த வழிமுறை.

*நம்பிக்கைக்கு நன்றி!*

1974 ல் எளிமையாகத் துவங்கப்பட்ட ஸ்ரீராம் சிட்ஸ், 25 லட்சம் குடும்பங்கள் அளித்து வரும் ஆதரவினால் இன்று நிகரற்ற நிதி நிறுவனமாக வளர்ந்துள்ளது.

இதுவரை ரூ. 6,250 கோடி சீட்டுப் பணமாக பட்டுவாடா செய்துள்ள ஸ்ரீராம் சிட்ஸ், உங்களுடைய ஒத்துழைப்பின் மூலம் வசூல் செய்வதிலும் 99.3% செயல் திறன் பெற்று முதலிடத்தில் உள்ளது. உதவிய உங்களுக்கு மனமார்ந்த நன்றி.

*தினந்தோறும் ரூ. 6 கோடி பட்டுவாடா!*

ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெற்றுக் கொண்டு, ஸ்ரீராம் சிட்ஸ் 25 லட்சம் குடும்பங்களில் வளமையை கொண்டு சேர்த்துள்ளது. ஒவ்வொரு வேலை நாளிலும் ரூ. 6 கோடி சீட்டுப் பணமாக தங்கு தடையின்றி பட்டுவாடா செய்கின்றது.

*15 லட்சம் வேலை வாய்ப்பு!*

பட்டுவாடா செய்யப்பட்ட சீட்டுத் தொகையை சந்தாதாரர்கள் கல்வி, வீடு கட்டுதல், தொழில் துறை என்று பல வகைகளில் முதலீடு செய்வதால் இதுவரை 15 லட்சத்திற்கும் மேலானோர் வேலை வாய்ப்பு பெற்றுள்ளனர்.

ஸ்ரீராம் சிட்ஸ் நகரங்களில் மட்டுமின்றி சிறு கிராமங்களில் கூட பெரும்பாலானோர்க்கு வேலை வாய்ப்பை உருவாக்கி உள்ளது.

*வசந்தம் வருகிறது!*

சீட்டு சேமிப்பின் மூலம் வளம் பெறும் முறையை ஸ்ரீராம் சிட்ஸ் முகவர்கள் மக்கள் மத்தியில் எடுத்துச் சென்று, சமூகத்துக்கு வசந்தத்தை வழங்குவதுடன் தங்கள் வாழ்விலும் வளர்ச்சி பெற்றுள்ளனர்.

ரூ.6,250 கோடி பட்டுவாடா, பலன் பெற்ற குடும்பங்கள் 25 லட்சம், 15 லட்சம் வேலை வாய்ப்பு, 400 கிளைகள், 4,000 ஊழியர்கள், 25,000 முகவர்கள் - இவை வெறும் எண்ணிக்கையல்ல. உங்களுடைய நம்பிக்கையின் இன்னொரு பரிமாணம்.

ஆம்! சிறுதுளி பெருவெள்ளம் எனும் இயற்கை நீதியை நிரூபிக்கும் வகையில் ஒருவொருக்கொருவர் உதவிக் கொண்டு, முன்னேற உதவுகின்றது ஸ்ரீராம் சிட்ஸ்.




**ஸ்ரீராம் சிட்ஸ்**



கையளவு சேமிப்பு. கடல் அளவு செழிப்பு.

**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்**

சுப்ரமணியன் பில்டிங், 1 கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை 600002. போன்: 8514833-40

WORDCRAFTS

**ப**தினைந்து வயதிலிருந்தே பழனிக்குக் கள்ளச் சாராயம் காய்ச்சுவதும் விற்பதும்தான் தொழில். நல்ல வருமானம். ஆனால் எப்போதும் கோர்ட், சிறை என்று டென்ஷன் மிகுந்த வாழ்க்கை. சமூக அக்கறையுடன் செயல்படும் காவலர்களைக் கண்டால் பயந்து ஓட்டம். ஒரு கட்டத்தில் 'ஏண்டா இந்தத் தொழிலுக்கு வந்தோம்' என்று வெறுத்தாலும், கிராமத்தில் வேறு தொழிலுக்கான வாய்ப்பு இல்லாததால் கள்ளச் சாராயத்திலேயே உழன்று கொண்டிருந்தார்.

அப்போதுதான் அந்த மாறுதல் வந்தது. கிராமத்து பஞ்சாயத்துத் தலைவர்தான் காரணம்.

கள்ளச் சாராயம் காய்ச்சிக் கொண்டிருந்த பழனியின் கைகள் இப்போது கடப்பாரை பிடித்து வேலை செய்கின்றன. தினசரி ஐம்பது ரூபாய்தான் வருமானம். ஆனால் மனதுக்கு நிம்மதியாக இருக்கிறது.

"எவ்வளவோ சம்பாதிச்சேன்; எதுவும் நிக்கலை; ஆனால் இப்போது சிறிதளவே சம்பாதித்தாலும் நிம்மதியாகக் கஞ்சியோ, கூழோ குடிக்க முடிகிறது. நான் மட்டுமில்லீங்க.. எங்க கிராமத்திலே கள்ளச் சாராயத் தொழிலில் ஈடுபட்டிருந்த நாற்பது, ஐம்பது நபர்களுக்கும் தொழில் மாறிவிட்டது" என்று மகிழ்ச்சி பொங்கச் சொல்கிறார் பழனி.

"இந்த மகிழ்ச்சியான மாறுதலுக்கு நான் மட்டும் காரணமல்ல; மாவட்ட காவல் துறை அதிகாரிகளும் மிகவும் ஒத்துழைத்தார்கள்" என்று அடக்கத்துடன் சொல்கிறார் பஞ்சாயத்து தலைவரான இளங்கோ.

**செ**ன்னை பூந்தமல்லியிலிருந்து திருவள்ளூர் செல்லும் பாதையில் வெள்ளவேட்டிலிருந்து சற்று உள் வாங்கியிருக்கிறது குத்தம்பாக்கம். கெமிக்கல் இஞ்ஜினியரான இளங்கோ மத்திய அரசு வேலையில் கை நிறைய சம்பாதித்துக் கொண்டிருந்தவர். இன்று குத்தம்பாக்கத்தில் சமூக, பொருளாதார அடித்தளத்தை மாற்றும் வகையில் சிறப்பான பஞ்சாயத்துத் தலைவராகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்.



• பழனி

இளங்கோவின் வாழ்க்கையில் இந்த மாற்றம் எப்படி நிகழ்ந்தது?

"விடுமுறை நாட்களில் கிராமத்துக்கு வரும்போது பார்க்கும் காட்சிகள் என்னைக் கடுமையாகப் பாதித்தன. எந்தவிதமான முன்னேற்றமும் இல்லாமல், வறுமையிலேயே வாழ்ந்து, மடிந்து கொண்டிருந்தார்கள் மக்கள். பத்தாவது வரை படித்து பெயில் ஆனாலும் பாஸ் செய்தாலும் மேலே படிக்க முயற்சி செய்யாமல், கள்ளச் சாராயம், ரவுடித்தனம் என்று தொழில் மாறிப்போன இளைஞர்கள்; தலித் மக்கள் பகுதிகளிலிருந்து ஆண்டுக்கு ஆண்டு, பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளின் எண்ணிக்கை குறையும் போக்கு. இவர்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று என் எண்ணத்தை செயல் வடிவமாக்க முனைந்தேன். இந்தியன் வங்கி மூலம் சில திட்டங்கள் கொண்டு வந்தேன். ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரி மாணவிகள் கிராமத்து மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டும் பணியில் ஈடுபட்டனர். இப்படிப் பல பணிகளில் ஈடுபட்டாலும் நிரந்தரமாக இந்த மக்களின் நடுவிலேயே தங்கி இருந்து செயல்பட்டால்தான் ஏதாவது உருப்படியாகச் செய்ய



• இளங்கோ

முடியும் என்று புரிந்தது. இந்தச் சமயத்தில்தான் ராஜீவ் காந்தி அவர்களால் புதிய பஞ்சாயத்துச் சட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. இதுதான் சரியான சமயம் என்று வேலையை உதறிவிட்டு மீண்டும் கிராமத்துக்கு வந்து விட்டேன்" என்றார் இளங்கோ.

**உள்**ளாட்சித் தேர்தலில்(1996) கட்சி சார்பில்லாமல் போட்டியிட்டு வெற்றி பெற்றார் இளங்கோ. ஜெயித்ததும் செய்த முதல்

# 'ஹைடெக்' பஞ்சாயத்துத் தலைவர்!



வேலை, பஞ்சாயத்து எல்லைக்கு உட்பட்ட பகுதிகளில் வசித்துக் கொண்டிருந்த அனைத்து நபர்களையும் பற்றிய சர்வே எடுத்ததுதான்! குடும்பத்தில் படித்தவர்கள் எண்ணிக்கை, செய்யும் வேலை, அவர்களின் தேவை என்று பல விவரங்கள் எடுத்து கம்ப்யூட்டரில் பதிவு செய்து ஒரு புத்தகமாகத் தொகுத்தார் இளங்கோ. அதை அடிப்படையாக வைத்துதான் கிராமத்துக்கான திட்டங்களைத் தீட்டுகிறார்.

கடந்த நான்கு வருட காலத்தில் சுமார் இரண்டு கோடி ரூபாய் அளவுக்கு இந்த கிராமத்துக்கு அரசு உதவி கிடைத்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம் இளங்கோவின் விஞ்ஞான பூர்வமான அணுகுமுறைதான்! தமிழகத்தின் வேறெந்த ஊராட்சிக்கும் இதுபோன்ற நிதி உதவி கிடைக்கவில்லை.

"காந்தியின் நிர்மாணத் திட்டத்தின் மேல் எனக்கு அளவு கடந்த நம்பிக்கை உண்டு. அதன் அடிப்படையில் செயல்பட்டால் கிராமங்கள் கண்டிப்பாக முன்னேறும் என்பது நிச்சயம்.

**• சாராயத்தை விட்டோருக்கு வேலை வாய்ப்பு!**

விவசாயம் காலம் சார்ந்த தொழிலாக இருப்பதால் கிராமத்தில் வேலை வாய்ப்பு முக்கியப் பிரச்னை. இது தவிர மழை பொய்த்துப் போகும்போது நிலைமை இன்னமும் மோசமாகப் போய் விடுகிறது. எனவேதான் அந்த மக்களின் வேலை வாய்ப்புக்கு முன்னுரிமை கொடுத்துச் செயல்பட்டேன். இப்போது சாலை போடுவதற்கும் பள்ளிக்கு சுற்றுச் சுவர் கட்டுவதற்கும், மருத்துவமனையைப் பழுது பார்த்துக் கட்டுவதற்கும் எங்கள் மக்களின் உழைப்பே பயன்படுகிறது. வேலைக்கு வேலை; கூலி கிடைக்கும் அதே சமயத்தில் 'நமது கிராமத்துக்கு நம்மால் ஆன பணி' என்ற திருப்தியும் அவர்களுக்கு உண்டாகிறது. இப்போது 'நமக்கு நாமே' திட்டத்தின் அடிப்படையில் சிமெண்ட் சாலை போட இருக்கிறோம். ஏற்கெனவே குடிநீர், தெரு விளக்கில் தன்னிறைவு பெற்று விட்டோம்! இப்போது சாலைகளையும் போட்டு விட்டால் மாதிரி கிராமமாகி விடும், குத்தம்பாக்கம்!" என்கிறார் இளங்கோ.

திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள அரசு அதிகாரிகள்- குறிப்பாக ஆட்சியாளர், கூடுதல் ஆட்சியாளர் யூனியன் நிர்வாகிகள் ஆகியோருக்குக் குத்தம்பாக்கம் என்றாலே குஷி! எந்த ஒரு புதிய முயற்சியும் செய்து பார்க்க குத்தம்பாக்கம் அவர்களுக்குக் கை கொடுக்கிறது.

"பெண்கள் மத்தியில் இப்போது சேமிப்பை நோக்கமாகக் கொண்டு சிறுசிறு சுய சார்பு குழுக்கள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. இன்னமும் வேலை வாய்ப்பைப் பெருக்கும் விதமாக சில சிறு தொழில்களைத் துவங்க திட்டமிட்டுள்ளோம். கிராமங்கள் முன்னேற வெளியிலிருந்து தேவ தூதர்கள் யாரும் வரமாட்டார்கள், எல்லாமே நம் கையில்தான் இருக்கிறது" என்கிறார் இளங்கோ.

**- ஸ்ரீநிவாசன்**

படங்கள்: **குழலன்**



# நான் புண்ணியவதி!

சென்னையைச் சேர்ந்த வேர்ல்டு விஷன் இந்தியா என்ற அமைப்பு, கிளாடிஸ் ஸ்டெயின்ஸுக்கு விருது வழங்கி கௌரவித்தது. சென்னை வந்திருந்த கிளாடிஸைச் சந்தித்தோம்:

"உங்களுக்கு விதியின் மீது நம்பிக்கை ஏற்பட்டுள்ளதா?"

"எனக்கு எப்போதுமே தலைவிதி மீது நம்பிக்கை உண்டு. இந்த உலகில் எதுவுமே நிரந்தரமானது இல்லை. சில வருடங்களுக்கு முன் ஏற்பட்ட திடீர் தொற்று நோய் காரணமாக, நான் நன்கு பழகிய ஏழெட்டு பேர், சற்றும் எதிர்பாராத விதமாக மரணமடைந்து விட்டனர். அப்போது, விதி மீதான என் நம்பிக்கை அதிகரித்தது. என் கணவரது கொடூரமான பிரிவு, விதி மீது இன்னமும் ஆழமான நம்பிக்கையை ஏற்படுத்தியிருக்கிறது."

"அந்தச் சம்பவம் அடிக்கடி உங்கள் நினைவுக்கு வந்து கொடுமைப்படுத்துகிறதா?"

"ஒருவிதத்தில் நான் புண்ணியவதி! காரணம், அந்தக் கொடூரமான சம்பவத்தை நான் நேரில் பார்க்கிற துர்பாக்கியம் நேரவில்லையே! பார்த்தவர்களும், கேள்விப்பட்டவர்களும்தானே எனக்குத் தகவல் சொன்னார்கள்! ஆனால், எங்களுடைய டிரைவரின் நிலைமைதான் பரிதாபகரமானது. சம்பவம் நடந்தபோது, அந்த இடத்தில் அவர் இருந்தார். ஆனால், அவரால், என் கணவரையோ, குழந்தைகளையோ காப்பாற்ற முடியாத சூழ்நிலை. சிறிது நேரம் அவர் தாமதித்திருந்தால், அவரும் உயிரோடு எரிக்கப்பட்டிருக்கக்கூடும். நேரில் பார்த்த அந்தக் கொடூரம் அவரை வெகுவாக பாதித்துள்ளது. இப்போது கூட நடு இரவில் திடீரென்று விழித்துக் கொண்டு, தூக்கம் வராமல் தவிக்கிறார்."

"கணவரது மரணத்துக்குப் பின், இங்கேயே தங்கி அவரது சேவையைத் தொடர முடிவெடுத்ததை, ஆஸ்திரேலியாவில் உள்ள உங்கள் பெற்றோரும், மற்றவர்களும் எதிர்க்கவில்லையா?"

"ஆமாம்! என்னையும், குழந்தை எஸ்தரையும், இந்தியாவை விட்டுப் புறப்பட்டு வந்து விடும்படி ரொம்பவும் வற்புறுத்தினார்கள். ஆனால், என் கணவர் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து செய்வதே அவருக்கு நான் செய்யும் மரியாதை என்று நான் கருதினேன். எனவே, அவர்களது வற்புறுத்தலைப் புறக்கணித்து விட்டேன்."

"உங்கள் கணவருக்கு உதவியாக இருந்ததைவிட, இப்போது முழுப் பொறுப்பு ஏற்றுச் செயல்படுவது சிரமமாக இல்லையா?"

"அதையெல்லாம் பார்த்தால் முடியுமா? தொழுநோயாளிகள் சிகிச்சை மையம் தவிர, ஒரு நல்ல ஆஸ்பத்திரி கட்ட வேண்டும் என்பது என் கணவரது கனவாக இருந்தது. இப்போது அந்தக் கனவை நனவாக்கும் முயற்சியில் நான் இறங்கியிருக்கிறேன். நான் செய்யும் பணி எனக்கு ஆத்மதிருப்தியை அளிக்கிறது."

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **வெங்கடேஷ்**

# ஆனந்தி

## தெய்வ தரிசனம் — 22

**நா**கைப்பட்டிணம் சென்றபோது மிகுந்த ஆவலுடன் பொரவச்சேரி என்று அழைக்கப்படும் பொருள் வைத்தசேரி முருகனைத் தரிசிக்கச் சென்றேன். சிக்கலுக்கு அருகில் உள்ள தலம். ஆனால் தரிசனம் கிட்டவில்லை. கோவில் நடையைச் சாத்திப் பூட்டிக் கொண்டு குருக்கள் போய் விட்டார். எனக்கு ரொம்ப ஏமாற்றம். அதனாலேயே எட்டிகுடி வேலவனைத் தரிசித்து விட வேண்டும் என்ற உறுதியுடன் கிளம்பினேன்.

பொரவச்சேரிக்கும் எட்டிகுடிக்கும் பொதுவான பின்னணி ஒன்று இருக்கிறது. இது வரலாறோ கதையோ தெரியாது.

முத்தரையன் என்ற அரசர் முருகபக்தனாக இருந்தார். சுப்ரமண்ய சுவாமிக்கு எங்குமில்லாதபடியான ஒரு கோவில் கட்டிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டார். சிற்பக் கலையின்



* நுழைவாயில்

கரைகண்ட ஒரு மகாசிற்பியை அழைத்துத் தன் உள்ளக் கிடக்கையைச் சொன்னார்.

"கோவில் கட்டினால் போதாது. நீ செய்யும் முருகப்பெருமான் அற்புதமாக அமைய வேண்டும். ஈடுஇணையில்லாத அழகனாக இருக்க வேண்டும்" என்றார்.

"அதற்கென்ன மகாராஜா! உங்கள் ஆர்வத்தைப் பூர்த்தி செய்கிறேன்" என்றார் சிற்பி.

சிற்பி பல நாட்கள் விரதமிருந்து அல்லும் பகலும் முருகனையே தியானம் செய்து கொண்டிருந்தார். அழகின் வடிவமான ஷண்முகப் பெருமானை ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களுமாகக் கல்லில் செதுக்குவது சாமானியமான காரியமா? அவயவங்கள் சரியான அளவில் அமைய வேண்டாமா? ஆறுமுகங்களை எவ்வாறு ஒன்றாக அமைப்பது? என்ன உயரம் இருந்தால் கிரீடத்திலிருந்து பாதம் வரையில் அளவுகள் சரியாக அமையும் என்றெல்லாம் யோசித்துக் கொண்டிருந்தார். சிற்ப சாஸ்திரங்களைப் படித்து ஒரு முடி



* இடும்பன் கோயில்

• எட்டிகுடி எழிலவன்!

வுக்கு வர முடியவில்லை. கடைசியில் துணிந்து கல்லை எடுத்து வணங்கி விட்டு உளியால் செதுக்கத் தொடங்கினார்.

அவருடைய கைகளை அவர் இயக்குவதாகவே தெரியவில்லை. சிலை வடிப்பதே தவமாயிற்று. கடைசியில் தவம் பலித்தது. பன்னிரண்டு கரங்களும், முன்னும் பின்னுமாக ஆறுமுகங்களும் கொண்ட அற்புதமான முருகன் எதிரில் காட்சி கொடுப்பது போல அமைந்து விட்டது. மயில் வாகனமும் அவரைத் தாங்கக் கூடிய அளவு பெரிது. அதன் அலகில் நாகம். மயிலின் முதுகில் ஒரு காலை மடித்து ஒரு பாதம் தரிசனம் தருவதற்காகத் தொங்கவிட்டபடி வீராஸனத்தில் அமர்ந்திருக்கிறார் ஆறுமுகன்.

மயிலின் கால்கள் இரண்டும் முன்னும் பின்னுமாக இடைவெளி விட்டுப் பூமியில் நகங்களுடன் பதிந்திருக்கின்றன. வேலைப்



• திருக்குளம்

# எட்டிகுடி எழில்முருகன்

பாடமைந்த அழகிய திருவாசி. ஸ்ரீவள்ளி தேவசேனா சமேதராக வீற்றிருக்கும் கோலம்.

இந்த அற்புதமான ஷண்முக வடிவத்தைக் கண்ட அரசன் சிற்பிக்கு அளித்த வெகுமதி என்ன தெரியுமா? ஏகலைவனைப் போலத் தன் கை கட்டை விரலை இழந்தார் சிற்பி! இதைப் போல

# கதிரியை ஏமாற்றிய கிளின்டன்!

விவகாரங்களில் சிக்கிக் கொள்வது மட்டுமல்ல; கிளின்டனுக்கு சாக்ஸபோன் வாசிப்பதும் கைவந்த கலை!

கிளின்டன் இங்கு தங்கிய மௌரியா ஹோட்டலில் அவருக்கென்றே அவசர அவசரமாக சாக்ஸபோன் ஒன்றை வாங்கி வைத்திருந்தார்கள். பின்னே, பார்ட்டிக்குத் திடீரென்று மூடு வந்து 'சாக்ஸபோன்' என்று கேட்டு விட்டால் என்ன செய்வது? அதுதான் இந்த ஏற்பாடு!

'கிளின்டன் எப்படி வாசிப்பார்?' கொட்டுப்பறை வாசிக்கத் தெரிந்த கிரிதர் கோமங் தவிர நம் ஊர் அரசியல்வாதிகளில் வேறு யாருக்காவது இசைக்கருவிப் பயிற்சி உண்டா? சாக்ஸபோன்காரரான கதிரியிடம் கேட்டுப் பார்த்தோம்.

"இது ஒன்றும் பெரிய விஷயமில்லை; மேலைநாடுகளில் உள்ள முக்கால்வாசி அரசியல்வாதிகளுக்கு ஏதாவது ஒரு இசைக் கருவி வாசிக்கத் தெரிந்திருக்கும்! ஏனென்றால் அங்கு பள்ளிக்கூடங்களில் அனா, ஆவன்னாவுடன் சேர்த்தே மியூசிக்கும் கற்றுக் கொடுத்து விடுகிறார்கள்" என்கிறார்.

"நிஜம்தான். கிளின்டனோட தம்பிங்க ஆர்க்கெஸ்ட்ரா வச்சிருக்காங்க தெரியுமா?" என்று கேட்டு விட்டுச் சிரிக்கிறார்.

"நான்கு வருஷத்துக்கு முன்னால வாஷிங்டன் போயிருந்தேன். கிளின்டன் முன்னால ஐந்து நிமிஷம் நான் சாக்ஸபோன் வாசிக்க ஏற்பாடு பண்ணியிருந்தாங்க. எல்லாம் ரெடியாகி இருந்தப்போ,

இன்னொரு சிலை இவன் செய்துவிடக் கூடாது என்பதற்காக அரசன் வழங்கிய பரிசு!

ஆனால் ஆண்டவன் திருவுள்ளம் என்ன வென்பது அரசனுக்குத் தெரியுமா?

சிற்பி சளைக்கவில்லை. இன்னொரு முரு கனைச் செதுக்கி வடித்து விட்டார்!

இந்த இரண்டாவது முருகன் வடிவத்தைச் சிற்பி செதுக்கி முடித்து, அதன் கண்களைத் திறந்து பார்வையளித்த போது அந்த உயிர்ச் சிலை நிஜமாகவே தெய்வத்தன்மை பெற்று விட்டது. மயில் உயிர்பெற்று வானில் எழுந்தது. சிற்பி கையில் இருந்த உளியால் மயிலின் காலைத் தட்டி ஒரு பின்னம் ஏற் படுத்தியபிறகே மயில் பூமியில் அமர்ந்தது.

இந்த அற்புதத்துடன் தொடர்புடைய முரு கப் பெருமானே எட்டிகுடியில் குடியிருக் கிறான்.

(எட்டி குடி வேலவனைச் செதுக்கிய சிற்பி யின் கண்களையே பறித்து விட்டான் அரசன். துயரத்துடன் எண்கண் தலத்துக்குச் சென்று மூன்றாவது சிலையை அகக் கண்களாலேயே அவன் கண்டுசெய்ததாகவும் கதை வழங்கு கிறது.)

செவிவழிச் செய்திதான் என்றாலும் எட்டி குடி தலவரலாறு புத்தகத்தில் இந்தப் பெயர் தெரியாத சிற்பியின் கதை இருக்கிறது. அவர் செதுக்கிய முதல் முருகன் விக்ரகம் பொருள் வைத்த சேரிக் குமரன்தான் என்கிறார் ஒருவர். இன்னொருவர் எட்டிகுடி முருகன்தான் முத லில் உருவாகிய ஷண்முகன் என்கிறார். நமக்கு என்ன? அற்புதமான அருள் வடிவமான அழகு மயமான முருகனை வணங்கி அவன்

கடைசி நேரத்துல அந்த புரோகிராம் கேன்சல் ஆயிட்டுது. அப்பத்தான் அவர் சாக்ஸபோன் பிரியர்னு தெரிஞ்சுக்கிட்டேன்.

"கிளின்டன் வாசிக்கறது டெனார்சாக்ஸ் (Tennor sax). நான் யூஸ் பண்ற அல்டோசாக்ஸ் (Altosax). பாரிடான்சாக்ஸ்ங்கறது தான் பெரிய்ய சாக்ஸபோன். இதை யூஸ் பண்றவங்க ரொம்பக் குறைவு..." என்பவர், மீண்டும் கிளின்டன் முன் வாசிக்கத் தமக்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கும் என்று உறுதியாக நம்புகிறார்!

— சலாம்ஜி



சந்நிதியில் மெய்மறந்து நின்று தரிசிக்க முடிகிறது.

நாம் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள்! ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்ததால் எவ்வளவு சௌகரியம்! என் தெய்வம் உன் தெய்வம் என்று நினைக்காமல் எந்த அமைப்பில் பகவானைப் பார்த்தாலும், எந்த வடிவத்தில் அவர் காட்சி தந்தாலும், யானையோ, நாகமோ, அன்னை வடிவமோ குழந்தை வடிவமோ உடனே மனம் குவிந்து வணங்கி, அப்படி வணங்குவதனாலேயே மனம் உயர முடிகிறதே. சற்று நேரமாவது, பகவான் சந்நிதியில் நிற்கும் சில மணித் துளிகளாவது கவலைகளை மறந்து மனத்தில் அமைதி பிறக்கிறதே. இந்த ஆறு தெய்வங்களையும் வணங்கிப் பழக்கப்பட்டதினாலேயே மற்ற எந்த மதமாக இருந்தாலும் மதித்துப் போற்ற முடிகிறதே. ஆதிசங்கரர் ஒப்புயர்வற்ற குருதான். சந்தேகமே இல்லை.

மகாகவி பாரதியாரைப் படித்தால் போதுமே. எல்லாத் தெய்வங்களும் ஒன்று தான் என்ற அறிவுபூர்வமான உணர்வு வந்துவிடுமே. விடுதலை என்ற சொல்லை அவர் நாட்டு விடுதலைக்கு மட்டும் பயன்படுத்தவில்லை. ஆன்மீக விடுதலைக்கும் சேர்த்துத் தான் சொன்னார் என்று தோன்றுகிறது.

எட்டிகுடி முருகன் சந்நிதியில் நிற்கும் போது, 'முருகா! முருகா! முருகா! என்ற பாடல் நினைவுக்கு வந்ததால் தோன்றிய எண்ணங்கள் இவை.

திருவாசியுடன் ஒரே கல்லில் செதுக்கப்பட்ட அரிய கலை வடிவமான முருகப்பெருமான். மயிலின் கால்கள் முருகனின் கனத்தைத் தாங்குகின்றன. இது இந்திர மயில். இந்திரனே வாகனமாகி முருகனைத் தாங்குவதாக ஐதீகம்.

ஆறு முகங்களுக்கும் உள்ள கிரீடங்கள் மேலே உயர்ந்து சிகரமாகத் தெரிவது மேருவைப் போல நம் கண்களுக்குத் தோன்றுகிறது. பன்னிரு கரங்களும் தனித் தனியாகத் தெரிகின்றன. முருகப்பெருமானின் அருட்கோலத்தை வியக்கும்போதே சிற்பியின் கைவண்ணத்தையும் வியக்கிறோம். "முடியா மறையின் முடிவு" இவர்தான் என்று மனம் ஆமோதிக்கிறது.

இந்தத் தலமே ஸோமாஸ்கந்த வடிவமாக இருப்பதாகச் சொல்கிறார்கள். ஒரு பக்கம் சவுந்தரேசர் என்ற பெயருடைய சிவபெருமான் வீற்றிருக்கிறார். இன்னொரு பக்கம் ஆனந்தவல்லி என்ற பெயரோடு சகல உயிர்களையும் ஆனந்தத்தை அனுபவிக்கச் செய்கின்ற அன்னையாக அன்பு வடிவமாக நிற்கிறாள் உமாதேவி.

முருகனே மங்கள வடிவம். இச்சாசக்தியான வள்ளியுடனும், கிரியா சக்தியான தெய்வயானையுடனும் சேர்ந்து ஞானசக்தியாக விளங்கும் தெய்வம். முருகன் கையில் உள்ள வேல் ஞானத்தின் வடிவம் என்று கூறுகிறார்கள். முருகப் பெருமானின் வேலின் அடி முதல் நுனி வரை தரிசித்த பிறகு முருகனின் திருமுக மண்டலத்தைப் பார்க்க வேண்டுமாம்.

"சுற்றி நில்லாதே போ பகையே
துள்ளி வருகுது வேல்!"

எட்டிகுடி என்ற பெயருக்கு இரண்டு மூன்று விளக்கங்கள் தருகிறார்கள். ஒரு காலத்தில் எட்டி மரங்கள் நிறைந்த காடாக இருந்ததாம். எட்டிக்காய்க்கு காஞ்சிரங்காய் என்ற பெயர் உண்டு.

"அன்பர்கள் வாழ்வே! காஞ்சிரங்குடி ஆறுமுகத்தெம் பெருமானே" என்று அருணகிரிநாதர் பாடியிருப்பதால் எட்டிதான் தலவிருட்சமாக இருந்திருக்கிறது. இப்போது வன்னி மரம் என்று சொல்கிறார்கள்.

"சோமலெ" எழுதிய புத்தகத்தில் பெருஞ்செல்வம் சேர்த்தவர்களை "எட்டி" என்ற பட்டம் கொடுத்து அரசர்கள் கௌரவிப்பதுண்டு என்றும், அப்படி "எட்டி" என்ற செல்வர்கள் வாழ்ந்த ஊர் எட்டிகுடி ஆயிற்று என்றும் கூறுகிறார். செல்வன் குடிகொண்ட ஊர் அல்லவா? செல்வம் கொழிக்கக் கேட்பானேன்?

இன்னும் "இஷ்டி குடி" என்பது எட்டு

குடியாயிற்று என்றும், இந்திர மயில் முருகனோடு வானில் எழுந்த போது, "எட்டிப் பிடி" என்று எல்லாரும் கூவியதால் எட்டி குடி என்று மருவியதென்றும் தலவரலாறில் எழுதியிருக்கிறார்கள்.

வயல்கள் சூழ்ந்த, நீர்வளம் நிறைந்த இடம். குளத்தின் பெயர் சரவணப் பொய்கை. மிகப் பெரிய பொய்கைதான். கந்தன் வளைவு என்ற வாயில் வழியாக பெரிய மண்டபத்தை அடைகிறோம். பிராகாரத்தை அடைந்தால் முக்கியமாகத் தரிசனம் செய்ய வேண்டியது சித்தி விநாயகர் சந்நிதி. அதை அடுத்து ஒரு வன்னி மரம் இருக்கிறது. இங்கே வான்மீகா என்ற சித்தர் சமாதி அடைந்தார் என்பது வரலாறு. எட்டி மரக்காட்டில் பல ஆண்டுகள் தவம் செய்து மலைமகளை ஆனந்தவல்லியாகக் கண்டு ஆனந்தித்தாராம். அது மட்டுமல்ல. பார்வதி தேவிக்கே கேதாரீச்வர விரதத்தின் உயர்வையும், அதைச் செய்வதற்குரிய நியமங்களையும் எடுத்துச் சொன்னாராம். வான்மீக சித்தரின் சொற்படி தேவி விரதமிருந்து பேறு பெற்றதாகவும் தலவரலாறு கூறுகிறது.

ஆனந்தவல்லி அம்மையின் கருவறை வன்மீக சித்தரின் சமாதியை நோக்கித் திரும்பி இருக்கிறது. எப்போதும் சித்தர் அம்மையைத் தரிசித்துக் கொண்டே இருக்கிறார்.

முருகப்பெருமானை குறிஞ்சி நிலக் கடவுளாகவும், குன்றுதோறாடுபவனாகவும் வழிபடுவது வழக்கமாக இருந்தாலும் மற்ற நிலத்து மக்கள் அவர் அருளைப் பெற ஆசைப்படமாட்டார்களா என்ன? மலை ஏறுபவர்கள் தான் காவடி எடுக்க வேண்டுமா? இந்த ஊரில் காவடிச் சிறப்பைப் பற்றிச் சொல்லி முடியாது.

பால்காவடி, பன்னீர் காவடி, சந்தனக் காவடி, புஷ்பக் காவடி, பஞ்சாமிர்தக் காவடி, இளநீர்க் காவடி, சர்க்கரைக் காவடி, விபூதிக் காவடி என்று விதவிதமான காவடிகளைச் சுமந்து கொண்டு வந்து திருவிழாக் காலங்களில் அமர்க்களப்படுத்தி விடுகிறார்கள் முருகன் அடியார்கள். இன்னும் அலகு குத்திக் கொள்ளுதல் முதலியவையும் உண்டு. கிருத்திகை ரொம்ப விசேஷம். முருகப் பெருமான் வீதி உலாவருவார், சித்ரா பௌர்ணமி விமரிசை கண்கொள்ளாக்காட்சியாக இருக்குமாம். காவடிகள் ஆயிரக்கணக்காகச் சுமந்து வருவார்களாம். நாள் முழுவதும் இரவு முழுவதும் பால் அபிஷேகம் செய்து கொண்டே இருப்பார்களாம். நிஜமாகவே பாலாறு ஓடுமாம். வைகாசி விசாகம் ஐப்பசி கந்தசஷ்டி விழாக்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

குழந்தை வரம் நல்கும் குமரன். சேவல் வாங்கி கோவிலுக்குக் கொடுத்தும், மணி கட்டியும், சஷ்டி விரதமிருந்தும் குழந்தைக்காகப் பிரார்த்தனை செய்து கொள்கிறார்கள்.

எட்டிகுடி வேலவனுக்குச் செய்யும் அர்த்தஜாம பூஜை மிகவும் சிறப்பானது. வால்மீகி சித்தர் மனித வடிவில் வருகிறார் என்று நம்புகிறார்கள். அதுவும் கிருத்திகையன்று அர்த்தஜாம பூஜையைக் காணக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். சித்தர்களுடன் சேர்ந்து நின்று சேயோனைச் சேவிப்பது எவ்வளவு பெரிய பேறு!

எட்டிகுடிக்குப் பல இலக்கியங்களும் உண்டு. அருணகிரிநாதர் நான்கு திருப்புகழ்களால் பாடிச் சிறப்பித்திருக்கிறார். முருகன் தமிழ்க் கடவுளாயிற்றே. இங்கே அகத்திய முனிவரும் வழிபட்டாராம்.

"பரிவுற நவருக் கருள் வைத் தருள் வித்
தகமுத் தமிழைப் பகர்வோனே!" என்று தமிழ் பேசும் தெய்வமாகக் கொண்டாடுகிறார்.

மூலஸ்தானத்து முருகப் பெருமானைப் பணிந்து விட்டு அதே வடிவத்தில் உள்ள உற்சவரைப் பணிகிறோம். நாதத்துடன் ஒலிக்கும் மணிகளின் ஓசையும், ஓம் ஓம் என்று ஒலிக்கும் மந்திரங்களின் ஓசையும், ஜாம் ஜாம் என்று முழங்கும் வாத்யங்களின் ஓசையும் நம்மை நாதவெள்ளத்தில் மூழ்கடிக்கின்றன.

உற்சவருக்கு அடுக்கு தீபத்தை ஏந்தி அலங்காரமாகத் தீபாராதனை செய்கிறார்கள்.

*பனிப்பகை மயிலும் சேவற்பதாகையும்*
*பன்னிரண்டு மணிக்குழைகளுமாக*
*பெருமான் ஜொலிக்கிறான்.*
*புன்னகை தன்னால்*
*இன்னல்கள் தீர்ப்பான்*
*புன்மை இருள் கணம் மாய்ப்பான்*
*கன்னலின் இனிய தண் தமிழ்*
*அளிப்பான்*

என்ற அமரர் கல்கியின் பாடல் வரிகள் நினைவுக்கு வருகின்றன. பொன்மயில் முருகனை வணங்கி, பிரியாவிடை பெற வேண்டியிருக்கிறது!

படங்கள் : ஸ்ரீஹரி

---

**"அமைச்சருக்கு நூறு சவுக்கடி தண்டனை ஏன்...?"**

**"மகாராணியார் மன்னரை ஏப்ரல் ஃபூல் செய்யும்பொழுது, வாய்விட்டுச் சிரித்தாராம்!"**

**— ராஜி**








2000 ஏப்ரல் 2
பிரமாதி பங்குனி 20
மலர் : 58
இதழ் : 36

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## குருட்டு வெறியில் கவிழ்ப்பு நாடகம்!

பாண்டிச்சேரியில் ஆட்சி மாற்றம் நிகழ்த்தியாயிற்று. தேர்தலில் நிற்க டிக்கெட் தரப்படாத காங்கிரஸ் தலைவர் சண்முகம், இன்று பாண்டி முதல்வர்! அவருக்கு 'இடம் செய்து' கொடுப்பதற்காக காரைக்கால் எம்.எல்.ஏ. கமலக்கண்ணன் பதவி விலக முன்வந்துள்ளார்! கமலக்கண்ணனின் எம்.எல்.ஏ. பதவியை சண்முகம் எடுத்து அணிந்து கொள்ள முடியாது! 'அவசரப்பட வேண்டாம்' என்று கமலக்கண்ணனுக்கு அறிவுரை கூறியிருக்கும் சண்முகம், ஆறு மாத காலத்துக்குள் தேர்தலில் எம்.எல்.ஏவாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அப்படியே ஜெயித்து வந்தாலும் ஒரு வருட காலம்தான் அவர் பதவிவகிக்கலாம். அதன் பிறகு தமிழ்நாடு - பாண்டிச்சேரி சட்டசபைத் தேர்தல்கள் நடந்தாக வேண்டும்.

நிலைமை இவ்வாறு இருக்கையில், புதுவை அரசுக்கு த.மா.கா. ஆதரவை விலக்கிக் கொண்டதுமல்லாமல் அ.தி.மு.க., காங்கிரஸுடன் சேர்ந்து கொண்டு ஆட்சி மாற்றத்துக்கான நெருக்கடியை ஏன் ஏற்படுத்த வேண்டும்?

புதுவை அரசாங்கம் கண்டிக்கத்தக்க வகையில் நடந்ததாகவோ, ஊழல்




புரிந்ததாகவோ, ஆதரவை விலக்கும் அளவுக்குக் கொள்கையில் பின்வாங்கியதாகவோ சொல்ல முடியாது. தி.மு.க., மத்தியில் பா.ஜ.கவுக்கு ஆதரவுக் கட்சியாக இருக்கிறது என்பது மட்டுமே த.மா.காவின் ஆட்சேபணை. ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப் பட்டு ஆட்சியிலிருக்கும் மாநில அரசை மெனக்கெட்டு கவிழ்ப்பதற்கு இது ஒரு வலுவான காரணம் அன்று.

பிப்ரவரியில் நடந்த இடைத்தேர்தலில் த.மா.கா. - அ.தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணி தோல்வியைத் தழுவி விட்டது. அடுத்து வரவிருக்கும் சட்டமன்றத் தேர்தலுக்கு முன்பாக ஏதாவது ஒரு வெற்றியை மக்கள் முன்வைத்தாக வேண்டும் என்ற குருட்டு வெறியில் நிகழ்த்தியிருப்பதுதான் பாண்டிச்சேரி கவிழ்ப்பு நாடகம்!

காங்கிரஸ், அ.தி.மு.க., த.மா.கா. ஆகிய மூன்று கட்சிகளுமே இதைப் பெரிய வெற்றியாகக் கொண்டாடுகின்றன. ஆனால் மூன்று கட்சிகளுக்குமே இந்த வெற்றியில் எந்தப் பெருமையும் கிடையாது.

முதல்வர் பதவிக்கான நபரைத் தேர்ந்தெடுப்பதற்குள் காங்கிரஸ் உறுப்பினர்களி டையே அடிதடி, கைகலப்பு எல்லாம் நடந்துள்ளன.

புதுவை த.மா.கா. எம்.எல்.ஏக்களிடையே பிளவு ஏற்படாமலிருக்க, அக்கட்சியைச் சேர்ந்த மூத்த தலைவர் அழகிரி பாண்டிச்சேரி சென்று 'காவல் காக்க' வேண்டியிருந் திருக்கிறது.

பிறிதொரு ஆதரவுக் கட்சியான அ.தி.மு.கவோ மூன்று இடங்களே பெற்றுள்ளது. எனவே த.மா.காவைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறது.




அதுவுமில்லாமல், சுயேட்சை எம்.எல்.ஏ. ஒருவரின் ஆதரவுடன்தான் காங்கிரஸ் பெரும்பான்மையை எய்த முடிந்திருக்கிறது.

தங்களுக்குள்ளேயே தகராறுகளும் முரண்பாடுகளும் நிரம்பியிருக்கும் அரைவேக்காடு நிலையிலுள்ள கட்சிகள் சேர்ந்து ஆட்சி அமைக்க முற்பட்டிருப்பது கொடூரமான அரசியல் ஜோக்.

தமிழகத்திலும் பாண்டிச்சேரியிலும் மக்கள் வாக்களித்துத் தேர்ந்தெடுத்தது தி.மு.க. - த.மா.கா. கூட்டணியைத்தான்.

தி.மு.க., மத்தியில் பா.ஜ.கவை ஆதரித்தது என்பதற்காக மாநிலத்தில் அதனுடன் தொடர்பைத் துண்டித்துக் கொண்டிருக்கும் த.மா.கா., வாக்காளர்களுக்கு மாபெரும் துரோகம் இழைத்திருக்கிறது. போதாததற்கு அ.தி.மு.க.வுடனும் காங்கிரசுடனும் சேர்ந்து புதுவையில் நடத்தியிருக்கும் கூத்து, ஜனநாயகத்துக்கே இழைக்கப்பட்டுள்ள அநீதி.

இந்தக் கேவலத்தினால் அம்மூன்று கட்சிக் கூட்டணியின் இமேஜ் தமிழக வாக்காளர்களிடையே உயர்வதற்குப் பதிலாகத் தாழ்ந்துதான் போகும்.

இத்தனை நடந்த பிறகும் ஏச்சுப் பேச்சுகளில் இறங்காமல் புதிய புதுவை அரசை வாழ்த்தியுள்ள தமிழக முதல்வர்தான் நல்ல பெயர் தட்டிக் கொண்டு போகிறார்.

கணிதரீதியாக பலத்தை நிரூபிப்பது மட்டுமே ஜனநாயகம் அல்ல; கொள்கை அடிப்படையில் மக்கள் ஆதரவைப் பெற்று, அவர்களது மெய்யான பிரதிநிதிகளாக இயங்குவதே உண்மையான ஜனநாயகம் என்பதை மூப்பனார் விரைவில் உணர்வார். ○



• பதவியேற்பு விழாவில் சண்முகம்

"அன்னை சோனியா காந்தி, தலைவர் மூப்பனாரின் முழு ஆதரவும் எனக்கிருக்கிறது'' என்று சொல்லி, முதல் கோப்பில் கையெழுத்திட்டார், புதுவையின் பதிமூன்றாவது முதல்வராகப் பொறுப்பேற்ற பி. சண்முகம்.

1965ம் வருடத்திலேயே வெங்கடசுப்பா ரெட்டியார் அமைச்சரவையில், பொறுப்பு வகித்தவர் சண்முகம். கிட்டத்தட்ட முப்பது வருடங்களாக மாநில காங்கிரஸ் தலைவராகவும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆளும் கட்சி, தோழமைக் கட்சி, எதிர்க்கட்சி என்று எந்தக் கட்சியினரைக் கேட்டாலும், ''ரொம்ப சீனியர் தலைவருங்க. அவருக்கு முன்பே இது கிடைத்திருக்க வேண்டும்'' என்று வாய்நிறைய சொல்கிறார்கள். ஆனால் அடுத்த ஆண்டு சட்டமன்றத்திற்குப் பொதுத் தேர்தல் வரும் நிலையில், சண்முகம் தலைமையிலுள்ள அமைச்சரவை அதுவரை காலம் தள்ளுமா என்று கேட்டால், 'நிச்சயமாக' என்று சொல்லத்தான் மிகவும் தயங்குகிறார்கள். அப்படிப்பட்டதுதான் பாண்டி அரசியல்!

# பரபரப்பூட்டும்

பாண்டி அரசியல், கணிசமான மக்கள் ஆதரவு பெற்ற கண்ணனின் பங்கு குறிப்பிடத்தக்கது. 'தமிழ்நாட்டில் அ.இ.அ.தி.மு.க.வை, எதிர்த்து கட்சி துவங்கி, இப்போது அந்தக் கட்சியுடன் கூட்டணி அமைத்து த.மா.கா., ஒரு முழு வட்டம் வந்திருப்பதைப் போன்ற அதே நிலைதான் கண்ணனுக்கும். மாநில காங்கிரஸ் தலைவரான சண்முகத்துக்கும் காங்கிரஸில் இருந்த கண்ணனுக்கும் எப்போதும் கருத்து வேறுபாடுதான். உச்சகட்டமாக, 1991 தேர்தலில் கண்ணனின் தொகுதியான காசுக் கடை சண்முகத்துக்கு ஒதுக்கப்பட, கண்ணன் பாகூர் தயவில் லால்பேட்டைக்கு ஓட வேண்டியதாகி விட்டது. லால்பேட்டையில் கண்ணன் வெற்றி பெற்று சபாநாயகரானார். சண்முகம் காசுக் கடையில் தோற்றார். இது கண்ணனின் 'உள்' வேலை என்று குற்றம்சாட்டினார் சண்முகம்.

1996ல் சண்முகத்தை எதிர்த்து மாநில அளவில், 'கண்ணன் தனிக் காங்கிரஸை' நடத்த முழு முயற்சியும் எடுத்தார். இருபதாயிரம் பேரைக் கொண்ட பெரிய ஊர்வலத்தை நடத்திக் காட்டினார். ஆனால் சிறிது காலத்தில் தமிழ்நாட்டில் த.மா.கா., துவங்கப்பட, பாண்டியைப் பொறுத்தமட்டில் த.மா.கா. தலைவராக கண்ணன் இயல்பாகவே வந்து விட்டார்.

இப்போது உள்துறை அமைச்சராக மீண்டும்

• கண்ணன்



• வைத்தியலிங்கம்



# 'பாண்டி' ஆட்டம்!

சண்முகத்தோடு இணைந்து பணியாற்ற வேண்டிய நிலை. சென்ற பாராளுமன்றத் தேர்தலுக்கு முன்பே அமைச்சரவையில் இருந்து ராஜினாமா செய்து விட்டாலும் ஆதரவை வாபஸ் பெற்று காங்கிரஸுடன் இணைந்து அமைச்சரவை அமைக்க இவ்வளவு காலதாமதம் ஏன்?

'கண்ணன் தன்னை முதல்வராக்க வேண்டுமென்று பிடிவாதம் பிடித்ததால்தான்' என்று சொல்கிறார்கள்.

• புதிய முதல்வருடன் காங் - தமாகாவினர்

இதுபற்றி கண்ணனிடம் கேட்டபோது, "எனக்கு எந்தப் பதவி மீதும் ஆசை கிடையாது" என்று மறுத்தார். பின் காங்கிரஸோடு இணைந்து செயல்பட ஏன் இவ்வளவு தாமதம்?

"தலைவர் மூப்பனார் எடுக்கும் முடிவுக்கு நாங்கள் எல்லோரும் கட்டுப்படுவோம். சில முடிவுகள் எடுக்கும்போது கருத்து மாறுபாடுகள் வரலாம். ஆனால் கடைசியில் தலைவர் அவர்களின் முடிவை ஏற்றுச் செயல்படுவோம். இப்போது பாண்டியில் நடந்து கொண்டிருக்கும் அரசியல் மாற்றங்கள் தலைவர் மூப்பனார் எடுத்த முடிவின்படிதான் நடந்து கொண்டிருக்கின்றன" என்கிறார் கண்ணன்.

"உங்கள் 'அன்பான' எதிரியான சண்முகம் அவர்களோடு இணைந்து செயல்படும் வாய்ப்பு மீண்டும் வந்திருக்கிறதே" என்று கேட்டபோது, "எனக்கு எதிரியே கிடையாது. சிலரிடம் கருத்து வேறுபாடு இருக்கலாம்."

சண்முகம் தலைமையிலுள்ள அமைச்சரவையில் சேர மிகவும் தயங்கிய கண்ணனை த.மா.கா. தலைமை ரொம்பவே பேசிச் சமாளிக்க வேண்டியிருந்ததாம்.

"நீண்ட கால அனுபவம் பெற்ற சண்முகம் அவர்கள் முதல்வராகப் பொறுப்பேற்றதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. அவருடைய தகுதிக்கு முன்பே கிடைத்திருக்க வேண்டும்" என்று சண்முகத்தைப் புகழ்ந்தார் கண்ணன்!

'தி.மு.க.வுடன் ஒன்றாகப் பயணம் புறப்பட்டோம். இடையில் எங்களை விட்டு விட்டு தி.மு.க. பா.ஜ.கவுடன் போய் விட்டது. எனவேதான் இந்த ஏற்பாடு செய்ய வேண்டியதாகிவிட்டது' என்றும் சொன்னார்.

**பா**ண்டிச்சேரியில் மற்றொரு முக்கிய 'ஆட்டக்காரர்', ஐந்து வருட காலம் முதல்வராக இருந்த வைத்தியலிங்கம். இந்த ஆட்சி மாற்றத்தில் தனக்கு மீண்டும் வாய்ப்புக் கிடைக்கும் என்று எதிர்பார்த்து, காத்து நின்றார் அவர். ஆனால் த.மா.கா. சட்டமன்ற உறுப்பினர் கந்தசாமிக்கு ஒன்பது லட்சம் ரூபாய் லஞ்சம் கொடுத்த வழக்கில் சி.பி.ஐயால் குற்றம்சாட்டப்பட்டிருப்பதால் பதவி கைநழுவிப் போயிற்று.

காங்கிரஸ் தலைமை முன்னாள் அமைச்சர் ரங்கசாமியை முதல்வராக்க விருப்பப்பட, மற்ற தலைவர்கள் விழித்துக் கொண்டார்கள். ரங்கசாமி மிகவும் எளிமையான, அப்பழுக்குச் சொல்ல முடியாத மனிதர். ஆனால் கண்ணன் அளவுக்கோ, அல்லது வைத்தியலிங்கம் அளவுக்கோ, பாப்புலாரிடி இல்லாதவர். வைத்தியலிங்கத்துக்கு கிடைக்கக் கூடாதென்று த.மா.காவினர் ரங்கசாமியை ஆதரிக்க, "நான் ஸீனியர். நானிருக்க ரங்கசாமிக்கு எப்படி?" என்று வைத்தியலிங்கம் எதிர்விளையாட்டு ஆட, பொதுவான கேண்டிடேட்டாக சண்முகம் முதல்வராக வந்து விட்டார்.

"ரங்கசாமியைத்தான் முதல்வராக்க வேண்டும் என்று மேலிடம் விரும்பியது என்பது சரியல்ல; அது மீடியாவின் யூகம்" என்று நம்மிடம் சொன்னார் வைத்தியலிங்கம்.



• ரங்கசாமி



• ஜெயகுமார்

"த.மா.காவுடன் சேர்ந்து ஆட்சியமைக்க வேண்டுமென்பது காங்கிரஸின் முடிவு என்று சொல்ல முடியாது; அது ஒரு கூட்டு முடிவு. மூத்த தலைவரான சண்முகம் முதல்வர் பதவிக்கு முற்றிலும் பொருத்தமானவர். எந்தப் பிரச்னையும் இருக்காது" என்று சொன்னார் வைத்தியலிங்கம். இவரையும் பிடித்து அமைச்சரவையில் போட சண்முகம் விரும்புகிறார்.

"த.மா.கா. விலகினாலும் எனது அரசு ஐந்து வருட காலம் நீடிக்கும்" என்று உறுதிபடச் சொன்ன ஜானகிராமன், சென்னையில் கலைஞரைச் சந்தித்துப் பேசியபின் ராஜினாமா செய்தது, காங்கிரஸ் - த.மா.கா. தரப்புக்கே கொஞ்சம் ஆச்சரியமான செய்திதான்! எப்படியும் சட்டசபையில் பலத்தை சோதனை செய்து பார்ப்பார் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். த.மா.கா. - காங்கிரஸ், அ.இ.அ.தி.மு.க. ஆகிய கட்சிகளிலிருந்து நான்கு பேர் தமது அணிக்கு வருவார்கள் என்று நம்பிக் கொண்டிருந்தாராம் ஜானகிராமன்.

"நாங்கள் குதிரை வியாபாரத்தில் ஈடுபட விரும்பவில்லை. தலைவர் கலைஞர் நல்ல அரசியல் மரபுகளுக்குச் சொந்தக்காரர். அரசு மைனாரிட்டி ஆனதும் உடனடியாக ராஜினாமா செய்யச் சொல்லி விட்டார்" என்று நம்மிடம் சொன்னார் ஜானகிராமன்.

"அடுத்த சட்டமன்ற பொதுத் தேர்தல் வரை இந்த அரசு நீடிக்குமா?"

"போகப் போகத் தெரியும். சட்டமன்றத்தில் மைனாரிட்டி ஆகிவிட்டால் உடனே கீழே இறங்கி ஆகணும்" என்றார் அவர்.

நான்கு வருட காலத்தில் ஜானகிராமன் தலைமையில் இந்த அரசு பாண்டிக்குப் பல நல்வாழ்வுத் திட்டங்கள் அமுல்படுத்தியிருப்பதாகப் பெருமைப்படுகிறார்கள் தி.மு.கவினர்.

"92 கோயில்களுக்கு கும்பாபிஷேகம் நடத்தியிருக்கிறார். பொறுப்பில் இருந்த கடைசி நாளின் போது கூட 153 பேருக்கு முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து உதவிகள் செய்தார்" என்று நாம் சந்தித்த தொழிலதிபர் ஒருவர் சொன்னார்.

அ.இ.அ.தி.மு.க. - வலது கம்யூனிஸ்ட் போன்ற கட்சிகளின் ஆதரவில் மெஜாரிட்டி அரசை அமைத்திருக்கிறார் சண்முகம். காங்கிரஸூம், த.மா.காவும் தோழமைக் கட்சிக்காரர்களைப் பற்றிக் கவலைப்படுவதை விட தங்கள் கட்சி சட்டமன்ற உறுப்பினர்களைப் பற்றித்தான் மிகவும் கவலைப்பட வேண்டும். ஜானகிராமன் அமைச்சரவையில் த.மா.கா. சார்பில் அமைச்சராக இருந்தவர் தேனி ஜெயகுமார். ஜானகிராமன் ஆதரவாளராக மாறிவிடுவார் என்று கிசுகிசுக்கப்பட்டவர்.

"ஸார்... எனக்கு மீண்டும் அமைச்சர் பதவி கிடைக்குமோ கிடைக்காதோ அது தெரியாது. ஆனால் நான் கடைசி வரை மூப்பனாரின் தொண்டனாக இருப்பேன்" என்று முதல்வர் பதவியேற்ற நிகழ்ச்சியில் சந்தித்தபோது நம்மிடம் சொன்னார் தேனி ஜெயகுமார்.

காங்கிரஸ் மேலிடத்தால் முதல்வர் பதவிக்கு சிபாரிசு செய்யப்பட்டதாகச் சொல்லப்படும் ரங்கசாமி பத்திரிகையாளர்களைக் கண்டாலே கி.மீ. தூரம் ஓடி விடுவார் போலிருக்கிறது.

"ஒரு பத்து நாள் பேசாமல் இருக்கலாமே" (அதாவது சண்முகம் அமைச்சரவையை விரிவுபடுத்தும் வரை) என்கிறார் ரங்கசாமி.

இப்படிப்பட்ட ஆட்டக்காரர்களுடன் இருக்கும் அரசியல்தளமான பாண்டியில் அனுபவம் மிக்கவரான சண்முகம் எப்படிச் சமாளிக்கப் போகிறார்?

பொதுவாகவே எந்தத் தேர்தலிலும் ஆளும் கட்சியினருக்கு எதிரான மனோபாவம்தான் அதிகம் பிரதிபலிக்கும். இந்த நிலையில், அடுத்த ஆண்டு வரும் சட்டமன்ற பொதுத் தேர்தலில் தீர்ப்பு எப்படி இருக்கும்?

"எதுக்கு ஸார் பொதுத் தேர்தல் வரை போகணும்! சட்டசபை உறுப்பினரல்லாத சண்முகம் ஆறு மாத காலத்தில் ஏதாவது ஒரு தொகுதியில் போட்டியிட்டு உறுப்பினராக வேண்டும்; அப்போதே மக்கள் மனோபாவம் மட்டுமல்ல; உட்கட்சி கழுத்தறுப்பு வேலைகளும் தெரிந்து விடுமே" என்கிறார் த.மா.காவைச் சேர்ந்த முக்கியப் பிரமுகர் ஒருவர்.

இது தவிர, சி.பி.ஐ. வழக்கில் குற்றம்சாட்டப்பட்ட வைத்தியலிங்கமும், புகார் சொன்ன கந்தசாமியும் இப்போது ஒரே அணியில் உள்ளதும் சர்ச்சையை உருவாக்கும் என்று தெரிகிறது!

புதுவையிலிருந்து: **ப்ரியன்**

படங்கள் : **வெங்கடேஷ்**

# Indian Institute of Management & Technology

25, Mada Church Road, Mandaveli,
Chennai - 600 028.INDIA Ph : 4956036
Fax : 495 2692. e.mail:icolam@hotmail.com

*in association with*





# ALL INDIA COUNCIL FOR MANAGEMENT STUDIES

No. 29, Lazarus Church Road, R.A. Puram,
Chennai - 600 028. INDIA Phone: 4956833
Fax: 493 3259. e-mail:aiicas@hotmail.com

IIMAT andAICOMAS jointly offers the following **One Year** and **Six Months** Diploma Courses by correspondence

## ONE YEAR DIPLOMA COURSES

* BUSINESS MANAGEMENT
* BUSINESS ADMINISTRATION
* MARKETING MANAGEMENT
* TOTAL QUALITY MGMT. & ISO 9000 / QS 9000
* MATERIALS MANAGEMENT
* EXPORT & IMPORT MGMT.
* HOTEL MANAGEMENT
* CATERING MANAGEMENT
* BANKING & INSURANCE MANAGEMENT
* TRAVEL & TOURISM MGMT.

**Eligibility:** No formal qualification (Open Education System). **For Application and Prospectus send Rs. 10/- Postal stamp** to any one of the above Institute.

## SIX MONTHS DIPLOMA COURSES

* BUSINESS MANAGEMENT
* BUSINESS ADMINISTRATION
* OFFICE ADMINISTRATION
* SALES & MARKETING
* FINANCIAL MANAGEMENT
* INDUSTRIAL RELATIONS & PERSONNEL MGMT.
* HUMAN RESOURCES DEVELOPMENT
* LABOUR LAWS
* EXPORT AND IMPORT MGMT.
* FOREIGN TRADE MGMT.
* MATERIALS MANAGEMENT
* PRODUCTION MANAGEMENT
* FOOD & BEVERAGE MGMT.
* FOOD PRODUCTION MGMT.
* COMPUTERS IN OFFICE MGMT.
* COMPUTER APPLICATION
* HOTEL MANAGEMENT
* BANKING MANAGEMENT
* QUALITY CONTROL & ISO 9000
* ENVIRONMENTAL MANAGEMENT SYSTEM & ISO 14000/14001
* ADVERTISING & PUBLIC RELATIONS
* INTERNATIONAL BUSINESS MGMT.
* BUSINESS INFORMATION SYSTEM
* MANAGEMENT INFORMATION SYSTEM
* HEALTH & HOSPITAL MANAGEMENT
* TEACHER TRAINING EDUCATION
* EDUCATIONAL MANAGEMENT
* RESEARCH & DEVELOPMENT
* TOTAL QUALITY MGMT. & ISO 9000
* NETWORKING & INTERNET APPLICATION
* QUALITY ASSURANCE & QS 9000/ISO 9000
* SOFTWARE CAPABILITY MATURITY MODEL (guidelines for improving software process)
* INTERNATIONAL AIRLINES MANAGEMENT (Affiliated/Recognised by Westwind Aviation Academy, Arizona, USA)

# வார்த்தையில் மெல்லிய கனிவு!

"சுற்றுச்சூழல் பாதுகாப்பு குறித்து, கிளிண்டன் ஆக்ராவில் நிகழ்த்தும் சிறப்புரையைக் கேட்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட மிகச் சிலரில் நீங்களும் ஒருவர். உங்களை அழைப்பதில் பில் கிளிண்டன் மகிழ்ச்சியடைகிறார்."

இந்த அழைப்பைக் கண்டதும் எக்ஸ்னோரா அலுவலகமே ஆனந் தக்கூத்தாடியது. "நம் நிர்மலுக்கு இப்படியொரு பெருமையா?"

"அவர்கள் அப்படி நினைத்து என்னைப் பாராட்டினாலும் அந்த அழைப்பைப் பார்த்ததும் எக்ஸ்னோராவின் சுற்றுச் சூழல் சேவை அமெரிக்கா வரை பரவியிருக்கிறதே என்ற பெருமைதான் எனக்கு ஏற் பட்டது" என்கிறார் நிர்மல்.

போக வர விமானச் செலவு, ஹோட்டலில் தங்கும் செலவு எல்லா வற்றையும் விழா அமைப்பாளர்களே ஏற்றுக்கொண்டு நிர்மலுக்கு தடபுடல் வரவேற்பு தந்து அசத்தி விட்டார்கள்.

"தாஜ்மஹாலுக்குப் பக்கத்தில் 'தாஜ்கேமா' என்றொரு ஹோட்டல். அங் கேதான் கிளிண்டன் உரையாற்றினார். மொத்தம் எண்பது பேர் இருந்திருப் பார்கள். அவர்களில் பெரும்பாலோர் உ.பி. மாநில அரசின் உயர் அதி காரிகள். உ.பி. முதல்வர் தம் சுற்றம் நட்போடு வந்திருந்தார். தனிப்பட்ட முறையில் கிளிண்டன் அழைத்தவர்கள் என்று பார்த்தால் எட்டு பேர் தேறும். அதில் நானும் ஒருவன் என்பது எக்ஸ்னோராவுக்குப் பெருமை" என்கிறார் நிர்மல்.

"கிளிண்டனுக்கு உங்களைத் தனியாக அறிமுகப்படுத்தி வைத்தார்களா?"

"உண்மையிலேயே பெருமைக்குரிய தருணம் அது. 'இந்தியாவில் பண மில்லாமல் போனாலும் மக்கள் சக்தி ஏராளம். அந்த மக்கள் சக்தியை மிகப் பயனுள்ள வகையில் ஒருங்கிணைத்து, சுற்றுச் சூழல் பாதுகாப்பதில், குப்பை அகற்றுவதில், தெருக்கள் பராமரிப்பில் அந்தச் சக்தியை அற் புதமாகப் பயன்படுத்தி வரும் மனிதர் இவர்' என்று என்னைப் பற்றி அமெரிக்க அதிகாரி ஒருவர் அறிமுகப்படுத்தியதும் நான் கிளிண்டனுடன் கைகுலுக்கினேன். சம்பிரதாயமாக கையைப் பிடித்து விட்டு விடாமல் அவர் என் கையைக் குலுக்கிக் கொண்டே இருந்தார். சில வினாடிகள் எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. 'வெரிகுட்' என்று என்னைப் பாராட் டினார். நான் எக்ஸ்னோரா பணிகளை விளக்கிச் சொன்னேன். மீண்டும் மீண்டும் 'வெரிகுட்'தான்."

அதே ஹோட்டலில் இன்னொரு முறையும் கிளிண்டனைச் சந்



• நிர்மல்

னித்தார் நிர்மல்.

"இரண்டாவது முறை நான் ஒரு கடிதத்தை அமெரிக்க அதிபரிடம் கொடுத்தேன். 'நீங்கள் வடஇந்தியாவுக்கு வந்தது போலத் தமிழ்நாட்டுக்கும் வந்திருக்க வேண்டும். இப்போதைய தமிழக அரசு செயல்படுத்தி வரும் 'சமத்துவபுரம்', உழவர் சந்தை திட்டங்களை நேரில் பார்த்தால் மகிழ்ந்திருப்பீர்கள். (இரண்டு திட்டங்கள் பற்றியும் சுருக்கமாக என் கடிதத்தில் விளக்கியிருந்தேன்.) நாங்கள் எவ்வளவோ செய்து வெற்றி பெற்றிருக்கிறோம். ஆனால் எங்களால் முடியாமல் தோற்றுக் கொண்டே இருக்கும் விவகாரங்கள் மூன்று. அது ஏ.பி.சி. அதாவது அடையார், பக்கிங்ஹாம், கூவம் கால்வாய்கள். இந்தக் கால்வாய்கள் அருகே மனிதன் முகம் சுளிக்காமல் நிற்கும் அளவுக்கு இவற்றை மாற்றிட அமெரிக்கா திட்ட உதவியோ, பண உதவியோ அல்லது வேறெந்த உதவி தந்தாலும் மக்கள் சக்தியை அதற்காகத் திரட்டி முன்நிறுத்துவதில் எக்ஸ்னோரா முழுமூச்சாக ஈடுபடும்' என்று அக் கடிதத்தில் உறுதியாகத் தெரிவித்திருந்தேன். புன்முறுவலோடு அதைக் கிளிண்டன் வாங்கிக்கொண்டார்."

"இவ்வளவு பெருமைக்குரிய தருணத்தை புகைப்படத்தில் பதிவுசெய்து கொள்ளவில்லையா?"

"ஐயோ.... அதை ஏன் கேட்கிறீர்கள்! பயங்கர செக்யூரிடி. பல அடி தூரம் தள்ளி உயரத்தில் பொருத்தப்பட்டிருந்த டீவி காமிராக்கள், சில பத்திரிகைகளின் முன் அனுமதி பெற்றிருந்த காமிராக்களோடு சரி. மற்ற யாரும் நெருங்கக்கூடாது. இருந்தாலும் இரண்டாம் முறை கிளிண்டனைச் சந்தித்தபோது நான் தனியாக ஒரு போட்டோகிராபரை ஏற்பாடு செய்து கொண்டு போயிருந்தேன். அமெரிக்கப் பாதுகாப்பு அதிகாரிகள் அவரை அலேக்காக ஓரம் தள்ளிக்கொண்டு போய் காமிராவை வாங்கிக் கொண்டு 'படம்பிடிக்கக் கூடாது' என்று நாசூக்காக எச்சரித்து, பிறகு காமிராவைத் திருப்பிக் கொடுத்தார்கள். ஒரே ஏமாற்றம் அதுதான்!"

"எப்படிப் பேசினார் அவர்?"

"அவரது சில வார்த்தைப் பிரயோகங்கள், வாக்கிய அமைப்புகள் வியப்பளித்தன.

"தாஜ்மகால் அழகு கெட்டு வருவதைக் குறிப்பிட்ட போது, 'இந்த அற்புத அழகு நினைவுச் சின்னத்துக்கு இப்போது 'மார்பிள் கேன்ஸர்' (சலவைக்கல் புற்றுநோய்) என்று வர்ணித்தார்.

'தாஜ்மஹால் ஒரு காதல் சின்னம்' என்று தனக்குச் சொல்லப்பட்டதை நினைவு கூர்ந்து 'உலகில் எந்த நினைவுச் சின்னத்துக்கும் பின்னணியில் ஏதோ ஒரு காதல் அல்லது அன்பு இருந்தே தீரும். அப்படிப்பட்ட நினைவுச் சின்னங்கள் ஏராளமாக நிறைந்ததுதான் இந்த உலகம். எனவே இந்த உலகமே ஒரு காதல் நினைவுச் சின்னம்தான்; எனவே உலகைப் போற்றிப் பாதுகாத்தால் போதும். அனைத்தையும் பாதுகாத்து விடலாம்' என்ற அவரது வார்த்தைகளில் ஒரு மெல்லிய கவிதையை என்னால் உணர முடிந்தது!"

கிட்டத்தட்ட ஐந்து நிமிடங்கள் தனியாக கிளிண்டனோடு பேசியிருக்கிறார் நிர்மல். பிறகு அமெரிக்க அதிகாரிகள் சிலர் நிர்மலிடம் சொன்னார்களாம் :

"இங்கு சந்தித்த ஒவ்வொருவரையும் எங்கள் பிரஸிடென்டின் மூளை பதிவு செய்து கொண்டு விட்டது என்பதில் சந்தேகம் வேண்டாம். ஏதோ ஒப்புக்குப் பேசி, சிரித்து பிறகு மறந்து விடும் தலைவர் அல்ல அவர். யார் கண்டது? விரைவில் வெள்ளை மாளிகையிலிருந்தே கூட அங்கு வரும்படி உங்களுக்கு அழைப்பு வரலாம். அப்படி வந்தால் வியப்படையாதீர்கள்."

— ராணிமைந்தன்

## தூவானம்

**மாமியாருடனும் மகளுடனும் வந்து ஊர் சுற்றிப் பார்த்துவிட்டுப் போய்விட்டார் கிளின்டன். அவர் வருகையால் இந்தியா அடைந்த ஆதாயங்கள் என்ன என்று மீடியா வல்லுனர்களும் அயலுறவுத் துறை நிபுணர்களும் சலித்துப் பார்த்ததில் நிகர லாபம் உமிகூட இல்லை என்கிறார்கள்!**



**'இந்தோ – பாக் பிரச்னை பற்றி கிளின்டன் சொன்னதில் புதிதாக எதுவுமில்லை. காஷ்மீரில் 45 சீக்கியர்கள் கொலையானதற்காக இங்கே பாகிஸ்தானைக் கண்டித்த கிளின்டன், முஷாரஃபைப் பார்க்கும்போது மறக்காமல் எடுத்துச் சொல்ல வேண்டும் என்று நமது பிரதமர் வலியுறுத்தியிருப்பதுதான் புதிய விஷயம். காஷ்மீர்ப் பிரச்னையில் தலையிட அமெரிக்க சட்டாம்பிள்ளைக்கு மறைமுகமாக அழைப்பு விடுத்தது போலல்லவா ஆகிறது!' என்கிறார்கள் டெல்லி அரசியல் நோக்கர்கள்.**

**இதன் விளைவுகள் பொருளாதார, வணிக நெறிமுறைகளை பாதிக்கும் என்றும் அணு ஆயுதப் பரிசோதனைத் தடை தொடர்பான அமெரிக்க நிர்ப்பந்தங்கள் அதிகரிக்கும் என்றும் எதிர்பார்க்கிறார்கள்.**

**— இந்திரப்ரஸ்தன்**

# அலைபாயும் அனுபவங்கள்!

**தமிழ்ப் புத்தாண்டு எப்போது வரப்போகிறது என்று ஆவலுடன் எதிர்பார்க்க வைத்துவிட்டார் மணிரத்னம். அவரது 'அலைபாயுதே' விக்ரம ஆண்டு ரிலீஸ்! மணிரத்னம் மரபுப்படி, படத்தைப் பற்றிய செய்திகள் பரம ரகசியம். ஆனால் நம் வாசகர்களுக்காக, ஆடி, ஓடி அலை பாய்ந்து சேகரித்தவை இதோ:**

● பாடலே வேண்டாம் என்றுதான், மணிரத்னம் முடிவு செய்திருந்தார். ஊத்துக்காடு வேங்கடசுப்பையரின் பிரபல கர்நாடக இசைப் பாடலான 'அலைபாயுதே கண்ணா'வை மட்டும் ஆங்காங்கே படம் முழுவதும் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டிருந்தார். இறுதியில் அமர்க்களமாக வந்திருக்கும் படம், பாடல்களைச் சேர்த்தால் இன்னும் பிரமாதமாக இருக்கும் என்று ரஹ்மானை வைத்து எட்டுப் பாட்டுகளைச் சேர்த்துவிட்டார்.

● மணியின் பதினாறாவது படமான அலைபாயுதே, ஏ.ஆர். ரஹ்மானுக்கு ஐம்பதாவது படம்!

● ஹீரோ மாதவன் புதுமுகம் என்பதும் டீ.வி பிரபலமான ஸ்வர்ணமால்யா இதில் அறிமுகம் என்பதும் பழைய சேதி. படத்தில் மாதவனுக்கு ஐந்து நண்பர்கள். ஐந்து பேரும் புது முகங்களே என்பதும், இவர்களைத் தவிர, இன்னும் பத்து, பன்னிரண்டு புதுமுகங்கள் அலைபாயப் போகிறார்கள் என்பதும், பாரதிராஜாவின் அந்திமந்தாரைக்குப் பின் சினிமா உலகம் மறந்து போன ஜெயசுதா இதில் மறுபிரவேசம் செய்கிறார் என்பதும் புதுச் சேதிகள்.

● காஷ்மீர் பிரச்னையை வைத்து ரோஜா எடுத்த மணி, இந்தப் படத்தில் இடம் பெறும் பச்சை நிறமே பாடலைப் படம் பிடிக்க அதே காஷ்மீருக்குத்தான் போயிருக்கிறார். (ரோஜா படப்பிடிப்பே, காஷ்மீரில் நடக்கவில்லை; குலுமணாலியில்தான்!) படப்பிடிப்பு நடந்த இடத்திலிருந்து சுமார் ஐம்பது கி.மீ தூரத்தில் கார்கில்.

● எம்.டீ.வி.யின் தொகுப்பாளினியான சோபியா, 'செப்டம்பர் மாதம்' பாடலுக்குக் கலக்கல் டான்ஸ் ஆடியிருக்கிறார்! லண்டனிலிருந்து சென்னை வழியே

சோபியா அந்த மான் வந்து இறங்கிய போது அவருடன் கூடவே வந்தவர் பீடி! பிடிக்கிற பீடி இல்லை; பீடி, சோபியாவின் நாலு கால் தோழர். ஆம்! சோபியா தன் செல்ல நாயுடன்தான் வந்திருந்தார். நாய்க்கு விமானத்தில் தனி டிக்கெட் மட்டுமில்லை; ஓட்டலிலும் தனி அறை. படப்பிடிப்பின் இடையில் 'பீடி' படுத்தியபாடு கொஞ்ச நஞ்சமில்லையாம்!

- இருநூற்றைம்பது பேர் கொண்ட படப்பிடிப்புக் குழு ஆக்ரா போய் இறங்கிய பின், தாஜ் மகாலைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். திருப்தியாக, புதிய கோணம் ஏதும் கிடைக்காததால், தாஜ்மகாலின் பின்புறத்தில், யமுனை நதிப்பகுதியில் அரை நாள் மட்டுமே படப்பிடிப்பை நடத்தி விட்டு, மூட்டை கட்டிவிட்டார்கள். இந்தக் காட்சி, சில விநாடிகளே திரையில் வருமாம். (செலவை யோசியுங்கள்.)

- ராஜஸ்தான், அந்தமான் என எங்கெல்லாம் பாட்டு ஷூட்டிங் நடந்ததோ, அங்கெல்லாம் கொட்டோ கொட்டென்று மழை. ஆனால் கதைப்படி மழை தேவைப்பட்ட ஒரு பாடல் காட்சிக்கென்று பல நாட்கள் காத்திருந்து, கேரளாவில் பருவமழை ஆரம்பித்த பின், கண்ணனூருக்குப் போய்ப் படம் பிடித்திருக்கிறார்கள். அந்தப் பாட்டுதான் ஸ்வர்ணலதா பாடியுள்ள 'எவனோ ஒருவன்'

- 'அலை பாயுதே' தெலுங்கில் 'சகி' என்ற பெயரில் ரிலீஸ் ஆகிறது.

- அலைபாயுதே படத்துக்கென்று பிரத்யேகமாய் ஒரு வெப்சைட் உருவாக்கப்பட்டுள்ளது. www.alaipayuthey.com என்ற அந்த இணையத் தளத்தில் ஷாலினி, மாதவன், படத்தின் ஒளிப்பதிவாளரான பி.சி. ஸ்ரீராம் என்று பலரது பேட்டிகளும், படம் பற்றிய தகவல்களும் இடம் பெற்றுள்ளன. இந்த இணையத் தளத்தைப் பார்த்திருப்பவர்கள் எண்ணிக்கை இதுவரை இரண்டு லட்சம்.

- துருவித் துருவி விசாரித்தாலும் கதை பற்றிக் கிடைத்த (ஒரே) ஒரு வரித் தகவல்: 'சிம்பிள் லவ் ஸ்டோரி!'

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

அட்டையில்: **'அலைபாயுதே' - மாதவன், ஷாலினி**



# வட்டமேஜை

✉ "சாஃப்ட்வேர் சிறப்பிதழ்" மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது. காலத்துக்கேற்றாற்போல் தன்னை மாற்றிக் கொள்ளத் தயங்காத 'கல்கி'க்கு வாழ்த்துக்கள்.
திருச்செங்கோடு,
டி.ஏ.சி. பிரகாஷ்.




✉ ஜெயகாந்தன் டாக்குமென்டரி பற்றிய கட்டுரையில், 'ஒரு கட்டத்திற்கு மேல் எழுதுவதை நிறுத்தியது ஏன்?' என்ற கேள்விக்கு பதிலளிக்காததால்தான் செய்திக்கான தலைப்பில் 'பதிலென்ன ஜே.கே.?' என்று கல்கியே கேட்டு விட்டதோ? பதிலுக்காக வாசகர்களும் காத்திருக்கிறோம்.
சென்னை – 14,
அய்யாறு வாசுதேவன்.

✉ கதாசிரியர்களின் கற்பனைக்கே வேலை வைக்காத அளவுக்கு (அல்லது) சவால் விடும் அளவுக்கு நிஜத்தில் நடந்து விடுகிறது என்பதை 'கிட்நாப்பும் செய்வான் பத்தினி' நிரூபிக்கிறது! (மும்பை மசாலா).
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ வெளியேறும் நாள் வரையில் இத்தகைய இழிந்த நிலையிலான அரசியல் வியாபாரங்கள் தொடர்ந்து கொண்டே தான் இருக்கும்.
ஊத்தங்கரை,
கவி. செங்குட்டுவன்.

# என்? என்?

✉ சதாசிவ ராத்திரியில் அத்தனை நிகழ்வுகளையும் குறிப்பிட்டு, இறுதியில் பாரத ரத்னா எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் ஆனந்தக் கண்ணீர் பற்றிச் சொல்லியிருந்தீர்களே, அதுதான் நெகிழ்வு!
சாத்தியாகுளம்,
க. பாக்யமலர்.

✉ "Men பொருள் மேளா"வில் ஒவ்வொரு manக்குள்ளும் தாய் அல்லது காதலி உருவத்தில் ஒரு பெண் இருந்தது டச்சிங்!
ஆலங்குளம்,
ரா. சாலமோன்.

✉ "பீஹாரில் கழுதை வியாபாரம்" தலையங்கம் வெகு அருமை. இன்றைய பீஹாரில் குடிகொண்டிருக்கும் அறியாமை, கல்லாமை, இல்லாமை எனும் ஆமைகள் அம் மாநிலத்தை விட்டு

✉ பாட்டியின் கூடையில் கி போர்டைப் பார்த்ததும் சற்று வியப்புதான். ஆனால், கூடையில் கம்ப்யூட்டர் பொருட்களைக் கொண்டு போய் விற்கும் காலம் வந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை!
மொரட்டுப்பாளையம்,
க.நா. இராஜேஸ்வரன்.

✉ அடுக்களையே தேவைப்படாத உணவு அயிட்டங்களை அடுக்கிக் கொண்டே தம் அனுபவங்களை விளக்கும் சைதை துரைசாமியின் 'பச்சை' சைவப் பழக்கத்தைப் பின் பற்றியே தீர வேண்டுமென்ற உணர்வு ஏற்பட்டு விட்டது!
கமுகாசலபுரம்,
எஸ்.ஏ. கேசவன்.

✉ தமிழக மக்களின் எதிர்கால நம்பிக்கையைத் தவிடு பொடியாக்கிவிட்ட அவநம்பிக்கை கூடாரத்திலிருந்து தன்னம்பிக்கை பற்றி அழகிரி பேசுவது, நகைப்புக்குரியது. ஊழலையும் மதவாதத்தையும் எதிர்ப்பதாகச் சொல்லியவர்கள், நாடறிந்த ஊழலுக்கு நற்சான்றிதழ் வழங்குவது ஏன்?
நெல்லையப்பபுரம்,
டி. செல்வன்.

ஸ்ரீராமஜெயம்





# ஸ்ரீ சீதாராம திருக்கல்யாண மஹோத்சவம்

## ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் பேயாழ்வார் தேவஸ்தானம்

மைலாப்பூர், சென்னை - 600 004.

ஸ்ரீராம நவமியை முன்னிட்டு இப்பவும் நாளது பிரமாதி வருஷம் பங்குனி மாதம் 29ம் தேதி 11.4.2000 செவ்வாய் கிழமை மாலை 4 மணி அளவில் ஸ்ரீ ஆதிகேசவ பெருமாள் பேயாழ்வார் திருகோவிலில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ ராமபிரானுக்கு சீதாராம திருகல்யாண மஹோத்சவம் மிக சிறப்பாக நடைபெறும்.

திருக்கல்யாண மஹோத்சவம் உபயம் கட்டணம் ரூ. 100/-; போஸ்டல் மூலம் கட்டணம் ரூ. 110/-

*குறிப்பு : ஸ்ரீ சீதாராம திருக்கல்யாண பூஜையில் வைத்த மஞ்சள், குங்குமம், மாங்கல்ய சரடு ஸ்ரீ ராமர் வெள்ளி டாலர் வழங்கப்படும்.*

இங்ஙனம்

ஸ்ரீ ஆதிகேசவ பெருமாள் லட்சார்ச்சனை கமிட்டி
ஸ்ரீ C. ரங்காச்சாரி; ஸ்ரீ T.M. ராஜகோபலன்
ஸ்ரீ S. ஸ்ரீரங்கராஜ பட்டாச்சாரியார்
ஸ்ரீ நாகோஜிராவ்; ஸ்ரீ T. சம்பத்குமார்

ஸ்ரீ ஆதிகேசவ பெருமாள்
லட்சார்ச்சனை கமிட்டி,
5, கேசவ பெருமாள் சன்னதி வீதி,
மைலாப்பூர், சென்னை - 4.

குறிப்பு : M.O. அனுப்பும் பக்தர்கள் எங்களுக்கு கிடைக்கும் M.O. ஸ்லிப்பில் தங்கள் முகவரி எழுதாதவர்களுக்கு பிரசாதம் அனுப்பப்பட மாட்டாது. M.O., D.D. அனுப்பும் பக்தர்கள் ஸ்ரீ ஆதிகேசவபெருமாள் லட்சார்ச்சனை கமிட்டி என்ற பெயரில் பின்வரும் முகவரிக்கு அனுப்பவும். ஸ்ரீ ஆதிகேசவபெருமாள் லட்சார்ச்சனை கமிட்டி, செயலாளர் S. ஸ்ரீரங்கராஜ பட்டாச்சாரியார் நெ. 5, கேசவ பெருமாள் சன்னதி தெரு, மைலாப்பூர், சென்னை - 4.

ஏப்ரல் 16

விக்கிரம ஆண்டை வரவேற்கும்
கலக்கலான 'கலகலா' ஸ்பெஷல்!

கல்கி

இரண்டு புத்தகங்கள்!

மறக்க
விடமாட்டோம்!
- சிறப்புப் பகுதி

காச்மூச்!

ஜிகினா

- சுபா
- சீதா ரவி
- பட்டுக்கோட்டை பிரபாகர்
- பா. ராகவன்
- ஆர். வெங்கடேஷ்
- இந்திரா சௌந்தர்ராஜன்
- பத்மாரவிசங்கர்
- எஸ். சங்கரநாராயணன்
- ரிஷபன்
- அனுராதா ரமணன்

பத்து
எழுத்தாளர்கள்
இணைந்து எழுதும்
காதல் + கலக்கல்
தொடர்!

VIP விருப்பம்

ONE & ONLY

- புதிய பகுதிகள்!

தொடரை கவனமாகப்
படித்து வரும் வாசகர்களுக்கு
ஓர் எளிய போட்டி

+ மெகா பரிசு



# பறவையாக மாறினேன்!

டாக்டர் அம்பேத்கர் உலகளாவிய வரலாறுகளை மிகவும் ஆழ்ந்து பயின்றிருக்கிறார். உதாரணத்துக்கு கிரேக்க வரலாற்றைக் கூறுகிறார்.

ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் போன்ற ஒவ்வொரு நகரமும் ஒவ்வொரு அரசாக இருந்திருக்கிறது. ஒவ்வொரு அரசிலும் citizens, denizens என்று இரண்டு வகை மக்கள் வாழ்ந்தார்கள். Citizens என்பவர்கள் அந்தந்த நகரின் சொந்தக் குடிமக்கள். Denizens என்பவர்கள் அடிமைகளாக வந்தவர்கள்.

ஒவ்வொரு அரசுக்குள்ளும் போர் மூளுகிறபோது வென்றவர்கள், தோற்றவர்களை அடிமைகளாகப் பிடித்துக் கொண்டு வருவார்கள். இப்படிக் கொண்டு வரப்பட்ட அடிமைகளின் எண்ணிக்கை சொந்தக் குடிமக்களின் எண்ணிக்கையை விட அதிகமாகிறபோது ஒரு பிரச்னை எழுந்தது. அதாவது அடிமைகளின் எண்ணிக்கை அதிகமாகி விட்டால் - அவர்கள் பலம் பெற்று விட்டால், அந்த அரசின் சொந்தக்காரர்களின் நிலை என்னாவது என்கிற பிரச்னைதான் அது.

இந்தக் காலகட்டத்தில்தான் அங்கே பிளாட்டோ போன்றோர் தோன்றினார்கள். எண்ணிக்கையில் அதிகமாகிக் கொண்டு வரும் அடிமைகளுக்கு, நகர அரசின் சொந்தக்காரர்கள் அடிமைகளாகி விடாமல் இருக்க வேண்டுமானால், அடிமைகள் எப்போதும் அடிமைகளாகவே வைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கருதினார்கள். அதற்கு மூன்று விஷயங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றார் பிளாட்டோ.

அடிமைகளிடமிருந்து கல்வியைப் பறித்து விட வேண்டும். அவர்களிடமுள்ள தோள் ஆற்றலை - வீரத்தைப் பறித்துவிட வேண்டும். பொருளாதாரத்தையும் பறித்து விட வேண்டும்.

இந்த மூன்றும் ஒருவனிடம் இருக்குமானால் அவன் அடிமையாக இருக்க மாட்டான். எனவே, இந்த மூன்றையும் பறித்தே ஆக வேண்டும். இதுதான் பிளாட்டோ சொன்ன குடியரசுத் தத்துவம்.

ஏறத்தாழ இதே காலகட்டத்தில்தான் இங்கே மனு தோன்றினார். கல்வி பிராமணர்களுக்கு மட்டும்; வீரம் க்ஷத்திரியர்களுக்கு மட்டும்; பொருளாதாரம் - வியாபாரம்

**பேராசிரியர் பெரியார்தாசன்**

வைசியர்களுக்கு மட்டும் என்று பிரித்து, மீதியுள்ள பெரும்பான்மை மக்களை சூத்திரர்களாக - அடிமைகளாக ஆக்கினார். கடவுள் என்கிற பலமான அஸ்திவாரத்தைக் கொண்டு வர்ணாசிரமம் என்கிற கட்டடத் தைச் சமுதாயத்தில் நிலைப்படுத்தினார்!

இதையெல்லாம் உணர்ந்ததால்தான் அம்பேத்கர் Educate அதாவது படி; Agitate - அதாவது வீரப் பயிற்சி செய்; Organise - பொரு ளாதாரத்தைக் கையகப்படுத்து. இந்த மூன் றையும் நீ பெற்று விட்டால், நீ சூத்திரனாக இருக்க மாட்டாய் என்றார். ஆக வர்ணாசிரம தத்துவத்துக்கு எதிராக எழுந்ததுதான் அம்பேத்கரின் தத்துவம்!

இந்தத் தத்துவத்தில் நான் தேடியது கிடைத்து விட்டதாக உணர்ந்தேன். உண்மை யிலேயே ஜாதியை ஒழிப்பதற்கான வழிமுறை அதுதான்' என்பதை நானும் உணர்ந்தேன்.

ஆனால் சமுதாயத்தில் நடந்து கொண் டிருந்தது என்ன? வள்ளலார் சொன்ன சமரச சன்மார்க்கத்தைப் பாராயணம் செய்து கொண்டிருந்தார்களே தவிர, கடைப்பிடித் தார்கள் என்று சொல்ல முடியாது. 'சாதி சமய சழக்கை விட்டேன் அருட்ஜோதியைக் கண்டேனடி - அக்கச்சி அருட்ஜோதியைக் கண்டேனடி...' என்று வள்ளலார் மன்றங்களில் வெறுமனே பாராயணம் செய்து கொண் டிருந்தார்கள். பாராயணம் முடிந்ததும், 'நம்ம ஜாதியில ஒரு நல்ல பொண்ணு இருந்தா, என் பையனுக்குப் பாருங்களேன்!' என்று அவர வரும் அவரவர் ஜாதியை முன்னிலைப் படுத்தித்தான் காரியங்களைச் செய்து கொண் டிருந்தார்கள். இதைத்தான் நான் நேரில் பார்த்தேன்.

ஆக, வள்ளலாரிடம் நான் சிந்தனைகளைக் கற்க முடிந்தது என்றாலும் அந்தச் சிந்தனை களுக்கான செயல்பாட்டு வழிமுறைகளை நான் அம்பேத்கரிடம்தான் கற்க முடிந்தது.



## சந்த்...!

அகலமான நடைபாதை உள்ள பகுதி களைத் தெரு என்கிறோம். குறுகலான சாலை என்றால் சந்து.

வெறும் ஒன்றரை அடி அகலக் குறுகல் என்றால் எப்படி அழைப்பது? 'சந்த்' எனலாமா?

மதுரை கூடலழகர் வீதியிலுள்ள இந்த சந்தில் பன்னிரண்டு வீடுகள் இருக்கின்றன. இங்கு வசிப்பவர்கள் தம் சந்தை விட்டு வெளி யேறுவது ஒரு பெரிய செயலாக இருக்கிறது.

வீடு மாற்றக்கூட முடியாது, இவர்களால்! காரணம், சாமான்களை வெளியே கொண்டு வர முடியாது.

ஒரு குடம் நுழைகிற அளவே இடைவெளி விட்டு அடுத்த ப்ளாட்காரர்களான கடைக் காரர்கள் வானளாவிய சுவர் எழுப்பிவிட, கடந்த மூன்றாண்டுகளாக இந்தச் சந்துவாசிகள் வீட்டை விட்டு வெளியே வரவும் உள்ளே செல்லவும் நரக அவஸ்தைப்படுகிறார்கள்.

''இங்க ஒரு வீட்டுல ஒரு ஆயா கொஞ்சம் குண்டா இருப்பாங்க. அவங்களால வெளியே வரவே முடியாது. ரொம்ப அவசரமா வெளிய போற வேலைன்னா, 'காச் மூச்'னு திட்டிக் கிட்டே கஷ்டப்பட்டு, மூச்சுத் திணறி வெளிய வருவாங்க. கேஸ் போட்டிருக்காங்க. இன்னும் முடிவு தெரியலை'' என்கிறார் இங்கு வசிக்கும் முத்துலட்சுமி என்கிற பெண்மணி.

திருமணம் போன்ற விசேஷங்களுக்குச் செல் வதென்றால், இவர்கள் பட்டுப் புடைவையைக் கட்டிக்கொண்டு வெளியே வருவதில்லை.

பழைய புடைவையுடன் வெளியே வந்து அடுத்தத் தெரு வீடுகளில் அனுமதி பெற்று புடைவை மாற்றிச் செல்கிறார்களாம்!

— ரம்யா

படம்: வெங்கடேஷ்

**கி**ளர்ச்சி செய்! (Agitate) 1927-ல் சைடனாம் கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியராக இருந்தார் அம்பேத்கர். ஐரோப்பியர்கள் மட்டுமே பேராசிரியர்களாக இருக்கிற நேரத்தில் அந்த அளவுக்குக் கல்வி கற்று பேராசிரியராக இருந்த இந்தியர் அம்பேத்கர் மட்டும்தான். அன்றைக்கே அறுநூறு ரூபாய் சம்பளம் வாங்கியிருக்கிறார். அப்படிப்பட்ட வேலையைத் திடீரென்று ஒருநாள் ராஜிநாமா செய்து விட்டார் அம்பேத்கர். எதற்காக?



மகாராஷ்டிர மாநிலத்திலுள்ள மகத் என்கிற ஊரிலிருக்கும் ஒரு குளத்தில், தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த இருவர் தண்ணீரை அள்ளிக் குடித்து விட்டார்கள் என்பதற்காக, அவர்களை மரத்தில் கட்டி வைத்து அடித்தார்கள் என்ற செய்தியைப் படித்ததும் தமது வேலையை உதறித் தள்ளினார் அம்பேத்கர்.

உடனே மக்களைத் திரட்டி அந்தக் குளத்தருகிலேயே, 'இதற்கெல்லாம் காரணம் என்ன? மேல்ஜாதி என்கிற ஆணவத்தைச் சிலருக்கு வழங்குவது எது? இந்த மனுசாஸ்திரம்தானே!' என்று சொல்லி அதை எரித்துக் காட்டியதன் மூலம், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மட்டுமல்ல; மொத்த இந்தியர்களுக்குமே மனுசாஸ்திரம் என்பது எதிர்ப்புக்குரிய ஒரு நூல்தான் என்பதை விளக்கிக் காட்டினார்.

அம்பேத்கரின் இந்த நடைமுறைச் செயல்பாடுகள் காரணமாக, அவரது எழுத்துக்கள் மீதும் தத்துவங்களின் மேலும் எனது கவனம் அதிகரித்தது. அதனால் அவரது நூல்களைத் தேடித் தேடிப் படிக்க ஆரம்பித்தேன்.

அப்போதெல்லாம் அம்பேத்கரின் புத்தகங்கள் கிடைப்பதே மிகவும் அரிதாக இருந்தது. நான் தாழ்த்தப்பட்டவனாக இல்லாததாலேயே, அம்பேத்கரின் மேல் எனக்கிருந்த ஈடுபாட்டை, பலர் சந்தேகத்துடனேயே பார்க்க ஆரம்பித்தார்கள். அதனால், அம்பேத்கர் பற்றிய கூட்டங்களுக்குச் சென்றபோதும் சரி, அம்பேத்கர் இயக்கத் தலைவர்களைப் பார்க்கச் சென்றபோதும் சரி, என்னை அவர்கள் வேண்டாதவனைப் பார்ப்பது போல்தான் பார்த்தார்கள். பிறகு போகப் போகத்தான் அம்பேத்கரின் மேலுள்ள எனது ஈடுபாட்டையும் ஜாதி, சமயச் சழக்கை ஒழிக்க வேண்டும் என்பதில் எனக்கிருக்கும் உறுதிப்பாட்டையும் முழுமையாகப் புரிந்து கொண்டு, என்னையும் அவர்களில் ஒருவனாக ஏற்றுக் கொண்டு, மரியாதை தர ஆரம்பித்தார்கள்.

இது ஒருபுறமிருக்க, மறுபுறம் எனது கூட்டுப் புழுப் பருவத்தில், பெரியாரைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காகக் கூட்டுக்குள் சென்ற நான், கூட்டை விட்டு வெளியே வரும் போது, அம்பேத்கரிஸ்டாக வந்தேன். பெரியாருடைய கருத்துக்கள் ஒரு பறவையின் உடல் என்று வைத்துக் கொண்டால், வள்ளலார், திருமூலர் போன்ற ஆன்மீகவாதிகளின் கருத்துக்கள் ஒரு சிறகாகவும் நடைமுறைச் செயல்பாட்டிற்காக அம்பேத்கரின் கருத்துக்கள் இன்னொரு சிறகாகவும் இருந்தன. இப்படியொரு பறவையாகத்தான் நான் வெளியே வந்தேன்.

இப்படி நான் வெளியே வந்ததால், எனது மேடைப் பேச்சைப் பலரால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. காரணம், பெரியாரைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் நான், திடீரென்று வள்ளலாரைப் பற்றியும் திருமூலரைப் பற்றியும் பேசுவேன். இடையில் அம்பேத்கர் பற்றியும் பேசுவேன். இவற்றைத் தனித் தனியாகக் கேட்பவர்களுக்கு நான் எதைப் பற்றிப் பேசுகிறேன் என்பதே புரியாது. ஒரு கூட்டத்தில் நான் பேசுகிற மொத்தப் பேச்சையும் கேட்டால்தான் நான் எப்படி முரண் போல் தெரிகிற பல விஷயங்களையும் ஒன்றுபடுத்திப் பேசுகிறேன் என்பது புரியும்.

இப்படிப் புரிந்து கொண்டவர்கள் என்னைப் பாராட்டினாலும் புரிந்து கொள்ளாதவர்கள் என்னை விமர்சிக்க ஆரம்பித்தார்கள். அதனால் பெரியாரின் கருத்துக்களை நான் எடுத்துக் கொண்டாலும் மெல்ல மெல்ல பெரியாரின் வட்டத்துக்கு வெளியே வந்து விழுந்து விட்டேன்.

(தொடரும்)

# அறிஞர்கள் அடிதடியில்; அய்யன் நடுத்தெருவில்!

இது அய்யன் திருவள்ளுவர் சீஸன். ஆளுக்கொரு விதமாக வள்ளுவரை ஆங்காங்கே கொத்து பரோட்டா போட்டுக் கொண்டிருக்க, மதுரையில் முற்றிலும் புதுவிதமானதொரு சர்ச்சையில் சிக்கிக் கொண்டிருக்கிறார், திருவள்ளுவர்.



**இப்படி அதிகாரக் கட்டமைப்பைச் சிதைத்திருப்பது வேறு விதமான விஷப்பரீட்சைகள் செய்து பார்த்தாலென்ன என்று பலரை யோசிக்கச் செய்து விடும்.**



பேராசிரியர் சாலமன் பாப்பையா, திருக்குறளுக்கு ஒரு உரை எழுதியிருக்கிறார். கலைஞரின் அற்புதமான முன்னுரையோடு, முதல் பதிப்பிலேயே ஐயாயிரம் பிரதிகள் வெளியாகி, வெளிவந்த சூட்டிலேயே சுமார் நாலாயிரம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகி விட்டது இந்த நூல்.

பேராசிரியர்கள், தமிழறிஞர்கள் மத்தியில் நல்ல பாராட்டுப் பெற்றிருக்கும் இந்த உரைக்குக் கடும் எதிர்ப்புத் தெரிவிக்கும் அணியும் ஒன்று உண்டு.

"பாப்பையாவின் இந்த உரை நூல் ஒரு பெரும் பிழை" என வாதிடும் அறிஞர்களுள் முதன்மையானவர் தமிழண்ணல்.

"திருக்குறள்- என் பார்வையில்" என்று அவர் தலைப்பு தந்திருந்தால் நான் கேள்வி கேட்கப் போவதில்லை. ஆனால், 'திருக்குறள் - உரையுடன்' என்று தலைப்பிட்டு விட்டு, குறளில் உள்ள 133 அதிகாரங்களுக்குள் வரிசைப்படி அல்லாமல் மாற்றி மாற்றிப் போட்டிருப்பதும் அதிகாரத் தலைப்புகளை எளிமைப்படுத்துவதான பேரில் புதிய தலைப்புகள் சூட்டியிருப்பதும் தவறு.

"பாப்பையா எதற்காக இவ்வாறு செய்திருக்கிறார்? 'சாமானியனுக்குக் குறளை எளிமையாகப் புரியவைப்பதற்காக' என்று சொல்கிறார்.

"குறளின் கட்டமைப்பை மாற்றித்தான் சாமானியனுக்கு விளங்க வைக்க வேண்டுமென்பதில்லை. தனித்தனிக் குறளாக எடுத்து, பாமரனுக்கு விளக்கிச் சொன்னால்




சாலமன் பாப்பையா, தம் உரையில் அப்படி என்னதான் செய்திருக்கிறார்?

''இதன் நோக்கம், திருக்குறளைச் சிதைப்பது அன்று; அதன் அழகையும் உண்மையையும், இன்றைக்கும் அது எல்லோருக்கும் பயன்தரும் பாங்கையும் வெளிப்படுத்துவதே'' என்று முன்னுரையில் கூறும் பாப்பையா, திருக்குறளை இதில் ஏழு பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார். (அறம், பொருள், இன்பம் என மூன்று பிரிவுகள் தான் இதுவரை சொல்லப்படுபவை.)

நூலின் உயிர், குடும்பம், சமுதாயம், அரசியல், நிர்வாகம், பண்பாடு, மெய்ப்பொருள் என ஏழு பிரிவுகள்!

இப்படிப் பிரித்து விட்டபடியால் புரியாதா? வேண்டுமானால் குறளின் கருத்துக்களை அடிப்படையாக வைத்துக் கவிதைகள்-சிறுகதைகள் எழுதட்டும். அதன் மூலம் குறள் நெறி பரப்பட்டும். இப்படி அதிகாரக் கட்டமைப்பைச் சிதைத்திருப்பது வேறு விதமான விஷப்பரீட்சைகள் செய்து பார்த்தாலென்ன என்று பலரை யோசிக்கச் செய்துவிடும்.

''இவர்கள், பட்டிமன்றங்களிலும் இப்படித்தான். சாமானியனுக்குப் புரிய வேண்டும் என்கிற பெயரில் இலக்கியத்தின் தரத்தைக் குறைத்து விடுகிறார்கள். ஏட்டுச் சுவடியில் உள்ளவற்றில் கை வைக்க யாருக்கும் அதிகாரம் கிடையாது! பைபிளில் இப்படி கைவைத்து முன் பின்னாக மாற்றிப் போட முடியுமா? குர்-ஆனில் மாற்றம் செய்வார்களா? தமிழகத்தில்தான் இப்படியெல்லாம் விஷப் பரீட்சைகள் செய்ய முடியும். மற்ற மாநிலங்களில் தொன்மையான கலை-இலக்கியப் பதிவுகளைக் கட்டிக் காப்பாற்ற மட்டுமே முடியும். மாறாக இப்படி கட்டமைப்பையே சிதைக்க முற்பட்டால் சும்மா விட மாட்டார்கள்!'' என்று பொறிந்து தள்ளி விட்டார் தமிழண்ணல்.



குறளிலுள்ள அதிகாரங்கள் முன்பின்னாக இடம் மாறிவிட்டன.

உதாரணமாக, முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்துக்கு அடுத்தது வான் சிறப்பு.

ஆனால், பாப்பையாவின் பட்டியலில் கடவுள் வாழ்த்துக்கு அடுத்தது அறன் வலியுறுத்தல்!

கடவுள் வாழ்த்தையே திருவடி வணக்கம் என்று தலைப்பு மாற்றி விட்டார் பாப்பையா.

அந்த வகையில் அறன் வலியுறுத்தல், 'அறம் செய்ய வற்புறுத்தலா'கவும் தகையணங்குறுத்தல், 'அவள் அழகு அவனை வருத்துதலா'கவும், இனியவை கூறல் 'இனிய சொற்களைப் பேசுதலா'கவும் இல்வாழ்க்கை 'மனைவியுடன் வாழும் வாழ்க்கையாக'வும் பொழுது கண்டிரங்கல், 'மாலைப் பொழுதில் மனம் வருந்துதலா'கவும் தலைப்பு மாற்றம் பெற்றிருக்கின்றன.

இவை மட்டுமல்ல; அத்தனை அதிகாரங்களின் தலைப்புமே எளிமைப் படுத்தப் பட்டுள்ளன.

இது மட்டுமல்லாமல், ஒவ்வொரு அதிகாரத்திலுமுள்ள பத்துப்பத்து குறட்பாக்களும் புழக்கத்திலுள்ள வரிசைப்படி அமையவில்லை.

கருத்துத் தொடர்ச்சியின் அடிப்படையில் குறட்பாக்களையும் முன்பின்னாக மாற்றிப் போட்டிருக்கிறார் பாப்பையா.

ஏன் இந்த விஷப்பரீட்சை என்று கேட்டால், இது விஷப் பரீட்சையே அல்ல; பரிமேலழகரே குறட்பாக்களை மாற்றிப் போட்டு ஒரு 'லிங்க்' தர முயன்றிருக்கிறார் என்கிறார் பாப்பையா.

"1330 குறட்பாக்களையும் 133 அதிகாரங்களாகப் பிரித்து வைத்தது வள்ளுவர்தான்; சந்தேகமில்லை. ஆனால், குறட்பாக்களின் வரிசை அவரே அமைத்ததல்ல. உரையாசிரியர்கள் ஆளுக்கு ஒரு மாதிரி மாற்றித்தான் அமைத்திருக்கிறார்கள். பரிமேலழகரின் வரிசைக்கும் மணக்குடவர் வரிசைக்கும் வித்தியாசம் இருக்கிறது. மணக்குடவருக்கும் காளிங்கருக்கும் வேறுபாடு இருக்கிறது. காளிங்கரோடு பரிப்பெருமான் பல இடங்களில் முரண்படுகிறார்.

"நான் பரிமேலழகரைப் பின்பற்றித்தான் உரையெழுதினேன் எனினும் அவர் மாற்றிய வரிசையை இன்னும் மாற்றிப் பார்க்கலாமென்று தோன்றியதால் செய்தேன்.

"நான் செய்த மாற்றங்கள் சரியானதென்றால் காலத்தில் அது நிலைத்து நிற்கும். தவறு என்றால் காலமே அழித்துவிடும்.

"ஆனால் சிறு மாற்றங்களைக் கூட எதிர்ப்பது என்பது நம் பண்டிதர்களின் இயல்பாகிவிட்டது. அதை நான் பொருட்படுத்தப் போவதில்லை.

"திருக்குறள் பொதுச் சொத்து. அதைப் பாமரனும் அனுபவிக்க வேண்டும். எளிமையாக எடுத்துச் சொல்வதைத் தவிர அதற்கு

---

**தமிழகம்**

சமீபத்தில் 'தமிழ் சாகித்ய அகடமி' பற்றிய அரசு அறிவிப்பு வெளியானதை கவனித்திருப்பீர்கள். நவீன தமிழிலக்கிய சாதனையாளர்களுக்குக் 'குறள்பீடம்' விருது வழங்கப்படும் என்று முதல்வர் அறிவித்தார். விருதுக்குரியோரைத் தேர்ந்தெடுக்கவென 35 உறுப்பினர்கள் கொண்ட ஆய்வுக் குழு ஒன்றையும் அரசு நியமித்தது. அக்குழுவில் இடம் பெற்றுள்ள பெரும்பாலானோர் நவீன தமிழிலக்கியத்துக்குச் சம்பந்தம் இல்லாதவர்கள் என்பதுதான் துரதிர்ஷ்டம்.

'இது இன்னொரு கலைமாமணி ஆகிவிடுவதற்கான சாத்தியங்கள் ஆரம்பத்திலேயே தெரிகிறதே?' என்று இக்குழுவின் துணைத் தலைவராக நியமிக்கப்பட்டுள்ள தமிழண்ணலிடம் (தலைவர்–கலைஞர்) கேட்டோம்.

"எனக்கும் முதலில் அப்படியொரு குழப்பமும் அச்சமும் இருந்தது. ஆனால், தகுதி வாய்ந்த எந்த ஒரு இலக்கியவாதியும் 'குறள் பீட' விருது பெறாமல் இருக்கக் கூடாது என்பதற்காகவே அத்தகையோரை நடுவர் குழுவில் இடம் பெறாமல் செய்து விட்டார்கள் போலும் என்று எண்ணிக் கொண்டேன்!

"குறள் பீட விருதை நல்ல முறையில், வகையாகப் பயன்படுத்த என்னாலான முயற்சிகள் செய்வேன். ஆனால், முதல்வர் அறிவிப்பில் இவ்விருது பற்றிய தகவல் இருந்ததே தவிர, அரசிடமிருந்து எனக்கு வந்த கடிதத்தில் அப்படியொரு குறிப்பே இல்லை. என்னென்ன செய்ய வேண்டும் என்பது பற்றிய சுமார் 20 திட்ட வரைவுகள் அக்கடிதத்தில் இருந்தன.

எழுத்தாளர் மாநாடு, மொழிபெயர்ப்புகள், தொகுப்பு நூல்கள் வெளியிடுவது, ஆய்வரங்கங்கள் நடத்துவது பற்றியெல்லாம் எழுதியிருக்கிறார்கள். ஆனால் குறள் பீட விருது காணோம்.

''தவறுதலாக விடுபட்டிருக்கலாம். பேசி, தீர்மானமான அறிவிப்புகள் விரைவில் வெளிவரச் செய்யவிருக்கிறேன்.''

**''முதலில் நீங்கள் செய்ய உத்தேசித்துள்ள காரியம் என்ன?''**

''மொழிபெயர்ப்பில் அதிக கவனம்—உடனடி கவனம் செலுத்த எண்ணம். நமக்கு ஞானபீடம் கிடைக்காமலே இருப்பதற்கு இதுதான் முக்கியக் காரணம். தலைசிறந்த சமகாலத் தமிழ் இலக்கியங்களை உடனுக்குடன் பிற மொழிகளில்—குறிப்பாக இந்தியில் மொழிபெயர்க்க ஆவன செய்ய விருக்கிறேன்.



• தமிழண்ணல்



• லியோனி

**இருக்கிறது?''**

''எங்கே இருக்கிறது தமிழ்? அதன் அமைப்பும் வீறும் காணாமலே போய்விட்டது. அப்துல் ரகுமான், மீரா, மேத்தா, நா.காமராசன் போன்ற இன்றைய முன்னணிக் கவிஞர்களெல்லாம் இங்கே தமிழ் படித்தவர்கள்தாம். தியாகராஜ செட்டியாரின் 'தமிழ்நாடு' வார இதழ், அற்புதமான இலக்கியம் வளர்த்த காலம் ஒன்றுண்டு.

''இன்று எல்லாம் போச்சு! தமிழாசிரியர்களெல்லாம் பட்டிமன்றங்களில் சம்பாதிக்கப் போய் விட்டார்கள்! துறை சார்ந்த ஈடுபாடு வெகுவாகக் குறைந்து விட்டது. பட்டிமன்றங்கள் தமிழ் வளர்ப்பதில்லை.

# கொல்கிறார்கள்!''

''பிறகு, தமிழிலக்கியச் சிற்பிகள் என்ற பெயரில் அசோகமித்திரன், இந்திரா பார்த்தசாரதி போன்ற வாழும் இலக்கிய மேதைகளின் வாழ்வையும் படைப்புகளையும் பற்றிய ஆய்வுபூர்வமான தொடர் வரிசை நூல்களை எல்லா மொழிகளிலும் வெளியிட விருப்பம் இருக்கிறது. நிறைய செய்யலாம். தேசிய அளவில் தமிழின் சாதனைகளை எடுத்துச் சொல்ல இது ஒரு வாய்ப்பு.''

**''எல்லாம் சரி. தமிழ் வளர்த்த மதுரையில் இன்று தமிழ் எப்படி**

அது வெறும் பொழுதுபோக்காகிவிட்டது. நானே கூடப் பட்டிமன்றங்களில் நடுவராகச் செல்வதுண்டு. ஆனால் ஒரு போதும் துணுக்குகளால் தோரணம் கட்டுவதில்லை.

''இங்கே லியோனி இருக்கிறார். என் மாணவர்தான். ஆனால் அவரது பட்டிமன்றங்களைக் கேட்டால் எரிச்சல் வருகிறது. எல்லாவற்றையும் கேலி செய்வது, எதையுமே மேலோட்டமாக மட்டுமே அணுகுவது என்பது எப்படிச் சரி? இவர்கள் தமிழைக் கொன்று கொண்டிருக்கிறார்கள்.''

வேறு வழியில்லை. அவர்கள் தம் எதிர்ப் பைப் பதிவுசெய்திருக்கிறார்கள். நான் என் உடன்பாட்டை முன் வைத்திருக்கிறேன். சரியானதைக் காலம் அங்கீகரிக்கும்'' என்கிற சாலமன் பாப்பையா, அடுத்த சர்ச்சைக்கு இப்போதே பிள்ளையார் சுழி போட் டிருக்கிறார்.

இவரது அடுத்த நூல், சமயங்கள் பற்றியது.

''அவரவர் சமயங்களை மதித்து, அதற் குள்ளே வலம் வந்தால் போதுமானது. சாதி யம் வலுவடைந்து வரும் இக்காலத்தில், கலப்புத் திருமணங்கள் நடக்கத்தான் வேண்டுமா என்று யோசிக்கிறேன்'' என் கிறார் பாப்பையா!

— **ஔரங்கசீப்**

படங்கள்: **வெங்கடேஷ்**

# பொன்னியின் செல்வன்

முப்பத்து நான்காம் அத்தியாயம்

## இராவணனுக்கு ஆபத்து!

சுந்தர சோழர் தமது செல்வக் குமாரியைப் பார்த்து, "குந்தவை! நான் முதன் மந்திரியோடு இராஜ்ய காரியங்களைப் பற்றிக் கொஞ்சம் பேச வேண்டும். நீங்கள் போய் உங்கள் காரியங்களைப் பாருங்கள். போகும்போது **இதையும்** அழைத்துக்கொண்டு போங்கள்! உன் தாயார் மட்டும் இங்கே சிறிது நேரம் இருக்கட்டும்!" என்றார்.

சக்கரவர்த்தி "இதையும்" என்று குறிப்பிட்டது மந்தாகினியைத்தான். அப்படிக் குறிப்பிட்டதிலிருந்து அவன் விஷயத்தில் அவருடைய அருவருப்பு வெளியாயிற்று.

குந்தவை சிறிது ஏமாற்றத்துடன் தந்தையை நோக்கினாள். அதைக் கவனித்த சக்கரவர்த்தி, "ஆமாம்; இவள் முட்டிக்கொண்டது சிற்ப மண்டபத்திலுள்ள கைலாச மலைதானா என்பதைத் தெரிந்துகொள்வது நல்லது! இவளை அங்கேயே அழைத்துக்கொண்டு போய்க் காட்டித் தெரிந்துகொள்ளுங்கள்! இவள் இங்கே நிற்பதை என்னால் சகிக்க முடியவில்லை!" என்றார்.

குந்தவை ஏமாற்றம் நிறைந்த முகத்தோடு மந்தாகினியைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு புறப்பட்டாள். அப்போது மலையமான் மகள் குந்தவையின் அருகில் வந்து, அவள் காதில் மட்டும் கேட்கும்படியாக, "குழந்தாய்! இவள்

அமரர் **கல்கி**

இப்போது பார்க்கச் சகிக்காமல்தானே இருக்கிறாள்? அப்பாவிடம் வருத்தப் படுவதில் என்ன பயன்? உன்னுடைய அலங்காரக் கலைத் திறமையையெல் லாம் இவளிடம் காட்டு, பார்க்கலாம்!'' என்றான்.

குந்தவை புன்னகை மூலம் தன் சம்மதத்தை தெரிவித்துவிட்டு அங்கிருந்து மந்தாகினியை அழைத்துச்சென்றாள். அவர்களுடன் வானதியும் பூங்குழலியும் வெளியேறினார்கள்.

பிறகு சுந்தர சோழர் முதன் மந்திரியையும் மலையமான் மகளையும் மாறி மாறிப் பார்த்த வண்ணம், "நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து இந்தக் காரியத்தை எதற்காகச் செய்தீர்கள் என்று தெரியவில்லை. எனக்கு இதனால் சந்தோஷம் உண்டாகும் என்று நீங்கள் எண்ணியிருந்தால் அது பெருந்தவறு! முதன் மந்திரி! எதற்காக நீர் இவ்வளவு பிரயத்தனப்பட்டுக் கோடிக்கரையிலிருந்து இந்தக் காட்டுமிராண்டி ஜன்மத்தைப் பிடித்துக்கொண்டு வரச் செய்தீர்? இப்போதாவது உண்மையைச் சொல்லுங்கள்! இனிமேலாவது என்னிடம் எதையும் மறைத்து வைக்க முயல வேண்டாம்!" என்றார்.

அப்போது முதன் மந்திரி அநிருத்தர் உணர்ச்சி ததும்பக் கூறினார் :-

''ஒரு தடவை செய்த பிழையை மறுபடியும் செய்ய மாட்டேன். இனி எந்தக் காரியத்தையும் தங்களிடமிருந்து மறைத்து வைக்கவும் உடன்படேன். உண்மை வெளிப்பட வேண்டுமென்பதற்காகவே இப்போது இவ்வளவு பிரயத்தனம் எடுத்துக்கொண்டேன். தங்களால் ஒரு பெண்மணி கடலில் விழுந்து இறந்ததாகத் தங்கள் மனம் வேதனைப் பட்டுக்கொண்டிருந்தது. அந்த சம்பவத்தைத் தாங்கள் மறந்து விட்டதாக வெகு காலம் நான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் நாளாக ஆக அந்த நினைவு தங்கள் உள்ளத்தின் உள்ளே பதிந்து வேதனையை அதிகப் படுத்திக்கொண்டிருந்ததாக அறிந்தேன். தூக்கத்தில் தாங்கள் அதைப் பற்றிய கனவு கண்டு பலமுறை ஓலமிட்டதாக மகாராணி சொன்னார்கள். அதனால் தங்களைக் காட்டிலும் மலையமான் மகளார் அதிக வேதனை அடைந்தார்கள்! சில காலத்துக்கு முன்பு என்னிடம் யோசனை கேட்டார்கள். அதன் பேரில் நாங்கள் இந்தப் பிரயத்தனம் செய்யத் தீர்மானித்தோம். தங்கள் காரணமாக இறந்து விட்டதாகத் தாங்கள் நினைத்து வருந்திய பெண்மணியைத் தங்கள் முன்னாலேயே கொண்டு வந்து நிறுத்தி அந்த எண்ணத்தைப் போக்க உத்தேசித்தோம். நேரில் கொண்டு வந்து நிறுத்தினால்தான் தாங்கள் நம்புவீர்கள் என்று எண்ணினோம். இது குற்றமாயிருந்தால் கருணை கூர்ந்து மன்னிக்க வேண்டும்."

இதைக் கேட்ட சக்கரவர்த்தி ஆத்திரம் பொங்கக் கூறியதாவது:-

"குற்றந்தான்! பெருங்குற்றம்! இத்தனை நாளும் இவள் பேயாக என்னைச் சுற்றிக் கொண்டிருந்தாள். கனவிலே வந்து கஷ்டப்படுத்திக்கொண்டிருந்தாள். பேய்க்குப் பதிலாகப் பிச்சியைக் கொண்டு வந்து என் முன்னால் நிறுத்தியிருக்கிறீர்கள். இது எனக்கு மகிழ்ச்சி தரும் என்று நினைத்தீர்களா? ஒரு நாளும் இல்லை. என்னிடம் முன்னதாக உண்மையைத் தெரிவித்திருந்தால் இவளை இங்கே அழைத்து வரும் யோசனையைக் கண்டிப்பாக நிராகரித்திருப்பேன். போனது போகட்டும். ஏதோ செய்தது செய்து விட்டீர்கள். வெகு கஷ்டப்பட்டு இங்கே இந்த ஊமைப் பைத்தியக்காரியை அழைத்து வந்து சேர்த்தீர்களே? திரும்பி அவளை எப்போது எப்படிப் போகச் செய்வதாக உத்தேசம்?'' இவ்வாறு சுந்தர சோழர் கேட்டதும், அநிருத்தர் உண்மையிலேயே பேச்சிழந்து நின்றார்.

அப்போது சக்கரவர்த்தினி, ''சுவாமி! இங்கிருந்து என் சகோதரியைத் திரும்பிப் போகச் செய்வதாகவே எனக்கு உத்தேசமில்லை. இந்த அரண்மனையில் என்னுடனேயே அவர் தங்கியிருப்பார். எனக்கு முன் பிறந்த தமக்கையைப் போல் பாவித்து இவரை நான் போற்றிப் பூசித்து வருவேன்!'' என்றாள்.

''தேவி! என்னிடம் உனக்குள்ள பக்தியை இந்த மாதிரி மெய்ப்பிக்க நீ

பிரயத்தனப்பட வேண்டியதில்லை. கண்ணகியைக் காட்டிலும் மேலான கற்பின் அரசி என்பதை இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நான் கண்டிருக்கிறேன். நான் நோய்ப்பட்டது முதல் நீ உன் செல்வக் குழந்தைகளையும் மறந்து எனக்குப் பணிவிடைகள் செய்து வருவதையும் எனக்காக நோன்பு நோற்று வருவதையும் அறிந்துதானிருக்கிறேன். காட்டிலே திரிந்த ஊமைப் பிச்சியை அரண்மனையிலே அழைத்து வைத்து என்னிடம் உனக்குள்ள பக்தியைக் காட்ட வேண்டியதில்லை. மலையமான் மகளே! இதைக் கேள்! முதன் மந்திரி! நீங்களும் நன்றாய்க் கேட்டுக்கொள்ளுங்கள். எப்போதோ ஒரு காலத்தில் மனித சஞ்சாரமற்ற தீவாந்தரத்தில் நான் தன்னந்தனியே தங்கியிருந்தபோது இந்த ஊமைப் பிச்சியைப் பார்த்தேன். அச்சமயம் இவளிடத்தில் பிரியம் கொண்டதும் உண்மைதான். இல்லை என்று சொல்லவில்லை. அதனாலேயே இன்னமும் நான் இவளை நினைத்து ஏங்கித் தவிப்பதாக நீங்கள் எண்ணினால், அதை விடப் பெரிய தவறு செய்ய முடியாது. அப்போது இவள் பேரில் எனக்கு ஏற்பட்டிருந்த பிரியத்துக்கு எத்தனையோ காரணங்கள் இருந்தன. அந்தப் பிரியம் இந்த இருபத்தைந்து வருஷ காலத்தில் முற்றும் மாறித் துவேஷமாகவும் அருவருப்பாகவும் உருவெடுத்திருக்கிறது. கனவிலும் நினைவிலும் என்னை அவ்வளவாக இவள் கஷ்டப்படுத்தியிருக்கிறாள். இவள் இந்த அரண்மனையில் இருக்கிறாள் என்னும் எண்ணத்தையே என்னால் சகிக்க முடியவில்லை. உடனே இவளை இங்கிருந்து அனுப்பி விட்டு மறு காரியம் பாருங்கள். இவளைப் பேய் என்று நினைத்தபடியால் இவள் பேரில் விளக்கை எடுத்து எறிந்தேன். உயிரோடும் உடம்போடும் இருப்பவள் என்று அறிந்திருந்தால் என்ன செய்திருப்பேனோ, தெரியாது!''



வ்வாறு சுந்தர சோழர் குரோதம் ததும்பிய குரலில் கூறிய குரூரமான வார்த்தைகளைக் கேட்டுச் சக்கரவர்த்தினியும் முதன் மந்திரியும் கதிகலங்கிப் போனார்கள். சக்கரவர்த்தி இவ்விதம் பேசுவார் என்று அவர்கள் எதிர்பார்க்கவே இல்லை. அநிருத்தர் தாம் செய்த பழைய குற்றத்துக்காக மட்டுமே தம்மைச் சக்கரவர்த்தி கண்டனம் செய்வார் என்று கருதியிருந்தார். மகாராணியோ, சக்கரவர்த்தி வாய்விட்டு வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும் மனத்திற்குள் மகிழ்ந்து பூரித்துத் தன்னுடைய பெருந்தன்மையான செயலை ரொம்பவும் பாராட்டுவார் என்று எதிர்பார்த்தாள்.

சுந்தர சோழரின் கொடிய வார்த்தைகள் அவர்களுக்கு ஏமாற்றமளித்ததோடு ஓரளவு வெறுப்பையும் கோபத்தையும் உண்டாக்கின.

சக்கரவர்த்தி இத்தனை நேரம் பேசியதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல், ''சிச்சீ! இந்த ஊமைப் பைத்தியக்காரி உலகில் உயிரோடு வாழ்ந்திராவிட்டால் என்ன நஷ்டம் நேர்ந்துவிடும்? இவள் கடலில் விழுந்தபோது உண்மையாகவே செத்துத் தொலைந்து போயிருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்! எந்தப் பரம முட்டாள் மெனக்கட்டு இவளை எடுத்துக் காப்பாற்றினான்?'' என்றார்.

இதற்குப் பிறகு மலையமான் மகளால் பொறுக்க முடியாமற் போயிற்று. உருக்கம் ததும்பிய ஆவேசத்துடன் அவள், ''சுவாமி! தங்கள் வாயால் அப்படிச் சொல்லாதீர்கள்! மகா பாவம்! நன்றி மறத்தல் எவ்வளவு கொடிய பாதகம் என்று பெரியோர்கள் எத்தனையோ பேர் சொல்லியிருக்கிறார்களே? தங்கள் உயிரை இந்த மாதரசி காப்பாற்றியதை வேணுமானாலும் மறந்துவிடுங்கள். ஆனால் நம் அருமைக் குமாரன் அருள்மொழிவர்மனை இவர் காப்பாற்றியதை மறக்கலாமா? தாங்கள் மறந்தாலும் நான் மறக்க முடியாது. பதினாலு ஜன்மத்துக்கும் இந்தத் தெய்வ மகளுக்கு நான் நன்றிக்கடன் பட்டிருப்பேன்!'' என்று சொன்னாள்.

''தேவி! அந்தக் கதையை மறுபடியுமா சொல்லுகிறாய்...?'' என்று சுந்தர சோழர் மேலும் பேசுவதற்குள் மலையமான் மகள் குறுக்கிட்டுக் கூறினாள்:-

''கதை அல்ல, சுவாமி! அருள்மொழியே என்னிடம் சொன்னான். காவேரி வெள்ளத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிய தேவிதான் ஈழத் தீவிலும் பலமுறை தன்னைக் காப்பாற்றியதாகச் சொன்னான். நல்லவேளையாக, அவன் நாகைப்பட்டினத்திற்கு வந்து சுகமாயிருக்கிறான். அவனை அழைத்து வரச் செய்யுங்கள். தாங்களே நேரில் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள்!''

''ஆமாம், ஆமாம்! அருள்மொழி நாகைப்பட்டினத்தில் இருக்கிறான். ஆனால் அவன் சுகமாயிருக்கிறான் என்பது என்ன நிச்சயம்? நேற்று அடித்த பெரும் புயலில் அவனுக்கு ஆபத்து நேர்ந்ததோ என்னவோ? முதன் மந்திரி! என் உள்ளத்தில் நிம்மதி இல்லை! இனந் தெரியாத அபாயம் ஏதோ என் குலத்தை நெருங்கிக்கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. இந்தச் சமயத்தில் இந்த ஊமைப் பிச்சி இங்கு வந்திருப்பதும் ஓர் அபசகுனமாகவே தோன்றுகிறது...''

''சுவாமி! கரையர் குலமகள் இங்கே இச்சமயம் வந்திருப்பது அபசகுனம் இல்லை; நல்ல சகுனம். இவர் இங்கிருப்பது நம்முடைய குலத்துக்கே ஒரு பாதுகாப்பு. நான் இடைவிடாமல் பிரார்த்தனை செய்யும் துர்க்கா பரமேசுவரியே என் மீது அருள்புரிந்து இந்தத் தேவியை அனுப்பி வைத்திருக்கிறாள்...''

''இல்லவே இல்லை. துர்க்கா பரமேசுவரி அனுப்பவில்லை. சனீசுவரன் அனுப்பியிருக்கிறான். அந்தப் பிச்சியை உடனே திரும்பிப் போகச் சொல்லிவிட்டு மறு காரியம் பாருங்கள். நீங்கள் முடியாது என்றால், நானே அந்தக் காரியத்தைச் செய்ய வேண்டியதுதான்...''

''சுவாமி! ரொம்பவும் கருணை கூர்ந்து எனக்கு இந்த வரத்தைக் கொடுங்கள். அருள்மொழி வந்து சேருகிற வரையில் அவர் இந்த அரண்மனையில் இருப்பதற்கு அனுமதி அளியுங்கள்!'' என்று சக்கரவர்த்தினி உருக்கமான குரலில் கேட்டுவிட்டுச் சுந்தர சோழரின் பாதங்களைத் தொட்டுப் பணிந்தாள்.

''முதன் மந்திரி! கேட்டீரா? வெளுத்ததெல்லாம் பால் என்று கருதும் மலையமான் மகளின் கோரிக்கையைக் கேட்டீரா? கடவுளே! இப்படியும் ஒரு கபடமற்ற சாது உலகத்தில் இருக்க முடியுமா? இவள் என்னிடம் எதுவுமே கோருவதில்லை. பேரும் போயும் இப்படிப் பட்ட வரத்தைக் கேட்கிறாள். அதை மறுக்க மனம் வரவில்லை. ஆனால் அந்த ஊமைப் பைத்தியக்காரி இங்கே இருக்கும் ஒவ்வொரு நிமிஷமும் எனக்கு நரக வேதனையாக இருக்கும். ஆகையால், நாகையிலிருந்து இளவரசனை அழைத்து வர உடனே ஏற்பாடு செய்யுங்கள்!''

''அப்படியே செய்கிறேன், ஐயா!'' யானைப் படைகளும் குதிரைப் படைகளும் அனுப்பிப் பகிரங்கமாக இளவரசரை அழைத்து வரச் செய்யலாமா? அல்லது...''

''மாறுவேடம் பூணச் செய்து இரகசியமாக அழைத்து வரலாமா என்று தானே கேட்கிறீர்? பகிரங்கமாக இளவரசன் வந்தால் சோழ நாட்டில் பெருங் குழப்பம் ஏற்படும் என்று எண்ணுகிறீர்கள் அல்லவா?''

''நான் எண்ணுவது மட்டும் அல்ல, பிரபு! நிச்சயமாக அறிந்திருக்கிறேன். மக்கள் பல காரணங்களினால் கொதிப்பு அடைந்திருக்கிறார்கள். ஏதாவது ஒரு வியாஜம் ஏற்பட வேண்டியதுதான்; உடனே மக்களின் உள்ளக் கொதிப்பு வெளியே பீறிக்கொண்டு வரும். பழுவேட்டரையர்களும் மதுராந்தகத் தேவரும் என்ன கதி அடைவார்கள் என்று சொல்ல முடியாது...''

''இது என்ன பேச்சு, முதன் மந்திரி! குடிமக்கள் அப்படி மூர்க்கத்தனமாக நடந்துகொண்டால், சோழ நாட்டு வீர சைன்யங்கள் எங்கே போயின?''

''சைன்யங்களிடையேதான் கொதிப்பு அதிகம். பிரபு! மக்களாவது வெறுங் கூச்சல் குழப்பத்துடன் அடங்கி விடுவார்கள். சேனா வீரர்களோ, தஞ்சைக் கோட்டையைச் சின்னாபின்னமாக்கி, பழுவேட்டரையர்களையும் மதுராந்தகத் தேவரையும், சிறையில் அடைத்துவிட்டு, ஈழங்கொண்ட வீராதி வீரராகிய அருள்மொழிவர்மரைச் சிங்காதனத்தில் ஏற்றி விட்டே மறு காரியம் பார்ப்பார்கள்...''

''அப்படி நடக்க வேண்டுமென்று நீங்களும் மனத்திற்குள் ஆசைப் பட்டுச்

கொண்டிருக்கிறீர்கள். முட்டாள் ஜோதிடர்கள் கட்டி விட்ட கதைகளை நம்பிக்கொண்டு குடிமக்களும் புத்தி தடுமாறி அலைகிறார்கள். ஆனால் உங்கள் மனத்தில் ஒன்று நிச்சயமாகப் பதிய வைத்துக்கொள்ளுங்கள். என் பெரிய பாட்டனார் கண்டராதித்த அடிகளின் குமாரன் மதுராந்தகனே இந்தச் சோழ



சிம்மாசனத்துக்கு உரிமை உடையவன். அவனுக்கே பட்டம் கட்டி வைப்ப தென்று தீர்மானித்து விட்டேன். மக்கள் அதற்குத் தடை சொன்னாலும் சரி, தேவர்களும் மூவர்களும் வந்து தடுத் தாலும் சரி, நான் கேட்கப் போவதில்லை. என்னுடைய குமாரர்கள் அதற்குக் குறுக்கே நின்றால்..."

"சுவாமி! அப்படி ஒருநாளும் நேராது. தங்கள் விருப்பத்துக்கு மாறாகத் தங்கள் குமாரர்கள் ஒருநாளும் தடை சொல்ல மாட்டார்கள். அருள்மொழிக்கு இராஜ்ய ஆசையே கிடையாது. இலங்கை மணி மகுடத்தை அவனுக்குக் கொடுத்தார்கள். அதை அவன் வேண்டாம் என்று மறுதலித்து விட்டான். அப்படிப்பட்ட வனா தங்கள் வார்த்தைக்கு மறு வார்த்தை கூறப் போகிறான்? கரிகாலன் மட்டும் என்ன? அவனுக்குத் தாங்களே பார்த்து யுவராஜ பட்டாபிஷேகம் செய்து வைத்தீர்கள். அதனால் ஒப்புக் கொண்டான். அவனுடைய வீர பராக் கிரமத்தைப் பற்றி நான் சொல்ல வேணுமா? அவன் ஆசைப்பட்டால் தானாகவே அவனுடைய வீரவாளின் உதவியைக்கொண்டு பெரிய இராஜ் யத்தை ஸ்தாபித்துக் கொள்ளக் கூடி யவன் அல்லவா? ஆனால் அவனுக்கும் இராஜ்யம் ஆளுகிற ஆசை இல்லை. தாங்கள் அவனிடம் தங்கள் விருப்பம் இன்னதென்பது பற்றி ஒரே ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான்..."

"அந்த வார்த்தை. நான் சொல்லி விடப் போகிறேனே, அவன் காதில் விழுந்து விடப் போகிறதே என் பதற்காகத்தானே எத்தனை சொல்லி அனுப்பியும் இங்கே வராமல் ஆட்டம் போடுகிறான்?"

"சக்கரவர்த்தி! பட்டத்து இளவரசர் காஞ்சியில் அற்புதமான பொன் மாளிகை நிர்மாணித்து விட்டுத் தங் களின் வருகைக்காகக் காத்திருக்கிறார்..."

"எதற்காகக் காத்திருக்கிறான் என்று எனக்குத் தெரியும். கம்ஸன் அவனுடைய பெற்றோர்களைச் சிறை வைத்தது போல் எங்களைச் சிறை வைத்து விட்டுச் சோழ சிம்மாசனம் ஏறக் காத்திருக்கிறான். அவன் கட்டியிருப்பது பொன் மாளி கையோ, அல்லது அரக்கு மாளிகை தானோ, யாருக்குத் தெரியும்?"

"சுவாமி! கரிகாலனைப் பற்றித் தாங் கள் இவ்வாறு சொல்வது மிகக் கொடுமை!" என்றாள் மலையமான் மகள்.

"சக்கரவர்த்தியின் உள்ளத்தை அவ் வளவு தூரம் விஷமாக்கி வைத்திருக் கிறார்கள்!" என்றார் முதன் மந்திரி.

"வேறு யாரும் இல்லை; என் மனத் தில் விஷம் ஏற்றியவன் கரிகாலனேதான். அவன் எனக்கு உண்மையான மகனாயிருந்தால் எத்தனை தடவை சொல்லி அனுப்பியும் ஏன் வரவில்லை?" என்று சுந்தர சோழர் கேட்டார்.

"அதற்கு வேறு சரியான காரணங் களும் இருக்கலாம் அல்லவா?"

"நீங்கள்தான் ஒரு காரணத்தை ஊகித் துச் சொல்வதுதானே?"

"கரிகாலன் கொள்ளிடத்துக்கு இப்பால் வந்தால் பழுவேட்டரையர்கள் அவனைச் சிறைப்படுத்தி விடுவார்கள் என்று நாடெல்லாம் பேச்சாயிருக்கிறது..."

"அம்மாதிரி சொல்லி என் மகனு டைய மனத்தை யாரோ கெடுத் திருக்கிறார்கள்! இவனுடைய தகப்பன் திருக்கோவலூர் மலையமான் ஒருவன்; கொடும்பாளூர் வேளான் ஒருவன். நீங்களும் அவர்களோடு சேர்ந்து கொண்டீர்களோ, என்னமோ, தெரிய வில்லை..."

"சுவாமி! நான் யாரைப் பற்றியும் அவர்களுக்குப் பின்னால் பேசும் பழக்க மில்லை. சற்று முன் தாங்களே அபா யத்தைப் பற்றிப் பேசினீர்கள். தங்கள் உள்ளத்தில் அவ்விதம் தோன்றுவதாகச் சொன்னீர்கள். தங்கள் உள்ளத்தில் தோன்றுவது முற்றிலும் உண்மை. சோழர் குலத்துக்கு அபாயம் நெருங்கிக் கொண்டுதானிருக்கிறது. அது இரண்டு வழியாக வருகிறது. இந்த நாட்டில் இப்போது இரண்டுவிதமான சதிகள் நடைபெற்று வருகின்றன. பழுவேட் டரையர்களும் சம்புவரையர்களும்..."

"முதன் மந்திரி அநிருத்தரே! நிறுத் துங்கள். பழுவூர் வம்சத்தார் நூறு ஆண்டுகாலமாகச் சோழகுலத்துக்குத் தொண்டு செய்து வந்தவர்கள். பெரிய

பழுவேட்டரையர் இருபத்து நாலு போர்முனைகளில் போரிட்டுத் தமது மேனியில் அறுபத்து நாலு புண்களைச் சுமந்துகொண்டிருக்கிறார். அப்படிப் பட்டவர் இன்று சோழகுலத்துக்கு எதிராகச் சதி செய்கிறார் என்று சொல் வதைக் காட்டிலும், சூரியன் இருட்டாகி விட்டது என்றும், கடல் நீரில் தீப் பிடித்துக் கொண்டு விட்டது என்றும் சொல்லுவதை நம்பலாம்...''

''சக்கரவர்த்தி! சூரியனையும், கிரஹணம் பிடிக்கிறது. கடல் நீரில் வட வாமுகாக்கினி கொழுந்து விட்டெரி கிறது. ஆனால் அதைப் பற்றி நான் சொல்ல வரவில்லை. பழுவேட் டரையர்கள் சோழ குலத்துக்கு எதிராகச் சதி செய்வதாக நான் கூறவே இல்லை. மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதற்காக அவர்கள் மிகுந்த பிரயத்தனம் செய்து வருகிறார்கள்...''

''மகா சிவபக்தராகிய கண்டராதித் தருடைய புதல்வருக்குப் பட்டம் கட்ட எண்ணுவதில் என்ன தவறு? சிம்மாசன உரிமை நியாயமாக மதுராந்தகனுக் குத்தானே உரியது?'' என்றார் சக்கர வர்த்தி.

''நானும் அதையேதான் சொல்லு கிறேன். மேலும் தாங்களே மனமுவந்து மதுராந்தகத் தேவருக்குச் சோழ குலத்து மணி மகுடத்தை அளிக்கத் தீர்மானித்து விட்டீர்கள். அப்படியிருக்கும்போது பழுவேட்டரையர்கள் மீது குற்றம் என்ன? தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவே அவர்கள் பிரயத்தனப்படு கிறார்கள்....''

''ஆகையினால் என்னுடைய நன்றியறிதலுக்கு மேலும் அவர்கள் பாத்திரமாகியிருக்கிறார்கள்.''

''ஆனால், சக்கரவர்த்தி, தங்களுடைய சம்மதம் பெறாத சில காரியங்களையும் செய்கிறார்கள். சோழ ராஜ்யத்தை இரண் டாகப் பங்கு போட்டுக் காவேரிக்குத் தெற்கேயுள்ளதை மதுராந்தகத் தேவருக்கும் வடக்கே உள்ள பகுதியைக் கரிகாலருக்கும் கொடுத்து விடுவதென்று யோசனை செய்து வருகிறார்கள். சம்புவரையர் மாளிகையில் இன்றைய தினம் அந்தப் பேச்சு நடந்து வருகிறது. சக்கரவர்த்தி! நூறு வருஷ காலமாகத் தங்கள் முன்னோர்கள் பாடுபட்டு விஸ் தரித்த ராஜ்யத்தை, - விஜயாலய சோழ ரும் ஆதித்த சோழரும் மகா பராந்தக சக்கரவர்த்தியும் ஈழம் முதல் கோதாவரி வரையில் நிலை நாட்டிய சோழ மகா ராஜ்யத்தை இரண்டாகப் பிளந்து பங்கு போடுவது தங்களுக்குச் சம்மதமா?''

''முதன் மந்திரி! ஒருநாளும் அதற்கு நான் சம்மதம் கொடேன். சோழ இராஜ் யத்தைப் பிளப்பதற்கு முன்னால் என்னை வெட்டிப் பிளந்து விடுங்கள் என்று சொல்லுவேன். பழுவேட்டரையர் அத்தகைய முயற்சியில் இறங்கியிருப்பார் என்று நான் நம்பவில்லை. ஒருவேளை எனக்கு அது பிரியமாயிருக்கலாம், என் மகனுக்குப் பாதி இராஜ்யமாவது கொடுக்க நான் ஆசைப்படலாம் என்ற எண்ணத்தினால் அவர் இந்த யோசனைக்கு இணங்கியிருப்பார். அது எனக்கு விருப்பமில்லையென்று தெரிந் தால் கைவிட்டு விடுவார். முதன் மந்திரி! இந்தச் சோழ சாம்ராஜ்யத்தில் ஒரு அங்குல விஸ்தீரணம் கூடக் குறையாமல் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டி வைப்பேன். அதை என் மக்கள் எதிர்த் தாலும் சரி, பழுவேட்டரையரே எதிர்த் தாலும் சரி, நான் கேட்கப் போவ தில்லை.''

''சக்கரவர்த்தி! பழுவேட்டரையர் எதிர்த்தால் பொருட்படுத்த வேண்டி யதில்லை. தங்கள் புதல்வர்களோ எதிர்க்கப் போவதில்லை. ஆனால் மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதற்குத் தடை இவையெல்லாம் அல்ல. அந்தத் தடை இன்னும் பெரிய இடத்திலிருந்து வருகிறது. தாங்களும் நானும் இந்தச் சோழ நாட்டு மக்கள் அனைவரும் போற்றி வணங்கும் தெய்வப் பெண் மணியிடமிருந்து அந்தத் தடை வருகிறது. சில நாளைக்கு முன்புகூட அவரிடம் பேசிப் பார்த்தேன்...''

''செம்பியன் மாதேவியை நீங்கள் குறிப்பிடுகிறீர்கள். அந்த மாதரசியின் மனத்தையும் யாரோ கெடுத்திருக் கிறார்கள். நான் என் புதல்வர்களுக்குப் பட்டம் கட்ட ஆசைப்படுவதாகப் பெரிய பிராட்டி கருதி வருகிறார். முதன்



மந்திரி! அவரை உடனே இங்கு அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். நான் அவருடைய மனத்தை மாற்றி விடுகிறேன்..."

''சக்கரவர்த்தி! அது அவ்வளவு சுலபம் அல்ல. மகான் கண்டராதித்தர் தமது தர்ம பத்தினிக்கு அவ்விதம் கட்டளையிட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய மரணத் தறுவாயில் நான் அவர் அருகில் இருந்தேன். 'மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டக் கூடாது என்பதற்கு முக்கிய காரணம் இருக்கிறது; அது என் துணைவிக்குத் தெரியும்' என்று தங்கள் பெரிய பாட்டனார் சொன்னார்..."

"முதன் மந்திரி! அப்படிப்பட்ட தடை உண்மையில் இருக்கிறதா? அது இன்னதென்று உங்களுக்குத் தெரியுமா?"

''தெரிந்

திருந்தால், தாங்கள் கேட்கும் வரையில் காத்துக் கொண்டிருப்பேனா? பெரிய பிராட்டியை அழைத்து வரச் செய்து தாங்கள்தான் அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும்."

''ஆமாம், அந்த ஒரு விஷயந்தான் எனக்கும் தொல்லை கொடுத்து வருகிறது. பெரியபிராட்டியை உடனே அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்யுங்களேன். எப்பேர்ப்பட்ட தடையாயிருந்தாலும் அதை நான் நிவர்த்தி செய்கிறேன். அவரை அழைத்து வருவதற்கு யாரை அனுப்பலாம்? ஏன்? என் குமாரியையே அனுப்புகிறேன். தேவி! குந்தவையை உடனே இங்கு அழைத்து வா!'' என்று



சுந்தர சோழர் மலையமான் மகளைப் பார்த்துக் கூறினார்.

சக்கரவர்த்திக்கும் முதன் மந்திரிக்கும் நடந்த சம்பாஷணையை வானமா தேவி ஒரு காதினால் கேட்டுக்கொண்டிருந்தாலும், அவளுடைய கவனமெல்லாம் சற்று முன் அங்கிருந்து சென்ற ஊமை ராணியின் பேரிலேயே இருந்தது. ஆதலின் சக்கரவர்த்தி குந்தவையை அழைத்து வரும்படி சொன்னதும் மலையமான் மகள் அங்கிருந்து அந்தப்புரத்துக்கு விரைந்து சென்றாள்.

அவள் அந்தப்புரத்தை அடைந்தபோது குந்தவை, வானதி, பூங்குழலி ஆகியவர்கள் பெருங் கலக்கத்தில் ஆழ்ந்திருந்தார்கள். அதற்குக் காரணத்தையும் மகாராணி உடனே தெரிந்துகொண்டாள். ஊமை ராணியை அங்கே காணவில்லை.



எங்கே என்று கவலையுடன் கேட்டபோது குந்தவை கூறியதாவது: –

''அம்மா! தங்கள் கட்டளையை நிறைவேற்றுவது சுலபமான காரியமாக இல்லை. ஆயினும் நாங்கள் மூன்று பேருமாகச் சேர்ந்து வற்புறுத்தி மந்தாகினி தேவியைக் குளிப்பாட்டினோம். பிறகு புதிய

ஆடைகள் அணிவித்தோம். வானதி அவருடைய கூந்தலை வாரி முடிந்துகொண்டிருந்தாள். பூங்குழலி பூத் தொடுத்துக்கொண்டிருந்தாள். ஆபரணங்கள் எடுத்து வருவதற்காக நான் அடுத்த அறைக்குப் போனேன். ஆபரணங்கள் எடுத்துக்கொண்டிருந்தபோதே இவளுடைய கூச்சல் கேட்டது. திரும்பி வந்து பார்த்தால் மந்தாகினி தேவியைக் காணவில்லை. கூந்தலை வாரி முடி போட்டவுடனே திடீரென்று அவர் திமிறிக்கொண்டு ஓடிப்போனாராம். அக்கம் பக்கத்து அறைகளில் எங்கேயும் காணவில்லை. இன்னமும் தேடிக்கொண்டிருக்கிறோம்!"

இதைக் கேட்டு மலையமான் மகள் புன்னகை புரிந்தாள். "அவருக்கு அலங்காரம் செய்தபோது எதிரில் கண்ணாடி இருந்ததா?" என்று கேட்டாள். "இருந்தது; சற்றுத் தூரத்தில் இருந்தது" என்றாள் வானதி.

அவருடைய அலங்கரித்த உருவத்தைத் தற்செயலாகக் கண்ணாடியில் பார்த்திருப்பார். அது அவருக்கு வெட்கத்தை உண்டாக்கியிருக்கலாம். அதனால் ஓடி எங்கேயாவது மறைந்துகொண்டிருப்பார். இன்னும் நன்றாகத் தேடிப் பாருங்கள். ஒருவேளை அந்தப்புரத்துப் பூங்காவிற்குச் சென்று ஒளிந்துகொண்டிருந்தாலும் இருப்பார். மதில் ஏறிக் குதிப்பது, பலகணி வழியாகக் குதிப்பது போன்ற காரியங்கள்தான் அவருக்கு வழக்கமானவை ஆயிற்றே?" என்றாள் சக்கரவர்த்தினி.

பிறகு எல்லாருமாக நந்தவனத்துக்குச் சென்று தேடினார்கள். அங்கும் ஊமை ராணி அகப்படவில்லை. அவர்களுடைய கவலை அதிகமாயிற்று. முதன் மந்திரியிடமும் சக்கரவர்த்தியிடமும் போய்த் தெரிவிக்கலாமா? என்று அவர்கள் எண்ணத் தொடங்கியபோது எங்கிருந்தோ 'டணார்' 'டணார்' என்று ஒரு சத்தம் வந்தது. கருங்கல்லில் இரும்பு உளியினால் ஓங்கி அடிப்பது போன்ற ஓசை அது. எங்கிருந்து அந்த ஓசை வருகிறது என்று காது கொடுத்துக் கவனமாகக் கேட்டார்கள். சிற்ப மண்டபத்திலிருந்து வருகிறதென்று தெரிந்தது. உடனே ஒரு தாதிப் பெண்ணைத் தீபம் எடுத்துக்கொண்டு வரும்படி சொல்லிவிட்டு எல்லாரும் சிற்ப மண்டபத்துக்குச் சென்றார்கள். சிற்ப மண்டபத்துக்குள்ளே அவர்கள் ஒரு விந்தையான காட்சியைக் கண்டார்கள். ஓரளவு ஆடை அலங்காரங்கள் அணிந்து விளங்கிய மந்தாகினி கையில் ஒரு நீண்ட பிடியுள்ள கத்தியை வைத்துக்கொண்டு கைலாச மலையைத் தாங்கிக்கொண்டிருந்த இராவணேசுவரனுடைய கரங்களை ஓங்கி ஓங்கி அடித்துக்கொண்டிருந்தாள். மிக உறுதியான கல்லினால் செய்யப்பட்ட சிற்பமாதலால் அந்தத் தாக்குதலுக்கு இராவணன் அது வரையில் அசைந்து கொடுக்கவில்லை. ஆனாலும் சீக்கிரத்தில் அவனுக்கு ஆபத்து வந்து விடலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது. கைலாச மலையைத் தாங்கிக் கொண்டிருந்த இராவணனுடைய கரங்களில் இரண்டு மூன்று கைகள் ஒடிந்து விட்டால் மலையே இடம் பெயர்ந்து அவன் தலைகளின் மீது இன்னும் நன்றாக உட்கார்ந்து விடக்கூடும்! தலைகள் சுக்குநூறாக நொறுங்கி விடக்கூடும்! அத்தகைய ஆபத்தான நெருக்கடியிலே தான் குந்தவை முதலியவர்கள் சிற்ப மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள்.

அவர்களுடைய வரவைப் பார்த்ததும் மந்தாகினி தன்னுடைய கையில் பிடித்திருந்த கத்தியைக் கீழே போட்டுவிட்டு வந்தவர்களைப் பார்த்துப் புன்னகை புரிந்துகொண்டு நின்றாள்.

மண்டபத்துக்குள் பிரவேசித்தவர்களில் பூங்குழலியைத் தவிர மற்றவர்களின் உள்ளங்களில் "இவள் ஒரு பைத்தியக்காரப் பிச்சிதான்! சக்கரவர்த்தி இவளைக் கண்டு அருவருப்பு அடைவதில் வியப்பு ஒன்றுமில்லை!" என்ற எண்ணம் தோன்றியது.

மலையமான் மகள் மற்றவர்களைப் பார்த்து, "பெண்களே! இதைப் பற்றிச் சக்கரவர்த்தியின் முன்னிலையில் யாரும் பிரஸ்தாபிக்க வேண்டாம்!" என்று எச்சரிக்கை செய்தாள்.

(தொடரும்)

# "புத்தருக்குப் பக்கத்தில் சீட்!"

மார்ச் முதல் வாரத்தில் தாய்லாந்தில் 'செனட்'டுக்குத் தேர்தல் நடைபெற்றது. முதன்முதலாக செனட் உறுப்பினர்களைப் பொதுமக்கள் தேர்ந்தெடுத்ததால் நாடு முழுவதும் பரபரப்பான தேர்தலாக அது அமைந்தது. இதுவரை 'செனட் என்பது ஒரு நியமன சபையாகவே இருந்து வந்தது. பாராளுமன்றத்துக்கு மட்டுமே தேர்தல். அதுவும் அந்நாட்டில் தேர்தலில் வாக்களிப்பதை யாரும் சீரியஸாக எடுத்துக் கொள்வதில்லை. இருபத்தைந்து சதவீத வாக்காளர்கள் வாக்களித்தாலே பெரிய விஷயம். ஆனால் இந்த முறை செனட் தேர்தலில் கிட்டத்தட்ட எழுபத்திரண்டு சதவீதம் பேர் வாக்களிக்கக் காரணம் திடீரென்று ஏற்பட்ட மனமாற்றமா? இல்லை. பயம் காரணம். வாக்களிக்காதவர்கள் தங்களின் அடிப்படை உரிமைகளில் முக்கியமான சிலவற்றை இழந்து விட நேரும் என்று அரசாங்கம் எச்சரித்தது. 'வீண் வம்பு எதற்கு?' என்று வாக்குச்சாவடிகளில் கூட்டம் அலை மோதியது.



• இலியாஸ்

"அப்படியானால் மீதி இருபத்தெட்டு சதவீதம் பேர் தங்கள் உரிமைகளை இழந்து விடுவார்களா?"

"உதாரணத்துக்கு பாங்காக் நகரைச் சேர்ந்தவர்கள் ஒரு கோடி பேர் என்றால் அதில் இருபது லட்சம்தான் இங்கேயே வசிப்பவர்கள். மீதி எண்பது லட்சம் பேர் பிழைப்புக்காக நகரை விட்டு வெளியே போய் இருப்பவர்கள். இதில் வாக்காளர்கள் எவ்வளவு பேரோ, அவர்களில் பெரும்பாலானோர் வோட்டு போட்டிருக்கிறார்கள். இது எங்கள் நாட்டு வரலாறு காணாத புது அம்சம்."

"வோட்டுப் போடாதவர்கள் என்னென்ன உரிமைகளை இழக்க நேரிடும்?"

"காலியாக இருக்கும் அரசாங்க வேலைக்கு, வாக்களிக்காதவர் ஒருவர் விண்ணப்பித்தால் 'வேலை காலியிருக்கிறது உண்மைதான். எந்த அரசு வேலை வேண்டுமென்று கேட்கிறாயோ அந்த அரசு அமைய நீ உன் கடமையைச் செய்யாத போது அந்த அரசு உனக்குச் செய்ய வேண்டும் என்று எப்படி எதிர்பார்க்கிறாய்?" என்று அவனுக்கு வேலை மறுக்கப்படலாம். இது நியாயம்தானே?"

சமீபத்தில் பாங்காக்கில் நண்பர் இலியாஸைச் சந்தித்த போது இந்த விவரங்களைச் சொன்னார். கூடவே அவர் தெரிவித்த இன்னொரு செய்திதான் நமக்கு முக்கியம்.

"தேர்தலை இந்த முறையில் நடத்த வேண்டும். அதிகமான வாக்காளர்களை வோட்டுப் போட வைக்க இப்படிப்பட்ட எச்சரிக்கைகளை வெளியிட வேண்டும் என்றெல்லாம் தாய்லாந்து அரசுக்கு ஆலோசனை சொன்னவர் நம்மூர்க்காரர்தான். டி.என். சேஷன்! இந்த செனட் தேர்தலுக்கான சிறப்பு ஆலோசகராக தாய்லாந்து வந்து மன்னருக்கும், அரசுக்கும் சொன்ன பல்வேறு யோசனைகளை தயக்கமின்றி அரசு கடைப்பிடித்து, வெற்றி கண்டது. சேஷனின் அருமை தாய்லாந்துக்குத் தெரிந்திருக்கிறது; தாய்நாட்டுக்குத் தெரியவில்லை."

இன்னொரு விஷயமும் சொன்னார். 'சாமியாரை நம்புவது இங்கேயும் உண்டு' என்றவர், 'ஒரு இடத்துக்கு அழைத்துப் போகிறேன், வாருங்கள்' என்று ஒரு மணி நேர கார்ப் பயணத்துக்குப்

• தியான மண்டபம்

பின் ஒரு பிரம்மாண்டமான மைதானத்தில் இறக்கினார்.

"இருபத்து நாலாயிரம் ஏக்கர் இது. ஒரு புத்த பிட்சு வளைத்துப் போட்டிருக்கிறார். இவரது ஏமாற்று ஸ்டைலே தனி. 'ப்ராமங்கோன் தேப் முனி' என்பது இவர் பெயர். தாய்லாந்தில் மன்னருக்கு அடுத்து மக்கள் தெய்வமாகக் கருதுவது புத்த பிட்சுக்களைதான். அதிலும் இந்த முனி ரொம்ப சீனியர். அவர் சொல்வதை நம்ப லட்சக்கணக்கில் மக்கள் இருக்கிறார்கள். 'இறந்த பிறகும் ஒரு வாழ்க்கை உண்டு' என்று நம்புகிறவர்கள் தாய் மக்கள். அதை 'செமை'யாகப் பயன்படுத்திக் கொண்டார் இந்த முனி.

'இறந்த பிறகு சொர்க்கத்துக்குப் போக ஆசையா? நான் இருக்கிறேன். கவலைப்படாதீர்கள். நேராக மேலே புத்தருக்குப் பக்கத்தில் நீங்கள் போய், அமர்ந்து கொள்ளலாம். உங்களுக்கு நான் இங்கேயே 'ரி... ரிசர்வேஷன்' செய்து தந்து விடுகிறேன்' என்று ஒருநாள் அறிக்கை விட்டார். மீடியாக்களில் இந்த அறிக்கை அமர்க்களப்பட்டது. டி.வி.யில் தோன்றி இதையே சொன்னார். முனியின் இந்த அறிக்கைக்கு ஜால்ரா போட ஒரு ஜூனியர் பிட்சுக்களின் கும்பல் தயாராக இருந்தது. இத்துடன் நிற்காமல், புத்தருக்குப் பக்கத்தில் போய் உட்கார முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு, மூன்றாம் வகுப்பு என்று ஐந்து விதமாகப் பிரித்தார். முதல் வகுப்பு என்றால் புத்தருக்கு ரொம்ப கிட்டப் போய் உட்காரலாம்.



• தாய்லாந்து நகைக்கடை

சொன்னால் நம்ப மாட்டீர்கள், லட்சக்கணக்கான பக்தர்கள் வார இறுதியில் தங்கள் பென்ஸ் காரையும் பி.எம்.டபிள்யூ.வையும் போட்டுக்கொண்டு முனியிடம் போய் சீட் ரிசர்வ் செய்துகொண்டார்கள். ஆளுக்கு அவர்களின் சீட்டுக்கு ஏற்ப ஒரு லட்சம் பாட் (Baht) வரை கட்டணம். ஒரு லட்சம் பேர் வரை ரிசர்வ் செய்துகொண்டார்கள். ஒரு பாட் நம்மூர் ஒண்ணேகால் ரூபாய்க்குச் சமம் என்றால் கணக்குப் போடுங்கள். முனி அந்தப் பணத்தைக் கொண்டு இவ்வளவு ஏக்கர் நிலத்தையும் வாங்கிப் போட்டு இதோ இப்படியொரு தியான மண்டபத்தைக் கட்டிப் போட்டிருக்கிறார். கொங்லுவாங் என்ற இடத்தில் இந்த தியான மண்டபத்துக்கு 'தம்மகயா' என்று பெயர் வைத்திருக்கிறார்கள்."

இந்த அநியாயத்தை - மோசடியை அரசாங்கம் கண்டு கொள்ளவில்லையா?

"அவர் மீது வழக்கு போட்டு - சொத்துக்களை முடக்க முயற்சி நடைபெறுகிறது. ஆனால் ஏமாந்த மக்கள் - ஏராளமான பணக்காரர்கள் - புத்தர் பக்கத்தில் போய் உட்கார ஆசைப்படும்வரை இந்த முனியை யாரும் அசைக்க முடியும் என்று தோன்றவில்லை"

நம் ஊர் சாமியார்கள் கொஞ்சம் பரவாயில்லையோ!

**— ராணிமைந்தன்**

# சைவ ரம்ஜானும் ஒரு சன்மார்க்கப் புரட்சியும்!



ஒரு டிராவல்ஸ் கம்பெனியிலிருந்து போகும் கடிதங்களில் அநேகமாக என்னென்ன விவரங்கள் இருக்கும்?

சுற்றுப் பயணத் திட்டங்கள், செலவு, உணவு வசதி, இன்னபிற.

மதுரை கிழமாசி வீதி அன்பு டிராவல்ஸிலிருந்து கார்டு வருகிறதென்றால் அதற்கு அர்த்தமே வேறு.

'அன்பு டிராவல்ஸ்' அன்பானந்தம் (49) ஒரு வள்ளலார் பக்தர். தினசரி நூற்றுக்கணக்கான மதுரைவாசிகளுக்கு தபால்கார்டு மூலம் வள்ளலாரின் நெறிகளைப் பரப்பி வருகிறார்.

கடந்த இரண்டு ஆண்டுகளாக வள்ளலாரின் ஜீவ காருண்யப் பெருண்மைகளைப் பரப்பும் பணியில் ஈடுபட்டிருக்கும் அன்பானந்தம், கார்டு மூலம் மக்களை ஒரு குறிப்பிட்ட தினத்தில், குறிப்பிட்ட ஆலய வாசலுக்கு வரச் சொல்கிறார். கூடும் பக்தர்களிடையே சிறிய அளவில் சொற்பொழிவு, வள்ளலாரின் அருட்பா பாராயணம், கொல்லாமை பற்றிய விழிப்புணர்வூட்டல், புலால் மறுப்பின் அவசியம் பற்றிப் பேசுகிறார்.

"இதுவரை தோன்றிய மகான்களிலேயே ஜோதி வடிவில் மரணமிலாப் பெருவாழ்வு கண்டவர் வள்ளலார் மட்டுந்தான். அவர்தான் தாவர உணவின் பயன்களை மிக எளிமையாகவும் தீவிரமுடனும் சொல்லியிருப்பவர்.

"இறைவன் சிலருக்குக் காட்சி ரீதியிலும் சிலருக்கு அசரீரி ரீதியிலும் சிலருக்கு உள்ளுணர்வாகவும் தரிசனம் தருகிறான். அதை அனுபவிக்க, நம் பொறிகள் தூய்மையானவையாக இருக்க வேண்டும். அதற்குத் தாவர உணவு உதவும். உயிர்ப் பிணியையும் உடல் பிணியையும் அது நீக்கும்" என்று 'வெஜிடேரியன்' புரட்சி செய்துகொண்டிருக்கிறார் அன்பானந்தம்.



• அன்பானந்தம்

மதுரையில், 30 இடங்களில் வள்ளலார் சன்மார்க்க சங்கம் நிறுவியுள்ள இவர், கார்டு போடும் விஷயத்தில் ஒரு தேர்ந்த தொடர்கதை ஆசிரியர் போலச் சில உத்திகளைக் கையாள்கிறார்.

"எத்தனைதான் எடுத்துச் சொன்னாலும் சிலர் என்ன பெரிய வள்ளலார், என்ன

பெரிய ஜீவகாருண்யம் என்று அலட்சியப் படுத்தி விடுவார்கள். ஆகவே, அவரவர் பணி, சமூக நிலை, குணநலன்களை அறிந்து (முகவரிகளையும் பிற விவரங்களையும் இவர் கோயில்களில் சந்திப்போரிடம் விசாரித்தே அறிகிறார்.) பணமா – நிம்மதியா – குடும்ப அமைதியா, உடல் உபாதைகளி லிருந்து விடுதலையா – எதைத் தேடுகிறார் என அறிந்து, அதற்குப் பொருத்தமான அருட்பா வரிகளை எடுத்து எழுதி, 'உங்கள் பிரச்னைக்குத் தீர்வு வள்ளலாரிடம் இருக் கிறது; மாலை இந்தக் கோயில் வாசலுக்கு வந்து விடுங்கள்' என எழுதுகிறார்!

“பெரும்பாலும் 40 வயதுக்கு மேற்பட்ட வர்கள்தான் என் கார்டை ஒரு பொருட் டாகக் கருதி, வருவார்கள். சமீப காலமாக இருபது இளைஞர்களும் முழு சைவ உணவு உட்கொள்பவர்களாக மாறி, சன்மார்க்கக் கூட்டங்களுக்கு வருவது நல்ல அறிகுறி” என்பவர், இதுவரை இந்தக் கார்டு உத்தி மூலம் ஐந்நூறு பேரை தாவர உணவு மட்டுமே உண்போராக மாற்றியிருக்கிறார்!

“தீபாவளி அன்று மட்டும் எத்தனை உயிரினங்கள் கறிக்காக பலியிடப்படுகின் றன! அன்றைய தினத்தையொட்டி, உலகம் முழுவதும் பல்லாயிரக்கணக்கான கார்டுகள் – உயிர் வதைக்கு எதிராக – அனுப்பி விடுவேன்! கோயில்களில் அகவல் பாரா யணம் நடத்துவோம்'' என்கிறார் அன்பானந்தம்.

''இதென்ன வேண்டாத வேலை? பிள்ளையை ஒழுங்காகப் பாருங்கள்'' என்று தான் இவர் வீட்டில் முதலில் கொடி பிடித் திருக்கிறார்கள். ஆனால் இப்போது எதிர்ப்பு இல்லை.

காரணம் –

அன்பானந்தத்தின் முயற்சியால் மதுரை யில் நான்கு முஸ்லீம் அன்பர்கள் முழு வெஜிடேரியனாக மாறியிருப்பதோடு, வீட்டில் வள்ளலார் படமும் ஜோதியும் கூட வைத்து வழிபடத் தொடங்கியிருக்கிறார் களாம்.

“உலகிலேயே சைவ ரம்ஜான் கொண் டாடுவது இவர்கள் மட்டும்தான்!” என்று சொல்லிச் சிரிக்கிறார் அன்பானந்தம்.

— கிருஷ்ணன்

படம்: வெங்கடேஷ்

க்ரேன் ஒன்று அருகில் இருந்த மோட்டார் பைக்கைத் தூக்கி போலீஸ் வண்டியில் வைத்தது.

"டோயிங் ஏரியாவிலே வண்டியை நிறுத்திட்டுப் போனால் இந்த கதிதான்" என்றாள் சங்கீதா, சுவாதியுடன் நடந்தபடியே.

"தவறான இடத்தில் வண்டியை நிறுத்தினால், அதற்காக அதை நசுக்கி உருத்தெரியாமப் பண்ணிடுவாங்களா என்ன?"

"அப்படியெல்லாம் உனக்கு யார் சொன்னது? இந்த மாதிரி வண்டிகளை போலீஸ் ஸ்டேஷனிலே வச்சிடுவாங்க. அபராதம் கட்டிட்டு வண்டியின் சொந்தக்காரர் அதை எடுத்துக்கலாம்."

"அதுதானே, தவறான இடத்தில் நிறுத்திய வண்டியின் சொந்தக்காரனுக்குத்தான் அபராதம் விதிக்கணும். மோட்டார் பைக் என்ன செய்யும் பாவம்? ஆண்கள் தவறாக வழிநடத்துவதாலே சில பெண்கள் தப்பு செய்யறாங்க. ஆனால் அதற்கான தண்டனையை அந்தப் பெண்கள் மீது விதிக்கக் கூடாது இல்லையா?"

சுவாதியை ஒரு நிமிடம் குழப்பத்தோடு உற்றுப் பார்த்த சங்கிதா பிறகு சிரித்தாள்.

"ஓ, அம்மாவின் எழுத்துக்கள் மகளைப் பெண்ணுரிமை இயக்கவாதியாக ஆக்கிடுச்சோ?" என்றவள், கொஞ்சம் யோசித்துவிட்டுப் பேச்சைத் தொடர்ந்தாள்.

"சத்யா மேடத்தின் மனத்தில் நிறைய ரணங்கள் இருந்தன, தன் கணவரை விட்டுப் பிரிந்து வந்த போது. அந்தச் சமயத்தில் அவங்க எழுதியதைத்தான் இன்னைக்கு நீ படிச்சே. மற்றபடி அவங்க ஆண்களை மட்டமாக எடைபோட்டதில்லை. ஏன், பல ஆண்களுக்குத் தன்னாலான உதவியைச் செய்திருக்காங்க. அவங்களைத் தோழியா நினைக்கிற ஆண்களிலேயிருந்து தெய்வமா நினைக்கிற ஆண்கள் வரை நிறையப் பேர் உண்டு."

டக்கென்று சுவாதியின் மனத்தில் பிரசாத் வந்து போனான்.

".... அவ்வளவு ஏன், நம்ம பத்திரிகை ஆசிரியருக்கே உங்கம்மா மேல தேவதா விசுவாசம் தெரியுமா?"

உண்மைதான். ராஜ்குமார் - அதுதான் அந்தப் பத்திரிகை ஆசிரியர் - சுவாதியின் வருகையைப் பற்றி அறிந்து கொண்டதும் என்ன மாய்ப் பரபரத்தார்! தன் அறைக்குள் அவளை வரவழைத்துப் படபடவென்று வார்த்தைகளைக் கொட்டினார்.

"அடடா, சத்யாவுக்கு இந்த நிலை உண்டாகி இருக்கக் கூடாது. உன் அப்பா இறந்ததை நான் குறிப்பிடலே. எப்போது விவாகரத்து ஆனதோ, அதற்குப் பிறகு அவன் அவள் கணவனே இல்லையே... நான் சொன்னது, தன் பெண் இப்படி அற்புதமாக வளர்ந்து தன்னைத்








சூழ்நிலையை எளிதாக்க எண்ணி, "அதனாலே என்ன சார்? எங்கள் சந்திப்பு கொஞ்ச நாளிலே நடக்கத் தானே போகுது? என் அம்மா இதுவரை தனி வாழ்க்கை வாழ்ந்திருந் தால் என்ன, உங்களை மாதிரி நிறைய சலு கைகள் கொடுக்கும் ஒரு முதலாளி அவங்களுக்கு வாய்த்தது பெரிய அதிர்ஷ்டம்தானே?"

பெரிதாகச் சிரித்தார் ராஜ்குமார். "அட போம்மா. இன் றைக்கு தின நண்பன் வெற்றிகரமா நடைபோடுதுன்னா அதற்கு முக்கியக் காரணம் உங்கம்மா சத்யாதான்" என்று தொடங்கி தன் மலரும் நினைவுகளைப் பகிர்ந்து கொண் டார்.

தேடி வந்திருக்கும்போது, அவள் பாட்டுக்கு சமூக சேவை செய்யப் போயிட் டாளே, அதைச் சொன் னேன். ஒரு பெண்ணுக்குச் சொந்த வாழ்க்கைன்னு கொஞ்சமாவது இருக்க வேண்டாமா?" கடைசி வாக்கியத்தைக் கூறும்போது அவர் கண்களில் கலக்கம்.

## அருண் சரண்யா

ஆரம்பக் காலத்தில் விற்பனையும் சுமார்; விளம்பரமும் இல்லை என்ற நிலையில் தின நண்பன் தடுமாறியது. அப்போது தான் அதில் நிருபராகச் சேர்ந்திருந்த சத்யா, "சார், மற்ற தினசரிகளிலிருந்து நாம் மாறுபட்டிருந்தால்தான் மக்கள் கவனத்தைக் கவர முடியும்'' என்று கூற, "அது புரியுதும்மா. ஆனால் எப்படி வித்தியாசம் காட்ட? எல்லோருமே ஒரே செய்தியைத் தானே போடுகிறோம்'' என்றிருக்கிறார் ராஜ்குமார்.

அடுத்த நாளே முதல் பக்கச் செய்திகளை வித்தியாசமான பாணி ஒன்றில் வடிவமைத்தாள் சத்யா. சின்னச் சின்ன வாக்கியங்கள். அந்தச் செய்தியின் பின்னணி விவரங்களை அறியாத வாசகர்களுக்காக அந்த அடிப்படைத் தகவல்கள் சின்னதாக ஒரு 'பெட்டி'யில். இந்த பாணி வாசகர்களுக்குப் பிடித்துப் போனது.

இரண்டு நாட்கள் கழித்து மீண்டும் ராஜ்குமாரை அணுகினாள். "எந்த நாளிதழின் முதல் பக்கத்திலும், ஏதோ ஒரு சண்டை, சட்டசபை, அமளி, விபத்து, சாவு இதெல்லாம்தான் இடம்பெறுகிறது. நம் நாளிதழில் தினமும் முதல் பக்கத்தில் யாரையாவது வாழ்த்தினாலென்ன? அவங்க அதற்கு முன்தினம் ஏதாவது நல்லது செய்திருக்கணும், அவ்வளவுதான். அவர் லட்ச ரூபாயை செஞ்சிலுவை இயக்கத்திற்கு அளித்திருக்கலாம். அல்லது மிகவும் தன்மையுடன் பயணிகளை நடத்தும், சூடு போடாத மீட்டர் கொண்ட ஆட்டோவின் டிரைவராக இருக்கலாம். தினமும் இப்படி போட்டால் நம் நாளிதழைப் பற்றிய மதிப்பு உயரும்."

உயர்ந்தது - மதிப்போடு விற்பனையும். தின நண்பனில் இடம்பெற்ற விளம்பரங்களில் ஒருசில கவர்ச்சிகரமான மாறுதல்களை சத்யா ஆலோசனையாகக் கூற, "அட, இந்த தினசரியிலே ஒரு இலவச விளம்பர ஏஜென்ஸி கூட இருக்குதுப்பா'' என்றபடி தயாரிப்பாளர்கள் தினநண்பனைத் தங்கள் விளம்பரங்களின் மூலம் அதிகமாக ஆதரிக்கத் தொடங்கினார்கள்.

"எங்களுக்கெல்லாம் அது உற்சாகமான காலம் சுவாதி. முயற்சிகளுக்குப் போதிய பலன் கிடைப்பதைப் போன்ற ஆனந்தம் வேறு எதுவுமில்லை. ஆனால் இரவு பகல் பார்க்காமல் உழைத்ததில் சத்யாவின் உடல் நலம் கொஞ்சம் கெட்டுப் போனது. அவளைக் கட்டாயப்படுத்தி நம் நாளிதழிலேயே வேலை பார்க்கும் ஷபனாவுடன் ஒரு வாரம் மலை வாசஸ்தலத்துக்குப் போய் ரெஸ்ட் எடுத்துக்கிட்டு வரச் சொல்லி அனுப்பினேன். விதி யாரை விட்டது?"

அந்தச் சமயம் பார்த்து ஃபாக்ஸில் ஒரு செய்தி. தலைநகரில் நடக்கும் பரபரப்புக் காட்சிகள் போலும். "சாரி சுவாதி, இப்போ எனக்குப் பேச நேரமில்லே. சங்கீதாவை உனக்குக் கம்பெனி கொடுக்கச் சொல்றேன். நீ மனம் விட்டு அவளோடு பேசலாம். சத்யாவுக்கு அவள் சொந்தத் தங்கை மாதிரி."

இதை மனத்தில் அசைபோட்டபடி சங்கீதாவுடன் நடந்து கொண்டிருந்த சுவாதியின் முகம் குடித்துவிட்டு சாலையில் படுத்திருந்த ஒருவனைப் பார்த்து சுருங்கியது. சங்கீதா தன்னைப் பார்ப்பதைப் புரிந்து கொண்டு, "இவன் அநாகரீகமா நடந்து கொள்வது மட்டுமில்லே, மது வாசனையே எனக்குப் பிடிக்காது'' என்றாள்.

சிறிது நேரம் கழித்து, "ஏர்ஹோஸ்டஸ் வேலைக்குப் போகணும்னா என்ன செய்யணும்?'' என்று கேட்டாள்.

சங்கீதாவின் முகத்தில் புன்னகை படர்ந்தது. "உன் உயரத்துக்கும், அழகுக்கும் நிச்ச



"உங்களுக்கும் அந்த நடிகைக்கும் மேரேஜ் நடக்குமா, நடக்காதா சார்?''

"வர்ற ஜூலையில் ரெண்டு பேருக்கும் ஹனிமூன் நிச்சயம்..! போதுமில்லே?''

"நான் கேட்ட கேள்விக்கு நீங்க பதில் சொல்லலையே சார்!''

— சீர்காழி வி. ரேவதி

யம் தேர்ந்தெடுத்துடுவாங்க. பறக்கும்போதே யாராவது இளம் தொழிலதிபர் உன்னை கொத்திக்கிட்டுப் போயிடுவான்."

"இன்டலல் இருக்கட்டும். நான் கேட்டதற்குப் பதில் வரலியே?"

"ஓ.கே. விமானப் பணிப்பெண்ணாய் சேர பெங்களூரிலே சில பயிற்சி மையங்கள் இருக்கு."

"ஏன், இங்கே இல்லையா?"

"இல்லேன்னுதான் நினைக்கிறேன்."

ஏமாற்றமாக இருந்தது. திடீரென்று சங்கீதா கேட்டாள். "மதுவின் வாசனையே பிடிக்காதுன்னியே. விமானப் பணிப்பெண்ணாக ஆகிவிட்டால், சர்வதேச ஃப்ளைட்டுகளிலே மதுவை வழங்க வேண்டியிருக்குமே, அப்போ என்ன செய்வே? என்னைக் கேட்டால் ஏர்ஹோஸ்டஸ் என்பது ஒரு வீட்டு வேலைக்காரி உத்தியோகம்தான். உணவு பரிமாறுவதும், எச்சில் தட்டுகளை எடுத்துப் போய்க் கழுவி வைப்பதும் வேறென்னவாம்? தவிர கண்டவர்களையெல்லாம் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்க வேண்டும். எவனாவது தப்பாக நடந்து கொண்டாலோ, குடித்து விட்டு நம் மேலேயே வாந்தி எடுத்தாலோ கூட அந்தப் புன்னகை மாறக் கூடாது."

சுவாதிக்கு அதிர்ச்சியாக இருந்தது.

"சாரி சுவாதி. நீ எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வரணும்னுதான் இதையெல்லாம் சொன்னேன். மற்றபடி எந்த வேலைக்குமே ஒரு கௌரவம் உண்டுதான். அதைவிட, எடிட்டர் என்ன பேசினார் உன்கிட்டே? தெரிஞ்சுக்கலாமா?" என்றாள்.

உடனே அந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளத் தோன்றியது சுவாதிக்கு. "அக்கா, எடிட்டர் என்னுடன் பேசியபோது அம்மாவும், ஷபனாங்கிற ஊழியரும் ஏதோ மலைவாசஸ்தலத்துக்குப் போறதா சொல்லிட்டு, "விதி யாரை விட்டது"ன்னு வேறே சொன்னார். ஏன் அப்படிச் சொன்னாருன்னு உங்களுக்குத் தெரியுமா? ஒருவேளை அங்கே போய் அவங்க உடம்பு ரொம்ப முடியாமல் போயிடுச்சா?"

"இல்லை, அங்கேதான் உன் தலையெழுத்து தொடங்கியது. புரியலியா, அவங்க ரெண்டு பேரும் போனது முசோரிக்கு. அங்கேதான் உங்கம்மா, உங்கப்பாவை முதல் முறையாக சந்திச்சாங்க" என்றாள் சங்கீதா.

(தொடர்ந்து பறக்கும்)



# பனி விழும் உறவு

இந்தச் செய்தி வரும் என்று கொஞ்ச நாளாகவே எதிர்பார்த்திருந்தேன் என்றாலும், சென்னையில் இருக்கும் எனக்கு, வாலாஜாவிலிருந்து சீனு தொலைபேசியில் அழைத்துத் தெரிவிப்பான் என நினைக்கவில்லை.

"செல்லம், நான் சீனு... பெரியப்பா காரியம் ஆயிடுத்து. கண்டன் இப்பத்தான் போன் பண்ணினான். போரூரில் கண்டன் ஆத்துல வச்சுக் காரியம் நடக்கிறது. அப்பா, அம்மா கிளம்பிப் போயாச்சு. வைக்கட்டா?"

பெரியப்பாவுக்கும் தொண்ணூறு வயசு முடிஞ்சாச்சு. நான்கு மாதம் முன்பு அப்பாவுக்கு சதாபிஷேகம் வைக்கும் போதே எங்களுக்கெல்லாம் கலக்கம் தான்.

"நம்ம குடும்பத்துல யாரும் தம்பதி சமேதராய் சதாபிஷேகம் பண்ணிக்கலை. அய்யண்ணாத் தாத்தா எம்பது வயசு நடக்கும்போதே போயிட்டார். உங்க தாத்தா எழுபத்தொன்பதுல. பெரியப்பாவுக்கே பாரு, பெரியம்மை செத்து, பத்து வருஷம் கழிச்சு சதாபிஷேகம் தனியாகத்தானே பண்ணிண்டார்? நமக்கு எப்படிக் கொடுத்து வைத்திருக்கிறதோ யார் கண்டா?" என்றாள் அம்மா.

நான் முன்னிருந்து தேரை இழுத்துத் தெருவில் விட்டாச்சு. நிலைக்கு வரணுமே என்ற கவலை. சதாபிஷேக முகூர்த்தம் மிக அருமையாக நடந்து முடிந்து, அப்பாவும் அம்மாவும் சென்னைக்கு வந்து அவரிடம் ஆசி பெற்றுச் சென்றார்கள். அப்போது கூட நல்ல ஞாபகம், பேச்சு எல்லாம் இருந்ததாகச் சொன்னார்கள்.

தி.நகரும் போரூரும் கட்டாயம் போயே ஆக வேண்டும் என்று நினைத்தால் பிரமாதம் ஒன்றும் இல்லை. ஒரே பஸ்ஸில் போகலாம். ஆனாலும் கல்யாணமாகி வந்த இந்தப் பதிமூன்று வருஷத்தில் ஒருமுறை கூடச் சென்றதில்லை. ஏனோ முடிந்ததும் இல்லை. ஒரு ஞாயிற்றுக்கிழமை மிக அதிசயமாக பானுக்கா வீட்டிற்குச் சென்றபோது அங்கு பார்த்தது.

"யாரு... ஏய்... செல்லம்மாப் பாட்டியா? சௌக்யமாய் இருக்கியாம்மா?

## செல்லம் ராஜு

மாமனார் மாமியார் சௌக்யமா? மாப்பிள்ளை சௌகர்யமா இருக்காரில்லையோ? உன்னை நன்னா வெச்கண்டிருக்காளா?"

அவர் என்னைக் கூப்பிடுவதே 'செல்லம்மாப் பாட்டி' என்றுதான். அவருடைய பாட்டியின் பெயர் எனக்கு இட்டார்களாம். மேலப்பாலூரின் கீழ்மேலான தெருவில் மேலக்கோடியில் பெரியப்பா வீடு. கிழக்கில் எங்கள் வீடு.

பெரியப்பாவுக்கு ஆறு குழந்தைகள். எங்கள் வீட்டில் ஏழு. அந்தக் காலத்திலேயே பெரியப்பாவை தாயாதிக்காரர்களுக்கு அபிமானமாக தாத்தா கொடுத்து விட்டாராம்.



பெரியப்பா வீடு, நிலம், மாட்டுக் கொட்டில், வில் வண்டி என்றிருப்பார். கிழக்காத்தில் அடுப்பில் உலையேற்றி விட்டு அரிசி இல்லாமல் இறக்கி வைத்த நாட்களும் உண்டு.

மேற்காத்துக்குப் பின்புறம்தான் பள்ளிக் கூடம். பள்ளிக்கூட இடைவேளையில் பெரியப்பா வீட்டிற்கு தண்ணீர் குடிக்கப் போவேன். சில சமயம் சகாக்களுடன்.

"குடத்துல ஜலம் விழாம தள்ளி நின் னுண்டு குடிக்கணும்" என்பாள் பெரியம்மா.

பெரியப்பா எழுத்துப் பலகையின் முன் அமர்ந்து மைக்கூடில் பேனாவை முக்கி ஏதாவது எழுதிக் கொண்டிருப்பார். வரவு செலவுப் பேரேடு மாதிரி. காந்தி கண்ணாடி போட்டிருப்பார். அந்தக் காலத்துல வக்கீல் குமாஸ்தாவாக கொஞ்ச காலம் இருந்திருக்கி றார். எழுத்து அப்படியே கோத்தாற்போல் எழுதுவார். கொடுக்கல் வாங்கல், நிலச் சட்ட நுணுக்கங்கள் தெரியும்.

காலையில் மாசானம் வந்து பால் கறந் துட்டானா, பருத்திக் கொட்டை புண் ணாக்கு கலந்து வைச்சுட்டானா என்று பார்த்துவிட்டு காலைக்கடன் முடித்து, காப்பி குடித்து விட்டு வயலுக்கு வேண்டிய வேலையைப் பார்த்து விட்டுக் குளித்து விட்டுப் பூஜை பண்ணுவார். அனேகமாக செம்பருத்திப் பூ இல்லாத நாளே இருக்காது. சந்தனம் மணக்க பூஜை. பத்து மணி அடித் தால் சாப்பாடு. கவளம் கவளமாக உருட்டிச் சாப்பிடுவது பார்க்க அழகாக இருக்கும்.

எங்க அக்காவை மட்டும் அவருக்குப் பிடிக்காது. அக்கா நிர்வாண தேசத்தில் கோவணம் கட்டிய பைத்தியக்காரி. ஆண் பிள்ளைகளுடன் பேசுவதே ரொம்ப அதிகப் பிரசங்கித்தனமாகக் கருதப்பட்ட காலத்தில் அக்கா, மேரியின் பையன் லூர்து ராஜுடன் மாடியில் நின்று பேசுவாள். பொதுவாகவே நல்ல வெடுக் என்றுதான் பேச்சு வரும் அக்காவிடம் இருந்து. பள்ளியிலும் முதல் மதிப்பெண் வாங்குவாள். பேச்சுப் போட்டி யில் முதலில் வருவாள். பெரியப்பா பெண் கோமுவும் அக்கா ரெட்டைதான். அவளுக்கு இதெல்லாம் வரலை. ஒருவேளை அதனால் கூட இருக்கலாமோ?

அம்மாவிடம் அடிக்கடி வந்து சப்தம் போடுவார்.

"உம் பொண்ணு ஆம்பளைப் பயல் களோட பேசிண்டே நடந்து வரா. இங்க


**மங்கையர் மலர்**

ஏப்ரல் 2000


● **அமைதியாக இருக்க என்ன வழி?**

**– 'பிஸி' வி.ஐ.பிக்கள் பேட்டி**

வந்தா அந்த மேரியோட பிள்ளைகளோட பேச்சு. எனக்குத் தெரியாது. பொண்ணைக் கொஞ்சம் அடக்கி வை."

அம்மா சொன்னாலும் அக்கா கேட்க மாட்டாள். காந்தி கிராமத்துக்கு அக்கா வைப் பட்டப் படிப்பு படிக்கச் சேர்த்த போதும் வேட்டி நுனியை இடுப்பில் செருகிக் கொண்டு மூக்குப் பொடியைக் கையில் உதறிக் கொண்டே இப்படித்தான் சொன்னார் :

"அங்கெல்லாம் கலப்பு கல்யாணம் பண்ணி வைச்சுடுவா... உங்க இஷ்டம்."

இதே பெரியப்பா என்னிடம் அலாதி வாஞ்சையோடு நடந்து கொள்வார்.

"செல்லம்மாப் பாட்டி" என்று கூப்பிடும் போதே வாஞ்சை வழிந்து ஓடும். கோலாட் டப் பண்டிகைக்கு ஒம்பது கஜம் புடைவை அம்மாவிடம் சின்னாளப் பட்டுதான் இருக்கும். பெரியம்மாவின் பட்டுப் புடை வையைத் தந்து கட்டிக் கொள்ளச் சொல் வார்.

தீபாவளி, கார்த்திகை என்று நமஸ்காரம் பண்ணப் போனால், 'குழந்தையை ஒக்கலில் தூக்கி வச்சுக்கற ஆம்படையானா வரணும்' என்று சொல்லி ஆசிர்வதிப்பார்.

**நா**ன் ஏழாங்கிளாஸ் படிக்கும்போதே பெரியப்பா நிலத்தை மாசானத்தின் மேற் பார்வையில் விட்டு விட்டு சென்னைக்குப் போய் விட்டார். அங்கு இரண்டு அண் ணாக்களுக்கு வேலையாகி விட்டது. வருஷம் ஒருமுறை நெல் அறுப்புக் காலத்தில் வரு வார். ரொம்பத் தேடிப் பிடித்து பத்து மலைப்பழம் வாங்கிண்டு வருவார்.



# • தூள் கிளப்பும் துப்பட்டா!

# • ஆண்கள் சீறுகிறார்கள்...

## – வாசகர்களின் குமுறல்

47 ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை – 600 097.

பெரியம்மா சர்க்கரை வியாதியில் செத்து, அதன் பின்னர் பெரியப்பா இருபது வருஷங்கள் மாட்டுப் பெண்கள், பிள்ளையுடன்.

யாரைப் பற்றியும் பிரமாதமாக எந்தக் குற்றமும் சொல்ல மாட்டார். பழைய காலத்து கிட்டப்பா பாடல்களை அனாயாசமாகப் பாடுவார்.

"காந்தி கையால கரைச்ச மோரும் உப்புச் சீடையும் சாப்பிடணும்."

அம்மா சீடையை மிக்ஸியில் பொடித்துக் கொடுப்பாள். சாப்பிட்டுக் கொண்டே, ''வடக்கலாத்து பர்வதம் தெரியுமா? தெக்கலாத்து சுப்பையா இருக்கானே? கோணக்கழுத்து கிருஷ்ணன் பிள்ளை அப்பாசாமி, கொண்டைராமன், இந்த ஐபி சாமி இப்படித் தெருவில் ஒருவர் விடாமல் ஊர் வம்பை உழக்கால் அளப்பார்.

போன வருஷம் அண்ணா பெண் கல்யாணத்துக்கு வந்தவர் ஓரமாக ஒதுங்கி உட்கார்ந்து விட்டார். அவரோட பெண் கோமு, "எந்தக் கோட்டையைப் பிடிக்க இந்தக் கிழம் இன்னமும் பூமியில் உட்கார்ந்துண்டு இருக்கு? போய்ச் சேர வேண்டியதுதானே?'' என்றாள். எனக்கு நறுக் கென்றது.

கில் எண்ணெய் மாதிரி இருந்த இவளுக்கு மாப்பிள்ளை தேட செருப்புத் தேய்ந்ததோ, தரை தேய்ந்ததோ என்று எவ்வளவு அலைந்திருப்பார்.

கல்யாணத்துக்குத் தட்டுப் பந்தல் வேண்டாம். கூரைப் பந்தல், இரட்டை நாயனம், டிஷ்யூ புடைவை, முப்பது பவுன் போடும் இடத்தில் ஐம்பது பவுன் என்று எத்தனை விமரிசையாகக் கல்யாணம். கல்யாணம் மட்டுமா? அடுத்தடுத்து வந்த அத்தனை விசேஷங்களுக்கும் எவ்வளவு செய்திருப்பார்?

அப்பாடி.... போரூர் வந்தாச்சு. என்னது.. ஒரு அழுகைச் சப்தம் கூட இல்லை. உள்ளே நுழைந்தால் விபூதியும் பஞ்சகச்சமும் ஒற்றை ருத்திராட்சமும் போடப்பட்டு உடம்பு ஒடுங்கிய பெரியப்பா....

"கல்யாணச் சாவுதான், ஆண்டாச்சு... அனுபவிச்சாச்சு... பேரனுக்கு முதற் கொண்டு குழந்தை பிறந்து பார்த்தாச்சு" – இது கோமு அக்கா.

''மனுஷான்னா கல்லுப் போட்டா வந்திருக்கோம். என்னிக்காவது ஒருநாள் போக வேண்டியதுதானே?'' – இது பெரியக்கா தருமு.

சாவும் கல்யாணந்தான் இவர்களுக்கு.

இந்தத் தொண்ணூறு வயசு மனுஷனின் பாசம், ஆசை, உழைப்பு, தியாகம், தங்களுக்காக அவர் செய்த நல்லது இதையெல்லாம் ஒருகணம் நினைத்தால் அழுகை வராதா?

எனக்கு நெஞ்சை முட்டுகிறது.

"ஒக்கல்ல தூக்கி வைச்சுக்கற ஆம்படையானா வரணும், என்ன, செல்லம்மாப் பாட்டி?'' – பெரியப்பா ஆசீர்வாதம் பண்ணுவது போல் இருக்கு.

"செல்லம்மாப் பாட்டி வந்திருக்கேன் பெரியப்பா'' என்று என் கண்டத்தில் இருந்து குரல் வெடித்துக் கிளம்பி அழுகையாய்ப் பிரவகிக்கிறது. கூட்டம் ஆச்சரியமாய்ப் பார்க்கிறது. ●

# வெற்றிக்கு வழி

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, யாவும் கிட்டும். வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம் அன்னூர் பு.புளியம்பட்டி அருகில் உள்ள கணுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-



ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும், கையெழுத்துமே ஆகும். ஒருவருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும். அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன், தொழில் வசியம், சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க்கோலஜி, கிராபாலஜி, ப்யூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும், 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் உடனே அதிர்ஷ்டம் உண்டாகும்.

அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல மனைவி) அறிவுள்ள குழந்தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம் ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு போன்ற அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு. கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை, செக்ஸ் கோளாறு, மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல், செய்வினை மாந்திரீக பாதிப்பு, தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை, குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வு காண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். சிலர் கடைகளில் விற்கும் பல வகையான புத்தகங்களை வாங்கி தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோ RAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோருக்கும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.



AJITH(அஜீத்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அத் தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால் தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற குணங்கள் இருந்தும் வாழ்வில் வெற்றி பெற முடியவில்லையெனில் அதிர்ஷ்டம் இல்லை என்பது நன்கு தெரிகிறது. இல்லாத அதிர்ஷ்டத்தை பெற இக்கலை வழிகாட்டும்.

வெற்றிபெற துடிப்பவர்களுக்கு இது ஒரு சிறந்த வழிகாட்டியாகும். இதை பயன்படுத்துபவர்கள் அனைவரும் வெற்றியுடன் வாழலாம். என்னால் சவால்விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.

உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும்
**ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்**
நியூமராலஜி–நேமாலஜி–சைன்–தொழில் வசியம்



எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ரஜினி காந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுராம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜ சோழன், அக்பர், புத்தர், மகாவீரர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், செங்குட்டுவன் சேரன், ஆதிசங்கரர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2,4,5,7,8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

இவர் எழுதிய (உலகின் No:1 நியூமராலஜி நூல்)
**"அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்"**
என்னும் புத்தகத்தை வாங்கிப் படியுங்கள். எல்லா ஊர் புத்தக கடைகளிலும் கிடைக்கும். (தபால் மூலம் பெற ரூ. 300/- M.O. செய்யுங்கள். வெளிநாட்டினர் ரூ.1000/- அனுப்புங்கள்.)

**அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடர்**
கே.ஆர். பிரபாகர்ராஜ் எம்.ஏ.,
நல்லாந்தோட்டம், கணுவக்கரை (அஞ்சல்),
புஞ்சைபுளியம்பட்டி (வழி) - 638 459.
கோவை மாவட்டம்.
போன்: (04254) 87258, (098422)-13566.
விடுமுறை: செவ்வாய், வியாழன்

**நீங்களும் அதிர்ஷ்டம், புகழ், வெற்றி பெறலாம்.**



''உங்களுக்கு இரண்டாண்டு சிறைத தண்டனை கொடுத்துட்ட தால நீங்க எலக்‌ஷன்ல நிக்க முடி யாதாமே...?''

''நான் நிக்காட்டி என்ன... என் மனைவியை நிக்க வச்சிட்டுப் போறேன்!''

– சீர்காழி வி. ரேவதி



''.....ஆகவே குற்றவாளிக்கு வழங்கப்பட்ட தண்டனையை எதிர்த்துப் போடப்பட்ட வழக்கில் ரத்து செய்த தீர்ப்பின் மீது வழங்கப்பட்ட தடையை ரத்து செய்ததின் பேரில் மேல்முறையீட்டில் விதிக்கப்பட்ட தடைக்குத் தடை விதிக்கவில்லை என்று தீர்ப்பு வழங்குகிறேன்!''

– ஏரல். நந்தகுமார்.





''சொந்தக்கார் இருந்தும் வக்கீல் வரதன் ஏன் கோர்ட்டுக்கு ஆட்டோவுலயே போறார்?''

'' 'டிராஃபிக்' சந்து பொந்துகள்ல ஆட்டோ பூந்து புறப்படும் போது, அவருக்கு சட்டத்தோட சந்து பொந்துகள்ல பூந்து புறப்பட ஊக்கம் உண்டாகுதாம்!''

– சீர்காழி வி. ரேவதி

# ஆர்டர்!



''வருமானத்துக்கு அதிகமாக ஏராளமாக சொத்து சேர்த்திருப்பதாக உங்கள் மீது குற்றச்சாட்டு. பதிலாக ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?''

''நீதிபதி அவர்களே! யாரோ வேண்டாதவர்கள் செய்த சதி இது! என்னை பொது வாழ்க்கையில் இருந்து அகற்ற இந்தச் சொத்துக்களை எல்லாம் என் மீது எழுதி வைத்திருக்கிறார்கள்!''

– ஏரல். நந்தகுமார்.

# நடக்குமென்பார்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் உங்க முகம் எப்போதும் சந்தோஷத்துல மின்னலடிக்கும். உங்களோட திட்டங்கள், எண்ணங்கள் எல்லாம் நினைச்ச மாதிரியே நடக்கும். கணிதம், எழுத்து, எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கு இப்ப முன்னேற்றம் இருக்கு. வாய்ப்பை நல்லா பயன்படுத்திக்கங்க. வெளிநாட்டுல இருந்து நீங்க எதிர்பார்க்கற லெட்டர் வரும். ஆன்மீகத்துல கொஞ்சம் அதிகமாவே நாட்டம் போகும். கோயில் குளம்னு சுத்துவீங்க. வருமானம் எதிர்பார்த்ததைவிட அதிகமா வரும். உல்லாசம் பார்ட்டினு இருக்கப் போறீங்க. அதேநேரத்துல கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கையாவே இருந்துக்குங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் கவனமா இருந்துக்குங்க. எந்த பிரச்னைனாலும் எதிர்ப்பு, தடங்கல்னு இருக்கும். அரசியல்வாதிகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கும். அப்பா மூலமா நன்மையை எதிர்பார்க்கலாம். வியாபாரிகள் ஒரு முறைக்கு ரெண்டுமுறை யோசிச்சு எதையும் முடிவெடுங்க. கொடுக்கல் வாங்கல் விவகாரத்தை இந்த வாரம் மூட்டை கட்டிடுங்க. வயசானவங்க உடல் நலத்துல கவனம் தேவை. சாதுக்கள் தரிசனம், பெரியவங்க ஆசி மூலமா அமைதியடைலாம்.






**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

எல்லா கிரகமும் உங்களுக்கு சாதகமா இருக்கிறதால செம ஜாலி தான். உங்க புத்திசாலிதனம் பளிச்சிடும். புதிய பொறுப்பு, பதவி தேடி வரும். கலைத் துறை, சங்கீதம், சினிமா துறையில் உள்ளவங்களுக்கு நல்ல முன்னேற்றம் ஏற்படும். எதிரிகள் ஜூட் விடுவாங்க. வேலையில்லாம இருந்தவங்களுக்கு வேலை தேடி வரும். புகழும் பாராட்டும் தாலாட்டும்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கிரகங்கள் உங்களுக்கு சாதகமா இருக்கிறதால உங்கள் ஆற்றல் வெளிப்படும். எந்த வேலைய எடுத்தாலும் வெற்றிதான். சோர்வை மூட்டைக் கட்டித் தூக்கி வச்சுடுங்க. வழக்கு விவகாரங்களில் எதிர்பாராத திருப்பம் வரும். நல்ல செய்தி ஒன்று தேடி வரும். வீட்ல சுப காரியம் நடக்க ஏற்பாடு நடக்கும். வீடு, வாகனம் வாங்க நினைப்பவங்க இப்ப வாங்கலாம். கணவன் மனைவி கொஞ்சம் அளந்து பேசிக்கிட்டா நல்லது. மாணவர்களுக்கு வழக்கமான நிலை தான். அலுவலகப் பணியாளர்கள் கொஞ்சம் கேர்ஃபுலா வேலை பாருங்க.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

எந்தச் சோதனை வந்தாலும் நீங்க சமாளிச்சுடுவீங்க. தெய்வ பலம் உங்க கூடவே இருக்கு. சிலருக்கு வெளிநாடு செல்ல வாய்ப்பு வரும். ஆசிரியர்கள், ஆன்மீகவாதிகள், சட்ட வல்லுனர்களுக்கு இந்த வாரம் நல்ல பலனைத் தரும். கொடுக்கல், வாங்கல்ல அவ்வளவா லாபம் இருக்காது. நல்லவங்களோட பழகுங்க. அப்பாவால சில தொல்லைகள் வரலாம். கணவன் மனைவிக்குள்ள அனுசரிச்சுப் போனா நல்லது. சிறு சிறு சலசலப்பு வரலாம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கொஞ்சம் கவனமாகவே இருக்கணும். மனசுல குழப்பம் இருந்துட்டு இருக்கும். யார்ட்டயும் விட்டுக் கொடுத்துப் பழ

குங்க. எந்தக் காரியத்திலயும் நிதானமா செயல்படுங்க. பிரச்னை வரலாம். கலைத்துறையை சேர்ந்தவர்களுக்கு வாரப் பின்பகுதியில முன்னேற்ற சூழ்நிலை உருவாகும். பிற மொழி, மதத்தைச் சேர்ந்தவங்க உங்களுக்கு உதவ முன்வருவாங்க. உடல்நலத்துல கவனம் தேவை. அவசரம், பதற்றம் இதையெல்லாம் தள்ளி வச்சுட்டு ஒரு முறைக்கு இரண்டு முறை யோசிச்சு வேலைல ஈடுபடுங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்கள் எண்ணங்கள், ஆசைகள் எல்லாம் இந்த வாரம் நிறைவேறும். பார்ட்டிகள்ல அட்டன்ட் பண்ண அழைப்பு வரும். புதிய ட்ரெஸ், நகைகள் வாங்கவும் சான்ஸ் இருக்கு. பண நடமாட்டம் திருப்தியா இருக்கும். திடீர் அதிர்ஷ்டத்துக்கு வாய்ப்பு உண்டு. டும் டும் ஆகாதவங்களுக்கு அதற்கான வாய்ப்பு வரும். அரசியல்வாதிகளுக்கு நல்ல வரவேற்பு உண்டு. மனசஞ்சலம் வரும். அலைச்சலை தவிர்த்துடுங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

எந்த வேலைல இறங்கினாலும் வெற்றிதான். பாராட்டும் மதிப்பும் கூடும். எதிர்ப்புகள் குறையும். நண்பர்கள் முக்கியஸ்தர்களோட உதவிகள் தேடி வரும். பத்திரிகையாளர், சிந்தனையாளர்கள், கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் சம்பந்தப்பட்ட துறைகள்ல இருக்கிறவங்களுக்கு வரவேற்பு இருக்கும். வியாபாரிகளுக்கு நல்ல லாபம் கிடைக்கும். தொழிலாளிகள், விவசாயிகளுக்கு இது நல்ல வாரம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மனத்தில் உற்சாகம் ஊற்றெடுக்கும். பண விஷயம் திருப்தியா இருக்கும். திடீர் அதிர்ஷ்டத்துக்கு வாய்ப்பு இருக்கு. நண்பர்கள், உறவினர்கள் அனவோடு உதவுவாங்க. கணவன், மனைவி உறவு எப்போதும் போலத்தான் இருக்கும். கலைத் துறையை சேர்ந்தவங்க வெற்றியடைய சான்ஸ் இருக்கு. எதிலும் நிதானம் இருங்க. பேச்சில் பதற்றத்தைத் தவிர்த்துடுங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் பிரச்னைகள் இருக்காது. குடும்பத்துல மகிழ்ச்சி தான் பறக்கும். வியாபாரிகளுக்கு இது நல்ல வாரம். கலைத்துறையைச் சேர்ந்தவங்க வெற்றியடைவாங்க. பணம் கொஞ்சம் அதிகமாகவே வந்து குஷிப்படுத்தும். பார்ட்டிகளுக்கு அழைப்பு வரலாம். தயாரா இருங்க. எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் வளர்ச்சி காண்பார்கள். எதிர்ப்புகள் அறவே இருக்காது. வீண் அலைச்சலைத் தவிர்த்துடுங்க. எந்தக் காரியத்துல இறங்கினாலும் கொஞ்சம் சிந்தித்து இறங்குங்க.

# நடக்கும்

## மார்ச் 29 முதல் ஏப்ரல் 4 வரை

## அக்னிசர்மா பக்கம்



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

எந்தக் காரியம் செய்தாலும் வெற்றிதான். மனசை அலைய விடாதீங்க. எதிரிகள் ஓடி ஒளிவாங்க. போட்டி, வழக்கு விவகாரங்களில் நல்ல திருப்பம் வரும். வீடு, நிலம், வாகனம் வாங்க வாய்ப்பிருக்கு. நண்பர்கள் உதவ முன் வருவார்கள். பேச்சில் கடுமையைக் குறைச்சுடுங்க. எல்லார்ட்டயும் இனிமையா பேசுங்க. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு வரவேற்பு அதிகரிக்கும். குடும்பத்தில பிரச்னை ஏற்பட்டு விலகும். பொருளாதார விஷயங்களில் கவனமா செயல்படுங்க.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பொருளாதாரப் பிரச்னை இருக்காது. மதிப்பும் மரியாதையும் கூடும். கலைத் துறை சேர்ந்தவங்களுக்கு நல்ல வளர்ச்சி உண்டு. புதிய பொருள்கள் உங்கள் வீட்டை நிறைக்கும். குடும்பத்துல மகிழ்ச்சி நிகழும். சின்னச் சின்னப் பிரச்னைகள் ஏற்பட்டாலும் பெரிய பாதிப்பு ஏதும் வராது. பொறுப்புணர்வோட செயல்படுங்க. பேச்சில் நிதானம் தேவை. அவசரம், பதற்றம் கூடாது. ●

ரபியுதினிடம் தனது தொப்பியைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தார் அத்தா. வெல்வெட் துணியால் தைக்கப்பட்ட கருப்புத் தொப்பி அது. பழையதாகி விட்டது. முயலின் மேல் தோல் போல மிருது வாக இருந்ததெல்லாம் போய் வியர்வை ஈரம்பட்டுப் பிசுபிசுத்தது. ஓரங்கள் நைந்து விட்டன. உள்ளே விரைப்புக்காகத் திணித்திருந்த அட்டை தெரிந்தது. உட்பக்க சாட்டீன் துணி தையல் பிரிந்து வெளியே பிதுங்கியது.

இந்த ஊரிலும் கருப்புத் தொப்பி கிடைக்கும். இத்தனை நேர்த்தி கிடையாது. நாட்படவும் உழைக்காது. கணியூரில் ஆர்டர் கொடுத்து செய்தது. அதனை அணிந்து கொள்ளும் போது உண்டாகும் கம்பீரமே தனி. காதர்பாயும், அவரது மகன் முகமதலியும் தொப்பி செய்வதில் கில்லாடிகள்.

"அப்படீங்களா மாமு?" என சலிக்காமல் கேட்டுக் கொண்டிருந்தான் ரபியுதீன். வீட்டில் யாரும் அவருடன் அதிக நேரம் பேசுவது கிடையாது. கேட்டதையே மறுபடியும் வேறு வேறு வார்த்தைகளில் கேட்கும்படி இருக்கும். ரபியுதீனின் பொறுமைதான் அவனிடத்தில் அவருக்குப் பிடித்திருக்க வேண்டும். ஊரிலிருந்து எப்போது வந்தாலும், "வாடா... மாப்ளை" என பக்கத்தில் இருத்திக் கொள்வார்.

"நீ எனக்கு ஒரு காரியம் பண்ணணும்... மாப்பிள்ளை"

"நோம்புக்கு உம்மாமனார் வீட்டுக்குப் போனா.... இதே மாதிரி ஒரு தொப்பி வாங்கிட்டு வந்துரு..."

"சரி மாமு..."

அத்தாவின் முகம் மலர்ந்தது. பனியன் ஜேப்பிக்குள் கையை விட்டு பத்திரப்படுத்தியிருந்த பத்து ரூபாய்த் தாளைப் பிரித்து நீட்டினார். "இந்தா....! இதை வச்சுக்க..."

"இதெதுக்கு... நான் வாங்கிட்டு வர்றேன் மாமு..."

"சும்மா புடிடா... நீயும் புள்ளைக் குட்டிக்காரன்..." நடுக்கும் அவனது கரங்களைப் பிடித்துக் கொண்டு, சட்டைப் பையில் பணத்தைத் திணித்தார்.

கணியூரில் பள்ளிவாசல் தெருவிலிருந்த காதர்பாயின் விலாசத்தையும் அவனது அடையாளங்களையும் சொன்னார்.

"என்ன... வேலை கொஞ்சம் ஜாஸ்தி சொல்லுவான். இன்னாருக்குன்னு சொல்லு... என்னை அவனுக்குத் தெரியும்..."

"சரி..."

உள்ளே இருந்து சுலையா, "ரபீ..." என்று கூப்பிட்டாள்.

"அக்கா கூப்பிடுது... இருங்க வர்றேன்."

"அவசரமாப் போகணும்னே... சாப்பாடு ஆயிருச்சு... வந்து உக்காரு..."

எதிரில் வந்த சுல்தான், "தொப்பி ஏவாரம் முடிஞ்சதா?" எனக் கேட்க, தலைதாழ்த்தி



# தொப்பி

## மும்தாஜ் யாசீன்

சிரித்தான். கேலியோ ஏளனமோ இல்லாத பாந்தமான சிரிப்பு. அத்தாவைப் பற்றிப் பரிதாபப்படுவது போலிருந்தது.

"தொப்பி எவ்ளோ வெலையாகும்?" எனக் கேட்டான் சுல்தான்.

"நூறுக்குக் குறையாது மச்சான்..."

"சரி... வாங்கிட்டு வந்துரு. நான் பணம் தர்றேன்."

"பணம் கெடக்குது. இப்ப கணியூர்ல தொப்பி செய்யற ஆளுக ஆரும் கெடையாது. காதர்பாய் மவுத்தாகி ரொம்ப நாளாச்சு. அவரு பசங்களும் பொழைக்க வெளியூர் போயிட்டானுக...."

சுல்தான் பெருமூச்சு விட்டான்.

"இப்பல்லாம் ஆரு கருப்புத் தொப்பி போடறா...? வெள்ளைத் தொப்பிக் காலம்லா இது...

"அதெல்லாம் போட மாட்டாரு. கவுரவம் கொறைஞ்சுருமே..." என்றாள் சுலையா.

சுல்தான் முறைக்க, "நீ உக்காருடா... நேரமாச்சு..." என்றாள்.

"மதுரைப் பக்கம் கெடைக்கும். ஏவாரத்துக்குப் போறப்ப ஒண்ணு வாங்கிட்டு வந்துரு..."

ரபியுதீன் தலையாட்டினான்.

அத்தாவின் ஒரு உறுப்பு போலவே தினசரி பார்வையில் பட்டுக் கொண்டிருந்த போதும், தொப்பியின் பழைமையைத் தான் ஏன் உணரவில்லை என நினைத்தான் சுல்தான்.

இன்றைக்கு அவரே சொல்லும்படி ஆகிவிட்டது. ரொம்ப நாளாகவே மனத்திற்குள் வைத்திருப்பார் போல. வருத்தமாக இருந்தது.

எப்போதும் இஷா தொழுகைக்குப் பிறகு படுத்து விடுகிறவர் அவன் கடை அடைத்து விட்டு வருகிற வரைக்கும் விழித்திருந்து கண்களில் படுகிற விதமாக உலாவுவதிலிருந்தும், தொண்டையைச் செருமி தன் இருப்பைப் புலப்படுத்துவதன் மூலமும் அவனாகவே உணர்ந்து, "என்ன..." என்று கேட்க வேண்டும்.

அப்போதும் தயங்கி, சுலையா அருகில் இல்லை என்பதை உறுதிசெய்து கொண்டு மெதுவாகச் சொல்லுவார். அம்மாவின் வருஷப் பாத்திகா நெருங்குவது பற்றியோ, மூத்த மகள் கதிஜாவை பெரிச்சிபாளையம் போய்ப் பார்த்து விட்டு வர விரும்புவதாகவோ, நடந்தால் வலிக்கும்படி முழங்கால் வீங்கியிருப்பது பற்றியோ இருக்கும்.

அம்மா இருந்தபோது அவள் மூலம்தான் அத்தாவுக்கு எல்லாம் நடந்தது. அவரையும் சேர்த்தே அம்மா நிர்வாகம் செய்தாள்.

நான்கைந்து குழந்தைகளும், கிழிந்த கோட்டும், கையில் குடையுமாக கணக்குப் பிள்ளைகள் அடையாளம் காணப்பட்ட காலம் அது. அத்தா அப்படித்தான் இருந்தாரா என்று தெரியாது. ஆனால் ஆரம்ப கால கஷ்டங்கள் பற்றி அம்மா சொன்னது உண்டு. எப்போதாவது மனம் நெகிழ்ந்த சமயங்களில் கடந்து வந்தவைகளைச் சொல்லி முடிக்கும் போது அனேகமாகக் கண்களில் ஈரம் திரண்டிருக்கும்.

அத்தாவுக்கு வாரம் இரண்டு தரம் முகச் சவரம் செய்து கொள்வது தவிர வேறு செலவுகள் கிடையாது. சம்பளப் பணத்தை அப்படியே அம்மாவிடம் கொடுத்து விடுவார். அரிசி, பருப்பு, சலவைக்கூலி, கல்யாண மொய் எல்லாம் அம்மாதான் பார்த்துக் கொள்ள வேண்டும்.

சந்தோஷமான தருணங்களில் அம்மா அவரைச் சீண்டுவது உண்டு. "பருப்பு என்ன விலைன்னு சொல்லுங்க பார்ப்பம்..."

"ஏன்... கேட்டு இப்ப என்ன ஆகப் போவுதாம்?"

"சும்மா ஒரு இதுக்குத்தான்... சொல்லுங்க..." அம்மாவின் முகம் குறுகுறுவென்று இருக்கும். இலேசில் ஒப்புக் கொள்ள மாட்டார். எல்லோரும் சேர்ந்து வற்புறுத்தினால் வாய் திறப்பது உண்டு. "என்ன... ஒரு பத்து பன்னெண்டு இருக்கும்..."

"கேளுங்கடா..." அம்மா ஓவென்று சிரிப்பாள். இலேசில் ஓயாத சிரிப்பு. "அது பத்து வருஷம் முந்தி.... இப்ப இருபத்து ஆறு

ருவாயாக்கும்.''

**வீ**ட்டு வாடகைப் பணத்தில் எஞ்சிய காலத்தை ஓட்டி விடுவது என்ற முடிவுடன் இருந்தவரை கட்டாயப்படுத்தி அவன்தான் கூட்டி வந்தான்.

புதிய ஊர், புதிய மனிதர்கள். அவரால் இயல்பாக இருக்க முடியவில்லை.

முன்னெல்லாம் பள்ளிவாசல் பிரதான மாக இருந்தது. போக்குவரத்து நெரிசலும்; நாலெட்டு சேர்ந்த மாதிரி நடந்தால் தள்ளாடுகிற மாதிரியும் வந்த பிறகு, ''வேணாம்ப்பா... எங்கேயும் உள்ளவன் தானே இங்கேயும். வீட்டிலேயே தொழுதுக் கறேன்...'' என்று தானே ஒதுங்கிக் கொண்டார்.

வந்த நாளில் இருந்தே கைச்செலவுக்கு என்று கல்தான் ஏதாவது கொடுத்தாலும் வாங்கிக் கொண்டதில்லை. ''எனக்கென்னப்பா செலவு?'' என மறுத்து விடுவார்.

அவருக்கென்று எது வாங்கி வந்தாலும் இலேசில் ஏற்றுக் கொள்ள மாட்டார். ஸ்வெட்டர் வாங்கிக் கொடுத்த போதும் அப்படித்தான்.

"என்ன வெலை?''

சொன்னான். மயங்காத குறைதான். "அம்புட்டுக் காக போட்டு வாங்கணுமா... வேணாம்ப்பா...''

அவன் எவ்வளவோ வற்புறுத்தியும் இன்று வரைக்கும் உடுத்தவே இல்லை.

**இ**ரமலான் மாதம் வந்து விட்டது.

வயதானவர்களுக்கு விரதம் கடமை இல்லை என்றாலும், அத்தா பிடிவாதமாக இருந்தார். அதே தொப்பி. கிழிந்த பகுதிகளைத் தைத்து அணிந்து கொண்டார்.

அம்மாவும், தனது முன் இருப்பும் நிச்சயம் ஞாபகம் வரும். வேதனை இருக்கும் என நினைத்தான் கல்தான்.

கஷ்ட நேரத்திலும் அவரது கம்பீரத்தைக் குலைய விட்டவள் இல்லை அம்மா. நினைவு தெரிந்தவரை மடிப்புக் குலையாத உடுப்பும், பளபளக்கும் தொப்பியுமாகத்தான் அவரைப் பார்த்திருக்கிறான். அம்மாவின் பெரியக்கா கிரனூரில்தான் இருந்தது. அந்தம் மாவின் தயவால், வீட்டில் அந்துருண்டை வாசனையுடன் எப்போதும் ஒரு புதுத் தொப்பி இருக்கும்.

அத்தாவின் தற்போதைய எளிமைத் தோற்றம் உறுத்தலாக இருந்தது. "தகப்பனை வச்சுக் காப்பாத்தற லட்சணம் பாரு...'' என ஊரில் நாலு பேர் இளக்காரமாக நினைக்கும்படியாய்....

ரபியுதீனிடமிருந்து கடிதம் ஒன்றுமில்லை. அக்காளின் ஞாபகம் வந்தால் திடுதிப்பென்று புறப்பட்டு வருகிறவனுக்கு, நான்கு வரியில் கடிதம் எழுத வளையாது. இன்னும் ஒரு வாரம் பொறுப்பது. அதற்குள் ஆள் வராவிட்டால் இங்கேயே ஒரு தொப்பி வாங்கி விடுவது என்று தீர்மானித்தான்.

**எ**ப்போதும் நோன்பு பதினைந்திற்குப் பிறகுதான் துணிமணிகள் எடுப்பது வழக்கம். பெரிய பையன் நச்சரித்ததால் முதல் வாரமே ஜவுளிக் கடைக்குப் போகும்படி ஆயிற்று.

"அத்தா... நீங்களும் வர்ரீகளா?''

''வேணாம்ப்பா... நீங்க போய்ட்டு வாங்க...''

கல்தான் புறப்பட்டான்.

பையன்களுக்கு மட்டும் எடுப்பது என்



திருந்த திட்டம் கடைக்குப் போனதும் மாறி விட்டது. சுலையா தனக்கும் வேண்டும் என்று சொன்னாள். பெரும்பாலும் கல்தான் பண்டிகையன்று புதுத் துணி போடுகிறது இல்லை. அத்தாவுக்கு வேட்டியும், சட்டையும் எடுத்தான். கடைக்காரன் அவருடைய துணியைக் கிழிக்கும்போது அவளது முகம் ஒரு மாதிரியாக இருந்தது.

வீட்டிற்கு வந்ததும் எப்போதும் புதுச் சேலையைப் பிரித்து தன் மீது போட்டுக் கொண்டு கண்ணாடியில் பார்க்கிறவள், தொப்பென்று கட்டிலில் உட்கார்ந்தாள். கல்தான் துணிப்பையைக் காட்டி, "சுலையா... இதெல்லாம் அத்தாகிட்ட காட்டிட்டு வந்துரு...''

சுலையா அசையாமலிருந்தாள்.

"விலைச் சீட்டை கிழிச்சுட்டுக் காட்டு...'

"இல்லேன்னா... கணக்குக் கேப்பாரா?''

"இந்தா... நான் அதுக்கா சொல்றேன்...''

ஒவ்வொரு துணியாக எடுத்து தானே விலைச் சீட்டுக்களைக் கிழித்துப் போட்டான்.

"ஏன் கிழிக்கிறீக?"

"..............."

"திட்டுவார்னா..."

"அவரு திட்டி பார்த்திருக்கியா?"

"என் சம்சாரம் குழந்தைகளுக்கு நான் சம்பாரிக்கறேன். வாங்கறேன்னு தைரியமாச் சொல்லணும். இப்படி பயந்த ஆம்பளைய நான் பாத்ததில்லை. அதான்... மூணு பெத்துட்டு இங்க வந்து டேரா போட்டுட்டாரு போல..."

பேச்சோடு பேச்சாக பட்டென்று வார்த்தை வந்து விழுந்தது. புது வார்த்தை - புது அர்த்தத்துடன்.

அவனுக்கு சுளீரென்று சூடுபட்ட மாதிரி இருந்தது.

உள்ளுக்குள் இத்தனை விஷமா? வந்து ஒரு வருடம் கூட ஆகவில்லை. அதற்குள் பொறுக்க முடியாமல்...

அவர் இருக்கும் வரை அம்மாவின் ஆயுளை நீட்டியிருக்கக் கூடாதா இந்த ஆண்டவன்?

***"என் மனைவியோட குடுமியைப் பிடிச்சு, அவ கன்னத்துல ஓங்கி அறையப் போறப்ப..."***

***"போறப்ப?"***

***"கனவு கலைஞ்சிடுச்சு!"***

***– ஜூனியர் சக்தி***

எப்போதும் கடைக்கு வந்து விட்டால் சுல்தானுக்கு வேறு சிந்தனையே தோன்றாது.

இந்த இரண்டு தினங்களாக அத்தாவைப் பற்றியே அடிக்கடி நினைக்கும்படி இருந்தது.

அண்ணனுக்கு வசதி போதாது. காய்கறி மார்க்கெட்டில் கமிஷன் ஏஜெண்டாக இருந்தார். மூன்று குழந்தைகள். அண்ணிக்கு பெருங்கை. எத்தனை வந்தாலும் போதாது. இவ்வளவு வருஷம் உழைத்தும் இன்னும் வாடகை வீடுதான்.

அக்காவுடன் அவளது மாமியார் இருந்தார்.

தன்னைத் தவிர அத்தா தங்குவதற்கு வேறு வசதியான ஏற்பாடு கிடையாது. சுலையாவுக்கு ஏன் இது புரியவில்லை?

பக்கத்துக் கடைக்கு போன். ஓடிப் போய் பேச, ரபியுதீன். அத்தாவுக்கு தொப்பி வாங்கி விட்டான். சிங்கப்பூர் தொப்பி. அதே மாடல். விலைதான் அதிகம். இரு நூறு. பார்சலில் அனுப்பி விட்டானாம்.

சுல்தானுக்கு சந்தோஷமாக இருந்தது. மனதுக்குள் ஒரு துள்ளல். "அப்பாடா..." என்ற நிம்மதி.

கொஞ்சம் சீக்கிரமாகவே கடை அடைத்து விட்டுப் புறப்பட்டான்.

அத்தா ஆச்சரியப்படும்படி புதுத் தொப்பியையும் எடுத்துக் காட்ட வேண்டும். பழைய கம்பீரத்துடன் தன்னைக் காணும் அவரது மகிழ்ச்சியைத் தள்ளி நின்று ரசிக்க வேண்டும்.

வீடு அமைதியாக இருந்தது. "எங்கே யாரையும் காணம்..."

"பெரியவனும் அவரும் தொழுகைக்குப் போயிருக்காக..." என்றாள் சுலையா.

மணி பார்த்தான். வருகிற நேரம்தான். சுலையா சாப்பாடு பரிமாறினாள். "என் தம்பி தொப்பி வாங்கி அனுப்பியிருக்கான்..."

பார்சலைக் கொண்டு வந்தாள். தொப்பி நேர்த்தியாக இருந்தது. ரபியுதீனைப் பெருமையுடன் நினைத்துக் கொண்டான்.

ஹாலுக்கு வந்தான். அத்தாவின் அறை திறந்திருந்தது. பெரியவன் அவருடன்தான் படுத்துக் கொள்கிறான். இறைந்து கிடக்கும் பாடப் புத்தகங்கள். விளையாட்டு சாமான்கள். ஜன்னல் திட்டில் பழைய தொப்பி.

சுல்தான் முகத்தில் இளநகை படர்ந்தது. புதியதைக் கண்டதும் பழையதை ஒதுக்கி விட்டாரா?

"பார்சலை அவரு பார்த்தாரா?" என்று கேட்டான்.

"ம்..."

"என்ன சொன்னாரு?"

"இது வேணாமாம்... வாபஸ் குடுக்கச் சொல்றாரு..."

"ஏன்... என்னாச்சு?"

"தெரியலை..."

"நீ ஏதாச்சும் சொன்னியா?" தயக்கத்துடன்தான் கேட்டான். அவளுக்குக் கோபம் வந்து விட்டது. "நான் என்ன சொல்வேன்... நம்பாமக் கேக்கிறீக?"

"ஒண்ணுமில்லை......"

சுல்தான் மறுபடியும் பார்சலை எடுத்துப் பார்த்தான். என்ன குறை?

தொப்பியைப் புரட்டிப் பார்க்க, விலைச் சீட்டு தெரிந்தது.

காரணம் விளங்கி விட்டது. சுலையா... சுலையா....

தூரத்தில் பெரியவனின் கையைப் பிடித்தபடி அத்தா வருவது தெரிந்தது. தலையில் மலிவு விலை வெள்ளைத் தொப்பி. ஒருகணம், யாரோ போல இருந்தது. ●

● அவ்வை கே. சஞ்சீவிபாரதி, கலிங்கியம்.

? மக்கள் தொகை கணக்கெடுப்பை சாதி வாரியாக நடத்தவேண்டும் என்கிறாரே டாக்டர் ராமதாஸ்?

! சாதிக்கட்சியைத் தோற்றுவித்து வளர்த்தவர் தானே அவர். அவர் அப்படிக் கேட்பதில் அதிசயம் ஒன்றுமில்லையே!

● எம். சம்பத், வேலாயுதம் பாளையம்.

? ராப்ரி ஆட்சியை, 'பீஹார் வரலாற்றில் இருண்ட காலம்' என்று வர்ணித்த காங்கிரஸே, அது தொடர ஆதரவளித்திருப்பது எதைக் காட்டுகிறது?

! இப்போதைய முடிவு, வசதி கருதித்தான் என்பதைக் காட்டுகிறது. இருட்டிலும் விழிப்புடன் இருந்தால் நடக்கும் கொள்ளையைத் தடுக்கலாம்; அல்லது கூட்டுச் சேர்ந்து கொள்ளையடிக்கலாம்; எவ்ளோ சௌகரியம் பாருங்க!





• காப்பாற்றும் காமராஜர்! • சினிமா இலக்கணம்!

# 'காமராஜ் ஆட்சி' என்கிறாரே கலைஞர்?

● கே. நாராயண பாலகிருஷ்ணன், கும்பகோணம் – 1.

? சத்தியமூர்த்தி பவன், போயஸ் கார்டன் தங்கள் கனவில் அடிக்கடி தோன்றுவது எது?

! கோபத்துடன் படுக்கப் போனால் போயஸ் கார்டன்; வருத்தத்துடன் படுக்கப் போனால் சத்தியமூர்த்தி பவன்!

● ஜி. ஜி. கிருஷ்ணன், விசலூர்.

? மீண்டும் ஆட்சிக்கு வந்தால் தி.மு.கவை அழிப்பேன் என்கிறாரே ஜெ?

! ஊழலை ஒழிப்பேன் என்று சொல்ல முடிகிறதா பாருங்கள்! தனிநபர் துவேஷ அரசியல் என்பது இதுதான்.

● கதி. அருணாசலம், ஈரோடு – 1.

? சினிமா ஒரு சூதாட்டம் என்கிறாரே ஆர்.எம். வீரப்பன்?

! எம்.ஜி.ஆரை வைத்து ஆர்.எம்.வீ. எடுத்தபோது கூடவா? சூதாட்டமா இல்லையா என்பது தயாரிப்பாளர் – டைரக்டர் ஆகியோரது அணுகுமுறையின் அடிப்படையில்தான் அமையும்.

• பிளஸ் பாயின்ட்!


• ஒரே...


• மேடையில்...?


• 'புதிய' கணக்கு!


• சாரமுள்ள கணிப்பு

● நெய்வேலி க. தியாகராஜன்,
கொரநாட்டுக்கருப்பூர்.

? 20.12.98 கல்கி தலையங்கத்தில், 'அரசியல் ரீதியான அணிவகுப்பு' அல்லது கூட்டணி என்று வரும்போது இதர கட்சிகள் அ.தி.மு.கவைச் சுற்றி முன்வேலி அமைத்துத் தனிமைப்படுத்துவது மட்டுமே தமிழகத்துக்கும் ஏன் இந்தியாவுக்கும் கூட நல்லது' என்று எழுதப்பட்டிருந்தது. ஆனால், இன்று நிலைமை அதற்கு நேர்மாறாக உள்ளதே?

! கல்கி தலையங்கங்கள் நாட்டுக்கு எது நல்லது என்ற நோக்கில் எழுதப்படுகின்றனவேயன்றி என்ன நடக்கும் என்று ஜோதிடம் கூறும் நோக்கில் அல்ல.

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? ராப்ரி தேவி அரசு நீண்ட நாட்கள் நீடிக்காது என்னும் ஜனா கிருஷ்ணமூர்த்தியின் கணிப்பு சரியாக இருக்குமா?

! அது லாலு – ராப்ரி மீதான வழக்கைத் தொடர சி.பி.ஐ. எந்த அளவுக்கு மத்திய அரசால் முடுக்கிவிடப்படுகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. எனவே ஜனா சொன்னால் அதில் அர்த்தமில்லாமல் போகாது!

● ஆர்.ஆர். சாமி, திருவண்ணாமலை.

? தன் மீது ஊழல் புகார் கூறிய வாழப்பாடியைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்புவேன் என்கிறாரே டாக்டர் ராம்தாஸ்?

! தங்கள் தலைவர் மீது வாழப்பாடி புகார் சொன்னதற்காகத் தங்களைத் தாங்களே செருப்பால் அடித்துக் கொண்ட பா.ம.க. தொண்டர்களை என்ன செய்வாராம்...?

● அஜார்,
சென்னை – 18.

? மூப்பனார் தனது கட்சியை காங்கிரசோடு இணைத்து விட வேண்டியது தானே? எதற்காகத் தனியாக ஒரு பிரைவேட் லிமிடெட்?

! எதிர் அணியில் இருந்தாலும் ஆட்சிக்கு வந்தாலும் பேரம் பேசும் ஆதாயம் இருப்பதால்!

● ஜோ. பன்னீர்செல்வம்,
சென்னை – 84. ❑

? 'உலகிலேயே அதிக பதற்றம் நிறைந்த இடம் இந்திய – பாகிஸ்தான் எல்லைக் கோடு அமைந்த இடம்' என்று அமெரிக்க அதிபர் கிளின்டன் கூறியிருப்பது இந்தியாவுக்குப் பிளஸ் பாயிண்டா? பாகிஸ்தானுக்குப் பிளஸ் பாயின்ட்டா?

! அமெரிக்காவுக்குப் பிளஸ் பாயின்ட்! அதன் 'காவல் தெய்வம்' இமேஜுக்குப் பிளஸ் பாயின்ட்!

● சி. கலாதேவி, விருதுநகர். ✱

? இந்தியாவின் பொருளாதார நிலை மேன்மையடைய வழி என்ன...?

! கல்வி + கைத்தொழில் = சுயதொழில் + சுய சார்பு என்ற ஃபார்முலா.

● க. கந்தையா, நாகர்கோவில்.

? காமராஜ் ஆட்சி நடத்துகிறேன் என்கிறாரே கருணாநிதி?

! மூப்பனார் இப்படிப் பேசக்கூடிய வாய்ப்பை நிரந்தரமாக இழந்து நிற்கிறார் என்பது தெரிந்து கருணாநிதி சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். த.மா.காவின் போக்கால் வெறுத்துப் போயிருக்கக்கூடிய வாக்காளர்களுக்கு இதமளிக்கும் பேச்சு.

● ஆர்.சுப்பராவ், திருக்கோவிலூர்.

? சென்னையில் நடைபெறும் இந்திரா காந்தி உருவச்சிலை திறப்பு விழாவுக்கு சோனியா வருகிறாரே... ஜெயலலிதா சோனியாவுடன் மேடையில் காட்சி தருவாரா? இல்லை மீண்டும் மூக்குடைப்பாரா?

! உடைப்பதற்கு மூக்கு பாக்கி இருக்கிறதா, என்ன?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஜோ. பன்னீர்செல்வம்,
21, டாக்டர் அழகப்பா ரோடு,
புரசைவாக்கம்,
சென்னை - 600 084.

✱ ரூ. 25 பரிசு பெறுபவர் :
சி. கலாதேவி,
6/968, ஐ.டி.பி.டி. காலனி,
பேரளி ரோடு,
விருதுநகர் - 626 001.



# கூத்தடிக்கறாங்க!

கிளிண்டன் வருகையை ஒட்டி சற்றே அடங்கியிருந்த பீஹார் 'குடுமிபிடி'கள் மறுபடியும் தொடங்கிவிட்டன - சற்று பலமாகவே.

நிதிஷ்குமாரை இறக்கி விட்டு, காங்கிரஸ் தயவுடன் மீண்டும் அரியணை ஏறிய ரப்ரிதேவியைக் குளிர் ஜுரத்தில் தள்ளப் பார்க்கிறது, அதே காங்கிரஸ்!

ஊழல் வழக்கின் பிடி இறுகினால் (குற்றப்பத்திரிகை தாக்கலானால்) ராப்ரியை நீக்கிவிட்டு, லாலுவே முதல்வராக வேண்டும் என்றும், அவர் மீதும் 'சனி பார்வை' விழுந்து விட்டால், ராஷ்ட்ரீய ஜனதா தளத்தின் வேறொரு தலைவர் (காங்கிரஸுக்குச் சாதகமாக செயல்படக்கூடியவர் என்று அர்த்தம்) முதல்வராக வேண்டுமென்றும் பேரத்தைத் தொடங்கிவிட்டது காங்கிரஸ்.

இதன் ஒட்டுமொத்த அர்த்தம் என்னவென்றால், 'கயிறு என் கையில்; நீ வெறும் பொம்மை' என்பது.

பதவிப் பிரமாணம் முடிந்து வீட்டுக்கு வந்து, தோட்டத்தை ஒரு ரவுண்ட் அடித்து முடிப்பதற்குள் எழுந்து விட்ட இந்த பேரத்தால் கடுப்பாகிப் போன லாலு, உடனே டெல்லிக்கு விரைந்தார்.

மூத்த காங்கிரஸ் தலைவர்கள் சிலரைச் சந்தித்து, 'எங்கிட்ட மோதாதே!' என எச்சரித்திருக்கிறார்.

'மறுபடியும் ஆட்சி, பிஜேபி கூட்டணிக்கே போய்விடும்படி செய்து விடுவேன்' என்பதுதான் அவரது மிரட்டலின் சாரம்.

ஆனால் காங்கிரஸ் வட்டாரம் படு தெம்பாக இருக்கிறது. 'லாலு இப்போது ஒரு தண்ணீர்ப் பாம்பு. அது சீறினாலும் கடிக்க முடியாது. கடித்தாலும் ஆபத்தில்லை' என்கிற தைரியத்துடன் இருக்கிறார்கள்.

இதற்கிடையில், அமைச்சரவை விஸ்தரிப்பில் தனது இரண்டாம்கட்ட பேரத்தைத் தொடங்கி விட்டது காங்கிரஸ்!

நீர்ப்பாசனம், பொதுப் பணித்துறை, விவசாயம், கிராமப்புற வளர்ச்சித் துறை, மின்சாரம், நிதி போன்ற துறைகளை கேபினட் அந்தஸ்துடன் தனக்குத் தந்துவிட வேண்டுமென்பது காங்கிரஸின் கண்டிஷன்! இது தவிர, தாங்கள் சொல்லும் சில தொழில்நுட்ப வல்லுநர்களை அமைச்சர் அந்தஸ்தில் ஆலோசகர்களாக நியமிக்க வேண்டும் என்றும் கொசுறு கண்டிஷன்.

வேறு வழியின்றி லாலு இதில் பெரும்பாலானவற்றை ஒப்புக் கொண்டிருப்பினும், "சோனியா கேட்பதற்கெல்லாம் பணிந்து போகாதீர்கள். பிறகு பெரும் ஆபத்து வந்து விடும்!" என்று லாலுவை எச்சரித்திருக்கிறார், அவருக்கு மிக நெருக்கமான ஒரு சட்ட நிபுணர்.

மத்திய அரசியலை பீகார் ஆட்டிப் படைத்த காலம் போய், இப்போது பீகார் அரசை காங்கிரஸ் ஆட்டி வைக்கும் நேரம்! இனி நிமிஷத்துக்கு நிமிஷம் கிளைமாக்ஸ் தான்!

டெல்லியிலிருந்து : **வெங்கட்**

# இந்திரா செளந்தர்ராஜன்



**நா**ன் மதுரைவாசியாகி சரியாக 20 வருடங்கள் ஆகின்றன. அதற்கு முன் சேலத்தில் இருந்தேன்.

'சென்னைக்கு அடுத்த பெரிய நகரம்,
வைகை ஆறு பாயும் பூமி,
ஆறு படை வீட்டில் மூன்று படை வீட்டை தன்னகத்தே கொண்டவர்' - என்கிற கித்தாப்புகளோடு மங்கம்மாள் நிர்மாணித்த சாலைகள், வண்டியூரில் உள்ள மகா பெரிய தெப்பக் குளம், மீனாட்சியம்மன் கோவில், நாயக்கர் மகால் என்கிற மஜாக்களும் மிகுந்திருந்ததால் சேர நாட்டிலிருந்து (சேலம்) பாண்டிய நாட்டிற்கு நான் வரும்போது நிறைய கனவுகள், கற்பனைகள் இருந்தன.

ஆனால் நேரில் இவற்றை தரிசித்தபோது கற்பனைக்கும் நிஜத்துக்குமான உண்மையான இடைவெளி எவ்வளவு என்பது துல்லியமாகப் புரிந்து போயிற்று.

வண்டியூர் தெப்பக்குளத்தை காலம் கிரிக்கெட் மைதானமாக்கி விட்டிருந்தது! பொற்றாமரைக்குளம் இன்று பொற்றாமரைத்தொட்டி! (குளத்தின் தரையை சிமெண்டு போட்டு பூசி விட்ட பிறகு வேறு எப்படி அழைப்பதாம்?)

நாயக்கர் மகால்கூட ஏ.வி.எம் ஸ்டுடியோ போலாகிவிட்டது. (மணிரத்னத்துக்கு ஒரு ஷாட்டாவது இங்கே வைத்தாக வேண்டும்... வசந்துக்கும் அதே காய்ச்சல்.)

சேலத்தில் சினிமா தியேட்டர்கள் அரண்மனைகணக்கா இருக்கும். 15, 20 தியேட்டர்களை ஒரே வரிசையில் பார்க்கலாம்.

இங்கே நேர் எதிராக, ஒரு கிட்டிச் சந்தில்கூட அவை இருந்தது மகா ஆச்சரியம்.

அதிலும் மீனாட்சி தியேட்டர் சந்து ஒரு உலக அதிசயம். இந்தச் சாலையில் விமானம் ஒன்றுதான் இதுவரை நுழையவில்லை. செல்லமாக சிலர் இதை 'மதுரை மவுண்ட்ரோடு' என்பார்கள். இந்தத் தெருவில் குடியிருப்பவர்களுக்கு சப்தம் இல்லையென்றால் தான் தூக்கம் வராது! இத்தனைக்கும் இதன் அகலம் ஜஸ்ட் ஒரு லாரி நுழைய முடியும் அளவுதான்!

பொதுவில் மதுரை மக்கள் சப்தத்துக்கு அஞ்சாதவர்கள். மதுரைக்கு எவ்வளவோ பெயர்கள்– ஆலவாய் நகர், மீனாட்சிப்பட்டினம், கடம்ப வனம் என்றெல்லாம்... கூடவே 'சப்த பூமி' என்றும் சேர்த்துக் கொள்ளலாம்.

காது குத்தினால் ரேடியோ... மூக்கு குத்தினால் ரேடியோ, மாடு கன்று போட்டால் ரேடியோ... அவ்வளவு ஏன், யாராவது இறந்தால் துக்கம் கொண்டாடக்கூட ரேடியோதான்! 'படைத்தானே பூமியை ஆண்டவன் படைத்தானே' டைப்பில் சோகப் பாடல்களாகப் போட்டு ஏரியாவின் கல் இதயங்களும் கண்ணீர் விடும் வரை விட மாட்டார்கள்.

கலையைக் கொண்டாடுவதிலும் ஜித்தர்கள்.

தயிர்வடை தேசிகனுக்கெல்லாம்கூட ரசிகர் மன்றம் உண்டு.

'ஆழ்கடலின் ஆழத்தைக் கண்டவரில்லை
அம்பிகாவின் அழகை வென்றவரில்லை' – டைப்பில் ஸ்லோகன்களோடு போஸ்டர் போட்டு அசத்தி விடுவார்கள். இப்பொழுது போஸ்டர் கலாசாரத்துக்கு இணையாக டீவியில் லோக்கல் கேபிள் இணைப்பாளர்கள் தயவில் ஸ்க்ரோலிங்கில் விளையாடத் தொடங்கி விட்டனர்.

நானறிய இருபது ஆண்டில் பெரிய தொழில் வளர்ச்சியை இந்த நகரம் காணவேயில்லை. பல மில்களை மூடி விட்டார்கள். வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்து விட்டது. இதனால் ட்ரை சைக்கிள்கள், ஆட்டோக்கள் பெருத்து விட்டன.



இப்பொழுது கொஞ்சம் ரோடு போட்டிருக்கிறார்கள்.

முன்பெல்லாம் ஒரு மழைக்குத் தாங்காது. அதிலும் பஸ் ஸ்டாண்டின் முன் ஸ்டீமரில் போகலாம் – அப்படி தண்ணீர் தேங்கி விடும்!

**ஸ்**டேஜ் பிளேக்களைவிட வீதிக் கூத்துகளுக்கு வரவேற்பு அதிகம். வள்ளித் திருமணத்தையும், அரிச்சந்திராவையும் ஆயிரம் தடவைக்கு மேல் பார்த்தவர்கள் உண்டு.

'ஃபிகரு ஃபிகருதான் – சூப்பர் ஃபிகருதான்' என்றெல்லாம் முருகன் பாட்டுப் பாடி வள்ளியை லவ்வும்போது பார்க்க வேடிக்கையாகவும் இருக்கும்; வேதனையாகவும் இருக்கும்.

கோயிலில்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று சொன்னாள் அவ்வை – அதைக் கொஞ்சம் மாற்றி கோயில்லாத தெருவில் குடியிருக்க வேண்டாம் என்று அர்த்தப்படுத்திக் கொண்டு ரோட்டோரக் காளி, வீரமா காளி, சூலக்காளி, ஜாலக்காளி என்று தெருவுக்கு தெரு கோயில்தான். பங்குனி சித்திரையில் பத்து நாளைக்கு பக்திப் பெருக்குதான்... ஆட்ட பாட்டம்தான்! எது எப்படியோ இருபத்தி நாலு மணி நேரமும் ஜே. ஜே என்றிருக்க மதுரையால் மட்டும்தான் முடியும்.

சொல்ல மறந்து விட்டேனே...? ஆரம்பத்தில் நான் சந்தித்த நபர்களில் பத்து பேருக்கு நாலு பேர் ராஜபாண்டி, துரைப்பாண்டி, முத்துப்பாண்டி என்றும் நாலு பேர் அழகர்சாமி, அழகுப்பாண்டிகளாகவும் மீதம் இரண்டு பேர் சுபாஷ் இல்லையேல் போஸ் ஆகவும் தான் இருந்தார்கள்.

இப்பொழுது அஜித், விஜய், அஜய், ப்ரகாஷ் என்று மிக நாகரீகமாக (?) மாறிக் கொண்டிருக்கிறார்கள்.

முன்பு வைகை ஆற்றைக் கடந்து அக்கரையைப் பிடிக்க இரண்டு மூன்று பாலம் தான் இருந்தது. இப்பொழுது கலைஞர் ஐந்தாறு பாலங்களைக் கட்டிக் கொடுத்து விட்டார்.

அப்படியே ரயில்வேயிடம் சொல்லி, பத்து பதினோரு மணி நேரம் என்று உருட்டாமல் ஏழெட்டு மணி நேரத்தில் சென்னையை அடைய வழி செய்தால் மேலும் உதவியாக இருக்கும்.



# YOU CAN WIN



# வெற்றிக்கு விலை ரூ. 20,000!

'You can win' என்ற புத்தகத்தைக் கலைஞருக்குப் பரிசளித்த சூட்டில் பாண்டியில் காலை வாரிய மூப்பனார், சென்னை வந்திருந்த அப்புத்தகத்தின் ஆசிரியர் ஷிவ் கேராவைச் சந்தித்தாரா, தெரியாது! நாம் சந்தித்தோம்.

ஷிவ் கேரா நடத்தும் மூன்று நாள் தன்னம்பிக்கை வகுப்புகளுக்கு இருபதாயிரம் ரூபாய்க்கும் மேல் (ஒருவருக்குத்தான்) செலுத்தப் பலர் தயாராக இருப்பதை அறிந்தபோது வியப்பாக இருந்தது. இவரது உற்சாகம் மற்றும் தன்னம்பிக்கை ஊட்டும் வகுப்புகளுக்குப் பல பிரபல நிறுவனங்களும் தங்களது ஊழியர்களை ஸ்பான்சர் செய்கின்றன.

இந்தியாவில் முக்கிய நகரங்களிலும் பிற நாடுகளிலுமாக இன்னும் ஒரு வருடத்துக்கு இவரது வகுப்புகள் ரிசர்வ் செய்யப்பட்டுவிட்டன.

இத்தனைக்கும் ஷிவ் கேரா எந்த ஆராய்ச்சியும் செய்து டாக்டர் பட்டம் வாங்கியவரல்லர். பட்டப் படிப்பிலேயே தோல்வியடைந்தவர்தான். அமெரிக்காவை நிரந்தர முகவரியாக்கிக் கொண்டிருக்கும் இந்தியர்.

"டெல்லி பல்கலைக்கழகத்தில் படித்தபோதுதான் பி.காம். தேர்வில் தோல்வி அடைந்தேன். என் சகோதரி கனடாவில் இருந்தாள். அங்கு சென்றேன். எம்.பி.ஏ. படித்திருந்த என் மனைவிக்கு அங்கு ஒரு வங்கியில் காசாளர் வேலை கிடைத்தது. நான் கார்களைச் சுத்தம் செய்யும் பணியிலிருந்து வாக்குவம் க்ளீனர்களை விற்பதுவரை விதவிதமான வேலைகளை செய்யத் தொடங்கினேன். பிறகு ஆயுள்காப்பீடு ஏஜென்ட்டாகவும் இருந்தேன். உலகமே எனக்கு எதிராகச் செயல்பட்டதாக நினைத்த எனக்கு ஒரு நாள் ஞானோதயம் ஏற்பட்டது. எனக்கு நானேதான் மிகப் பெரிய பிரச்னை என்பதைப் புரிந்து கொண்டேன்" என்றார் ஷிவ் கேரா நம்மிடம்.

இந்த மாற்றத்துக்கு நார்மன் வின்சென்ட் பீலுடன் ('பவர் ஆஃப் பாஸிடிவ் திங்கிங்' என்ற மிகப் பிரபலமான சுய முன்னேற்ற நூலை எழுதியவர்) ஏற்பட்ட சந்திப்பும் ஒரு காரணமாம். இதைத் தொடர்ந்து தமக்கு ஏற்பட்ட ஞானோதயத்தைப் பிறருக்கும் ஏற்படுத்த வேண்டுமென முயற்சிக்க, அது க்ளிக் ஆகி விட்டது! அமெரிக்காவுக்கு ஜாகை மாற்றிக்கொண்டார். இங்கு இவரது வகுப்புகளுக்கு நிறைய டிமாண்ட். பிறகு இவரது மேற்படி நூல் வெளியாகி பரபரப்பாக விற்பனையாக, சிங்கப்பூரில் தமது அலுவலகத்தைத் திறந்திருக்கிறார். இப்போது இந்தியாவிலும்...!

"எனது வகுப்புகளில் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லித் தருவதில்லை. இதை முயற்சிக்கலாமே என்று ஒரு க்ளூ கொடுப்பேன். என் வகுப்புகளுக்கு வந்து திரும்பும்போது நம்பிக்கையான ஆக்ஷன் ப்ளானோடுதான் திரும்புகிறார்கள்."

இவ்வளவு காஸ்ட்லியாக இவரது வகுப்புகள் இருப்பது பற்றிக் கேட்டால் லயன்ஸ் போன்ற சில அமைப்புகளுக்காக இலவச வகுப்புகளும் நடத்துவதுண்டு என்று பதில் வருகிறது. கூடவே புன்னகையுடன் "மூளை ஆபரேஷன் செய்துகொள்ள வேண்டுமென்றால் மிகக் குறைவான பீஸ் வாங்கும் டாக்டர் யார் என்று பார்த்தா அணுகுவீர்கள்?"

**— ஜி.எஸ்.எஸ்**

# உடனே வேலை பெற

நேரிலும் தபாலிலும்

# ஓவிய ஆசிரியர் பயிற்சி

வரும் நவம்பரில் தமிழ்நாடு அரசுத் தொழில் நுட்பத் (ஓவியம்) தேர்வு எழுதி நீங்களும் **ஓவிய ஆசிரியர்** ஆகலாம். கல்வித் தகுதி: SSLC, +2, தேறிய, தவறிய ஆண்கள், பெண்கள். போட்டியில்லாத வேலை வாய்ப்பு. அரசுப் பள்ளிகளிலும், தனியார் பள்ளிகளிலும் பணியாற்றலாம். அடிப்படைச் சம்பளம் ரூ. 4,500 + இதர படிகள் சேர்த்து ரூ. 6,100/- வரை மாதச் சம்பளம் . எளிமையான பயிற்சி. வெற்றி நிச்சயம். குறைந்த பயிற்சிக் கட்டணம். வீட்டில் இருந்தபடியே தபால் மூலம் படிக்கலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு.

**விவரப் புத்தகம் இலவசம்**




**AJANTHA SCHOOL OF ARTS**
**(Govt. Regd. No. 1075/89/MS/RD)**
**6, Muthu Nagar, (Near Sundar Thirumana mandapam)**
**POONAMALLEE, CHENNAI - 600 056.** **Ph : 649 0363**

கூந்தலுக்கு
**எரிகா**
இரட்டை
பாதுகாப்பு








# எரிகா







ஹெர்பல் ஹேர் ஆயில் ← → ஹெர்பல் ஷாம்பு

ஆரோக்கியமான கூந்தலுக்கு ..........................எரிகா மட்டுமே

Dales

A Quality Product from:
**DALE CARE INTERNATIONAL,**
Pondicherry - 13.

Available at all leading
Medical Shops and General Stores
in Tamil Nadu & Pondicherry

# கற்காலத்தில் ஒரு கிராமம்!

இருபத்தோறாம் நூற்றாண்டு, தகவல் தொழில் நுட்பப் புரட்சி என்று பேசிக் கொண்டிருக்கிறோம். சுமார் பத்தாயிரம் பேர் வசிக்கும் ஒரு கிராமத்தில், வீடுகளில் கழிப்பிடம் கூடக் கிடையாது; ஆறு ஏக்கர் கொண்ட மைதானத்தைத்தான் தினம் அத்தனை பேரும் உபயோகிக்கிறார்கள் என்றால் நம்புவதற்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். ஆனால் உண்மை.

மதுரை அனுப்பானடி கிராமத்தில் தான் (53வது வார்டு) இந்த அவலம்.

மாநகராட்சியின் கட்டுப்பாட்டில் உள்ள (அத்தனையும் அப்ருவ்ட் லே – அவுட்கள்) இந்தப் பகுதியில், அந்நியர்கள் நுழைந்தால் மயக்கமடையாமல் மீள்வது சிரமம். ஊருக்குள் நுழையும் போதே அப்படியொரு துர்நாற்றம்.

ஊரின் நடுவே இருக்கும் முட்செடிகள் நிறைந்த அந்த மைதானத்தில் மனிதர்களுக்கு இணையாகப் பன்றிகள் மண்டிக்கிடக்கின்றன. சாக்கடை என்று தனியே இல்லாமல் வீதிகளே சாக்கடைகளாகக் காட்சியளிக்கின்றன. நடுவே குழந்தைகள் அப்பளம் இட்டுக் காய வைக்கிறார்கள். நாய்களும் பன்றிகளும் காவல் போலச் சுற்றி



• கல்யாணசுந்தரம், பால்சாமி



• ரேணுகா



''சுகந்தியைக் காதலிச்சது தப்போன்னு இப்ப தோணுது...!''

''ஏன்?''

''பீசல கண்டல் தின்னு முடிச்சதும் ஜெலுசில் மாத்திரை இருக்கான்னு கேட்கறா!''

– அம்பை தேவா



''ஒரு நாள் வேட்டா மாமூல் கொடுக்கறே?''

''மன்னிச்சுக்குங்க சார்!''

''போய்யா... போய் ரவுடி ரங்கன் எழுதின 'மாமூலை ஒழுங்காகக் கொடுப்பது எப்படி?'ங்கிற புத்தகத்தைப் படி!''

– ஜூனியர் சக்தி



''பைனான்ஸ் கம்பெனி ஆரம்பிச்சீங்களே, நல்லா ஓடுதா சார்?''

''நல்லா ஓடினா நாங்க ஓடியிருக்க மாட்டோமா...?''

– சீர்காழி வி. ரேவதி

வருகின்றன.

"இன்னிக்கு நேத்து இல்லீங்க. முப்பது வருஷமா இதே நிலைமைதான். எந்த வீட்டிலும் கக்கூஸ் கிடையாது. காரணம் சாக்கடை வசதி அறவே இல்லை! செப்டிக் டாங்க் கட்டிக்கற வசதி உள்ள சிலர் மட்டும் கட்டிக்கிட்டிருக்காங்க. பெரும்பான்மையானவர்கள் ஏழைகள். அதனால, இந்த மைதானம்தான் கதி!'' என்றார் நாம் சந்தித்த அனுப்பானடி கல்யாணசுந்தரம்.

அனுப்பானடிவாசிகள் கழிப்பிடமாக உபயோகிக்கும் அந்த ஆறு ஏக்கர் மைதானம், மாநகராட்சிக்குச் சொந்தமானது. மார்க்கெட், விளையாட்டு மைதானம், பூங்கா அமைக்கவென ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலம் அது.

''மார்க்கெட்டாவது? மண்ணாங்கட்டியாவது? மதுரை மேப்புலேருந்தே எங்க ஊர் மறைஞ்சிட்ட மாதிரி, கண்டுக்காம இருக்காங்க சார்! எத்தனை புகார் கொடுத்தோம்? யார் யாரையோ பார்த்தோம். ஒரு தடவை மேயரே வந்து பார்த்துட்டு உடனே வழி செய்யறேன்னு சொல்லிட்டுப் போனாரு. அப்புறம், தவறிக்கூட இந்தப் பக்கம் வரலைங்க'' என்றார் ரேணுகாதேவி.

"இந்த மக்களிடம் சுகாதாரம் பத்தின பிரக்ஞை துளியும் இல்லை. பாருங்க, மைதானம் முழுக்க எத்தனை அவலம்! பதினைஞ்சு நாளைக்கு ஒருதடவை உர கம்பெனிகாரங்க வந்து அள்ளிட்டுப் போவாங்க. அதுக்குக்கூட கார்ப்பரேஷன் வண்டி வராது. இதுல இன்னொரு கஷ்டம் என்னன்னா, இந்த மைதானத்துலயே தான் பன்றி பிடிச்சி, அடிப்பாங்க. அதையே குறைச்சல் விலைக்கு மார்க்கெட்ல வித்து ஆட்டுக்கறியோட கலந்து கொடுத்துடுவாங்க. இந்த ஜனங்க உயிரைக் கையில பிடிச்சிட்டு வாழறாங்கன்னு சொன்னா, அது மிகையில்லை'' என்றார் பால்சாமி.

நாம் சென்றிருந்தபோது மைதானத்தில் மண்டியிருந்த முட்செடிகளை மாநகராட்சிக்காரர்கள் அகற்றிக் கொண்டிருந்ததைக் காண முடிந்தது.

ஊரிலுள்ள மாநகராட்சிக் கழிப்பிடங்களைப் பயன்படுத்தாமல், வேண்டுமென்றே இம் மைதானத்துக்கு மக்கள் வருவதாகச் சொன்னார் ஒரு மாநகராட்சி ஊழியர்.

ஆனால், "ஏழெட்டு கக்கூஸ்கள் இருக்கு. அது லேடீஸுக்கே பத்தலை. ஆண்கள் வேற எங்க போவாங்க?" என்றார் கல்யாணசுந்தரம்.

"எங்களுக்கு எந்த அடிப்படை வசதியும் செய்து தராத மாநகராட்சிக்கெதிரா சினிமாவுல வர்றமாதிரி போராட்டம் நடத்தறதா முடிவு பண்ணியிருக்கோம்ங்க'' என்றார் ரேணுகா.

அசுத்த சாம்ராஜ்யமாக உள்ள இந்த மைதானத்தை ஒட்டி ஒரு சுகாதார நிலையமும் பள்ளிக்கூடமும் அழகான கோயிலும் இருக்கின்றன!

— ஔரங்கசீப்

படங்கள்: வெங்கடேஷ்

# மிகுந்த புண்ணிய க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்! ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் அருளைப் பெறுவோம் பாருங்கள்!

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் மாதாமாதம் அமாவாசை அன்று அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...**

பேரன்புடையீர்! வணக்கம். தங்களின் எல்லா விருப்பங்களும் நிறைவேறவும் மங்கலம் உண்டாகவும் ஸ்ரீ அன்னபூரணி அன்னை அருள்புரிய வேண்டுகிறோம்.

[illegible]

[illegible] ABT / TVS [illegible], சென்னை - 4க்கு அனுப்பி [illegible]

* தாங்கள் கொடுக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் ஏற்றுக்கொள்கிறோம்.
* ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.2000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் நான்கு ஆண்டுகளுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் ஆயுள் முழுவதும் அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடை [illegible] அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு [illegible] காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் [illegible] ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் [illegible] அனுப்பி வைக்கப்படும்.

## ஸ்ரீமத் பகவத்கீதா

★ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்து வாழ்நாள் முழுவதும் (Life Long) பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்பொழுது [illegible] முகவரிக்கும் மாற்றம் செய்து தொடர்ந்து பிரசாதம் மற்றும் 'ஆன்மீகம்' மாத இதழ் அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் புத்தாண்டு ஜனவரி முதல் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதா (தமிழில்) அனுப்பி வைக்கப்படும்.

**காசி, கயா, பிரயாகை இம்மூன்று க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள் அவரவர் இஷ்டப்படி அன்னதான கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.**

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்ட பிரதானம் காசியிலும், கயாவிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் பித்ருக்களுக்கு பிண்ட பிரதானமும் மற்றும் தர்ப்பணமும் செய்யப்படுகிறது.

காசியில் பித்ருக்களுக்கு பிண்ட பிரதானம் செய்ய ரூபாய் 500/- ம், பிரயாகை, கயாவில் (அக்ஷய வடம்) பித்ருக்களுக்கு பிண்ட பிரதானம் செய்ய ரூபாய் 1000/- ம் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

நம் வீட்டில் செய்யும் சிராத்தத்திற்கு தாய், தந்தையர் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. காசியிலோ, கயாவிலோ அதாவது அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் பித்ருக்கள் கூட்டமே நிறைவு பெறுகிறது.

அன்னதான சேவையில் [illegible] M.O / D.D Cheque [illegible] ( Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 ) என்ற பெயருக்கு அனுப்பி [illegible] வேண்டுகிறோம்.

**Cheque / D.D / M.O அனுப்ப வேண்டிய முகவரி :**

# ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

## SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)

68, Nadu Street, ( Opp. Kapaleeswarar Koil ) Mylapore, Chennai - 600 004. Ph : 4958086 / 4959302

**ஒரு மஹானின் வயிற்றுக்கு இடும் நல் உணவு ஏழேழு தலைமுறைகளுக்கும் நல்வழி காட்டும்!**

“காக்கையாகப் பிறக்க நேர்ந்ததே!” என்று சததனு மகா ராஜாவைப் பார்த்து சுமதி துக்கப் பட்டதைச் சொன்னேன். அந்தக் காக்கையும் பிராணனை விட்டு விட்டது! அதன் பிறகு அதற்கு மயூர ஜன்மா கிடைத்தது. உத்தமமான மயில்!

அப்போது மிதிலா நகரத்திலே ஜனக சக்ரவர்த்தி அச்வமேத யக்ஞம் பண்ணுவதாகச் சொல்லி, எல்லோ ருக்கும் அழைப்பு அனுப்பினார். காசி ராஜாவுக்கும் அழைப்பு வந்தது. இதுதான் சரியான சமயம் என்று, மயிலையும் எடுத்துக் கொண்டு போய் விசேஷமான அந்த யக்ஞத் திலே கலந்து கொண்டார்கள் சுமதி யும் அவள் தந்தையான காசி ராஜா வும்.

அந்த யக்ஞத்து மந்திரத்தைக் காதால் கேட்டாலே பாவ நிவ்ருத்தி. முதன் முதலில் பிரும்மா பண்ணிய யக்ஞம். அதனால் உலகத்திலே எல்லோருக்கும் அன்ன சம்ருதி ஏற் படும். தான்யம் நிறைய விளையும். உத்தமமான யக்ஞம் இது என்று வேதம் கொண்டாடுகிறது. அப்படிப் பட்ட யக்ஞத்திலே அந்த சின்னப்



# குறைபோ

பெண் சுமதி மயிலைக் கையில் வைத்துக் கொண்டே பூர்ணாஹுதி மந்திரத்தையெல் லாம் கேட்கிறாள்.

இந்த பூர்ணாஹுதி மந்திரத்தில் எல்லாம் நிறைந்திருக்கிறது. 'என்ன கிடைக்கும் பூர்ணாஹுதி மந்திரத்தினாலே?' என்று கேட்கலாகாது... எதுதான் கிடைக்காது என்று வேண்டுமானால் கேட்கலாம்! அதனாலல்லவா இதற்குப் பூர்ணாஹுதி மந்திரம் என்று பெயர். இப்படி வேதமே பூர்ணாஹுதி மந்திரத்தைக் கொண்டாடுகிறது!

அப்படிப்பட்ட பூர்ணாஹுதியைக் கண்டு, கேட்டு சேவித்தாள் சுமதி.

அந்த யக்ஞத்தின் முடிவிலே அவப்ருத ஸ்நானம் என்று ஒன்று செய்விக்கப்படும். பூர்ணாஹுதி சேவித்தவர்கள் அவப்ருத ஸ்நானம் பண்ணாமல் வரக்கூடாது. ஆதலால் மயிலோடு அவப்ருத ஸ்நானம் செய்தாள் சுமதி.

மயில் மாண்டு போய் விட்டது! அதன் பிறகு ஜனக சக்ரவர்த்திக்குப் பிள்ளையாக வந்து பிறந்தது. சுமதி அந்தக் குழந்தையின் முற்பிறப்பை முழுவதும் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறாள். அப்போது யாக்ஞவல்க்யர், நடந்த கதை முழுவதையும் சொல்கிறார்.

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

சுமதி வயதிலே பெரியவளா கவும் இந்தப் பிள்ளை வயதிலே சிறியவனாகவும் இருந்தபோதி லும் ஜன்மாந்திரத்திலேயே



வர்த்தி சததனு அவனைப் பார்த்து 'சௌக்யமா?' என்று கேட்டான். சௌக்யமா என்று கேட்டவனுக்கு அடுத்த ஜன்மா குள்ளநரி. அதற்கடுத்த ஜன்மா செந்நாய்; அதற்கடுத்த ஜன்மா ஓநாய், அதற்கடுத்தது கொக்கு, அப்புறம் காக்கை, மயில்! அச்வமேத யக்ஞத்திலே பூர்ணாஹுதியிலே அவப்ருத ஸ்நானம் பண்ணிய பிறகு அவனுக்குப் பழைய ஜன்மா கிடைத்து விடுகிறது.

கர்மாவை விட்டவனைப் பார்த்து சௌக்யமா என்று கேட்டவனுக்கே இத்தனை ஜன்மாக்கள் என்றால் கர்மாவையே விட்டவனுக்கு எத்தனை ஜன்மாவோ!

– இதைத்தான் 'புரிந்தது' என்று சொன்னார் பராசரர்.

ஆகையினாலே நமக்கென விதிக்கப்பட்ட கர்மாவைப் பண்ணியே ஆகவேண்டும்.

'எனக்கு மனத்திலே தூய்மை இருக்கிறது; நான் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். கர்மா எதற்கு?' என்றார் ஒருவர்.

மனத்தின் தூய்மை என்பது எங்கேயிருந்து வரும்...? சரீர சுத்தி

# ...ர்மமில்லை

கணவன் மனைவியாக இருந்தவர்களானதால் இந்தப் பிள்ளைக்கே கல்யாணம் பண்ணிக் கொடுத்து ஆசீர்வதிக்க வேண்டும் என்று சொன்னார். அதன் பிரகாரம் கல்யாணமும் நடந்தது. இருவரும் மோக்ஷத்தைச் சென்று அடைந்தார்கள்.

– இந்தக் கதையைத்தான் பராசர மஹரிஷி மைத்ரேயரிடம் சொல்லி, ''மைத்ரேயா! புரிந்ததா...?'' என்று கேட்கிறார்.

கேட்டுவிட்டு வேறு கதை சொல்ல ஆரம்பித்து விட்டார். உடனே வேறு கதை!

மைத்ரேயர் கதையைப் புரிந்து கொண்டார்... நமக்குப் புரிய வேண்டுமே!

- 'என்ன புரிந்தது?' என்று கேட்டால், கர்மாவைப் பண்ணாதவன், தர்மத்தை விட்ட ஒருவன் அவன் எதிரிலே வருகிறான். எல்லா தர்மத்தையும் பண்ணக்கூடிய ராஜா, சக்ர

இருந்தால்தான் மனத்தில் தூய்மை வரும். ஆகையினால் மனத்தளவில் தூய்மையாக இருக்கிறேன் என்று சொன்னால் போதாது. மன சுத்தியோடு இருப்பது ரொம்ப விசேஷம் தான். ஆனால் அதற்குப் பூர்வாங்கமாகச் சொல்லக்கூடிய சரீர சுத்தி, வாக் சுத்தி இதெல்லாம் இல்லையென்றால் பிரயோஜனமேயில்லை.

சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட முறைப்படி நாம் இருந்து விட்டால் ஒரு தோஷமும் இல்லை. முறையை மீறினால் பல அனர்த்தங்கள். நாமாக ஒன்றை நினைத்துக் கொண்டு பண்ணுதல் கூடாது. அது அசாஸ்த்ரீயம்.

அந்த மாதிரி ஒரு மதம் இருந்தது பூர்வ காலத்திலே. லோகாயதிகம் என்று அதற்குப் பெயர். சாருவாகம் என்றும் சொல்வது. சாரு

# அருள்வாக்கு

**தா**ன தர்மம் செய்வது, சந்தியாவந்தனம், யாகம், பூஜை, பரோபகாரம் எல்லாம் நல்லதில் மனசைச் செலுத்தும் பகிரங்க சாதனங்கள். தியானம் என்பதே மிகச் சிறந்த அந்தரங்க நிலை. அதற்கு அநுகூலமாக இருக்கிற மற்ற அந்தரங்க சாதனங்கள் ஐந்து. அவை: அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், சௌசம், இந்திரிய நிக்ரஹம் என்பவை. எவருக்கும், எவற்றுக்கும் கெடுதலே எண்ணாதபடி மனசை அன்புமயமாகச் செய்து கொள்வது அஹிம்சை! மனம், வாக்கு, காயம் மூன்றையும் உண்மையிலேயே ஈடுபடுத்துவது சத்தியம். அஸ்தேயம் என்றால் 'திருடாமல் இருப்பது' என்று அர்த்தம். அதாவது, பிறர் பொருட்களில் ஆசையே எழாதபடி வைராக்கியமாக்கிக் கொள்வது. சௌசம் என்றால் தூய்மைப்படுத்திக் கொள்வது. ஸ்நானம், மடி, ஆசாரம், ஆகாராதிகளின் சுத்தி எல்லாம் சௌசத்தில் அடங்கும். இந்திரிய நிக்ரஹம் என்பது புலன்களை அவற்றின் போக்கில் விடாமல், ஒவ்வோர் இந்திரியத்துக்கும் இவ்வளவு தான் ஆகாரம் கொடுப்பது என்று நிர்ணயமாக வைத்துக் கொள்வது. 'கண் இதைப் பார்க்கக் கூடாது. காது இதைக் கேட்கக் கூடாது. வாய் இதைத் தின்னக்கூடாது. பேசக் கூடாது. உடம்பு இந்தப் பாவத்தைச் செய்யக் கூடாது' என்று தடுத்து நிறுத்துவதே இந்திரிய நிக்ரஹம். சாதனை செய்வதற்காக மட்டுமே சரீரம் வேண்டும். சரீரம் உயிர் வாழுவதற்காக இந்திரியங்களுக்கு எவ்வளவு அதம பட்சம் தீனி கொடுக்க வேண்டுமோ அவ்வளவே கொடுக்க வேண்டும்.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

என்றால் அழகு வாக்கு – சொல். அழகான சொல் கொண்டவர்கள் அவர்கள். அவர்கள் பேசுவது எல்லோருக்கும் பிடிக்கும். தலையை ஆட்டி அனுபவித்தார்கள். இவர்களை முதலில் கண்டித்தவர் ஆதி சங்கர பகவத் பாதாள்.

வேத வாக்யத்தைக் கொண்டு, 'உபநிஷத்துக்குப் புறம்பாக அவர்கள் பேசுகிறார்கள்; சாருவாக மதம் அவைதிகமான மதம்' என்று ஆதாரத்தோடு சொன்னார்.

பிருஹஸ்பதி மதம் என்றும் சாருவாக மதத்துக்குப் பெயர். ஆண்டாள் என்ன பாடியிருக்கிறாள்...? 'வெள்ளி எழுந்து வியாழன் முழுங்கிற்று என்று பாடினாள். இது பிருஹஸ்பதி மதத்தைக் குறிக்கும் என்றும் கொள்ளலாம். பிருஹஸ்பதி மதம் அஸ்தமித்தது என்று பொருள்.

இருக்கிற வரையிலே சௌக்யமாக இருக்க வேண்டும் என்பதுதான் சாருவாக மதம். அதற்கு என்ன பண்ணுவது...? அதையும் அதுவே சொல்லித் தருகிறது. 'என்ன பண்ணுவது?' என்று எதிரேயிருந்து கேட்பவரைப் பார்த்துச் சொல்கிறது : "நிறைய நெய் குத்திச் சாப்பிடு!"

"நெய் நிறைய குத்திக் கொள்ள வேண்டுமானால் பணம் வேண்டாமா...?"

"கடனை வாங்கியாவது நெய்யைக் குடியுங்கள்!"

நெய்யைச் சாப்பிடச் சொல்லவில்லை; குடிக்கச் சொல்கிறது! அதுவும் கடன் வாங்கி!

சாஸ்திரமோ கடனே வாங்காதே என்கிறது. பல புராணங்களிலே அதற்குப் பல கதைகள் இருக்கின்றன.

ஆனால், இவன் – சாருவாக மதத்தில் – என்ன சொல்கிறான்...?

'கடனை வாங்கு! நெய்யைக் குடி, நன்னா சாப்பிடு, சௌக்கியமாக இரு...!'

ஏன் இப்படிச் சொல்கிறான்...?

ஒருத்தர் மாண்டு போவதைப் பார்க்கிறோம். இடுகாட்டிலே போய் உடலை எரித்தாகி விடுகிறது. அந்த உயிர் எங்கேயோ போகிறதாம்; எங்கேயோ வருகிறதாம்! எங்கே போகும்? எங்கே வரும் – எல்லா சாம்பலையும் கொண்டு கரைத்த பிறகு...? – இது தான் சாருவாக மதத்தில் கேட்கிற கேள்வி.

அப்படியானால் அந்த மதத்திலே கண்ணுக்குத் தெரிவது – பிரத்யட்சம் ஒன்றுதான் பிரமாணம்.

சரீரத்துக்குள்ளே ஆத்மா இருக்கிறது என்று உபநிஷத் சொல்கிறது. ஆனால் ஆத்ம வஸ்துவையே உணராதவன் சரீரத்தை மட்டுமே பார்க்கிறான். 'சரீரம் அழியக்கூடியது!' என்கிறான். 'சரீரம் எங்கே போகும்? எங்கே வரும்?' என்று கேட்கிறான்.

ஆதிசங்கரர் அவனைப் பார்த்துக் கேட்கிறார்: "உங்கள் மதத்திலே சுவர்க்கம், நரகம் என்று உண்டா...?"

"நன்றாக உண்டு!" என்றான் அவன். "சுவர்க்கம் என்றால் சுவர்க்க லோகம் என்று கிடையாது. சாப்பிடுவதற்கு நல்ல உணவு, உடுத்துவதற்கு உடை இருந்தால் அதுதான் சுவர்க்கம். எல்லாவற்றுக்கும்



திண்டாடிக் கொண்டு தரித்திரத்தை ஒருவன் அனுபவித்தான் என்றால், அதுதான் நரகம்!"

"சரி, இதெல்லாம் இருக்கட்டும்.. உம்முடைய மதத்திலே மோக்ஷமாவது உண்டா..?" என்று கேட்டார்.

"நன்றாக உண்டு!"

"மோக்ஷம் என்றால் என்ன..?"

"செத்துப் போவதுதான் மோக்ஷம்! அவ்வளவுதான்! அதற்கு மேல் ஒன்றும் இல்லை..!"

வெற்றிலை போடுவது, கள் குடித்தல் - இதெல்லாம் உவமையாகச் சொல்கிறான் அவன்.

''வெற்றிலை பசுமை, சுண்ணாம்பு வெண்மை, பாக்கு கறுப்பாக இருக்கிறது. எல்லாவற்றையும் சேர்த்துப் போட்டுக் கொண்டால் சிவப்பு என்று ஒரு நிறம் வருகிறது. அழுகிப் போன பழங்களையெல்லாம் எடுத்துப் புதைத்து வைத்து, கொஞ்சம் நாள் கழித்து அதைச் சாப்பிட்டால் பூர்வத்திலே இல்லாத ஒரு குணம் அதற்கு வந்து விடுகிறது... அதனால் சாப்பிட்டவனுக்குத் தலை சுற்றுகிறது!... இதெல்லாம் வஸ்துக்களின் சேர்க்கையால் நடக்கிற மாற்றங்கள், அதே மாதிரிதான் சரீரத்திலே பூதங்களின் சேர்க்கையினால் ஒரு சக்தி ஏற்பட்டு கை, கால் ஆடுகிறது. சக்தி குறைந்து போனவுடனே விழுந்து விடுகிறது.. அதற்கு மேல் உள்ளே ஒன்று உட்கார்ந்து பேசுகிறது என்றெல்லாம் சொல்கிறீர்களே! அதெல்லாம் ஒன்றுமே கிடையாது!" என்று சொல்லி விட்டான் சாருவாக மதத்தைச் சேர்ந்தவன்.

அப்படிப்பட்ட அவைதிகமான மதம் சாருவாக மதம். உபநிஷத்துக்குப் புறம்பான மதம். கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்கிற நிலையை ஏற்கும் மதம்.

ஆனால் பகவான் எவ்வளவு பிரமாணமாய் இருக்கிறான்! எத்தனை பிரமாணங்களைக் கொடுத்திருக்கிறான். அத்தனையையும் நாம் மறைத்துப் பேசிவிட முடியுமா..?

தர்மங்கள் அனுஷ்டிக்கப்படுகிற இடங்களிலெல்லாம் அவன் பிரமாணமாய் இருக்கிறான். அதனால்தான் அங்கெல்லாம் போய் அதையெல்லாம் அடித்து நொறுக்குங்கள் என்றான் ஹிரண்ய கசிபு! அப்படிச் சொன்னதன் மூலமே பகவான் விஷ்ணு எங்கெல்லாம் இருக்கிறான் என்பதைக் காட்டிக் கொடுத்துவிட்டான்!

(தொடரும்)

**ஜோ**ராக ஒருமுறை கைதட்டுங்கள்! மதுரையில் நாம் சுற்றுப் பயணம் செய்து, பேசிய வரையில் மக்கள் மத்தியில் பெரிய அதிருப்தி ஏதும் இல்லை என்று தெரிந்தது.

மதுரை நகரத்தை ஒரு ராட்சஸ பலூனுக்கு ஒப்பிட லாம் போல இருக்கிறது. மக்கள் தொகையும் நகர எல்லை களும் அப்படி நாளுக்குநாள் விரிந்து பெருகிக் கொண்டே யிருக்கின்றன. சாலைகளில் வாகனங்கள் சர்க்கஸ் காட்டு கின்றன. பாதசாரிகள் கழைக் கூத்தாடிகளின் லாகவத் துடன்தான் நடை பயில வேண்டும். எல்லா பிளாட்பாரங் களும் கடைகளால் புதைக்கப்பட்டுவிட்டன. இட்லிக்கடை, பரோட்டாக்கடை, மொபைல் முனியாண்டி விலாஸ்கள்.

போதாக்குறைக்கு ஆட்டோக்களும் இரு சக்கர வாகனங் களும் அந்தப் பிரதேசங்களில்தான் மாநாடுகள் நடத்துகின் றன. கட்டுப்படுத்த இயலாத போக்குவரத்து நெரிசலில் நகரம் விழி மட்டுமல்ல; உடலே பிதுங்கிக் கொண்டிருக் கிறது.

இதெல்லாம் பிரதானப் பகுதிகளில்தான். மக்கள் வசிக்



[illegible] மோசா!

• கேட்போர் மையத்தினர்

கும் பகுதிகளை மேயர் குழந்தைவேலு எப்படி நிர்வகிக் கிறார்?

சென்னை மேயருக்குப் போட்டியாகப் பாலங்கள் மீது காதல் வயப்பட்டிருக்கிறார் மதுரை மேயர். நகரின் போக்கு வரத்து நெரிசலைக் குறைக்கவென, கடந்த இரு ஆண்டு களுக்குள் ஐந்து பெரிய மேம்பாலங்கள் கட்டியிருக்கிறார். இன்னும் சில பாலங்களுக்கான யோசனைகளை அசை போட்டுக் கொண்டிருக்கிறார். ஆங்காங்கே பூங்காக்கள், அழகு நீரூற்றுகள், நீச்சல் குளம் என நகரை ஓர் இளவரசி ஆக்கப் படு மும்முரமாகச் செயலாற்றி வருவது ஒரு மேலோட்டமான பார்வையிலேயே தென்படத்தான் செய்கிறது.

"ஆனால், அவர் இன்னும் செய்ய வேண்டிய பணிகளுக் குக் குறைவேயில்லை. குறிப்பாக, மாநகராட்சியின் எல் லைப்புற வார்டுகள் மேம் பாடு அடையவே இல்லை. பல அடிப்படைப் பிரச்னை கள் அங்கே கொட்டிக் கிடக் கின்றன" என்கிறார்கள் அந் தப் பகுதிப் பொது மக்கள்.

"அது நிஜம்தான்!" என்று ஆமோதித்தனர் 'கேட்போர் மையத்'தினர்.

அதென்ன கேட்போர் மையம்?

**நீ**ண்ட நாட்களாக மதுரையில் வசித்து வரும்

# கேட்காமல் விடமாட்டோம்!

சில ஓய்வுபெற்ற அதிகாரி கள் இணைந்து, நடத்துகிற ஓர் அமைப்பு இது.

வாரம்தோறும் ஓர் அறி ஞரை அழைத்து வந்து ஏதாவது ஒரு தலைப்பில் பேசச் சொல்லி, செவிக்கு உணவு வழங்கிக் கொண் டிருக்கும் இவர்களை அணுகி, மதுரை மேயரிடம் கேட்க உங்கள் மாநகராட்சி யின் பிரச்னைகளைப் பட்டியலிடுங் கள் என்று கேட்டோம்.

நாம் நேரில் கண்ட குறைகளையும் கேட்போர் மையத்தார் பட்டியலிட்டுத் தந்த விஷயங்களையும் எடுத்துச் சென்று மேயரைச் சந்தித்தோம்.



• மேயர் குழந்தைவேலு



• கமிஷனர் ககன்தீப் சிங்

"மக்களின் பிரச்னைகள் பற்றிப் பேசும்போது நான் மட்டும் பதில் சொன்னால் போதாது" என்றார் மேயர். செந்தமிழில் பேசி, திறங்கடிக்கும் சீக்கியரான கமிஷனர் சுகன்தீப் சிங்பேடி தொடங்கி, மாநகராட்சியின் அத்தனை அதிகாரிகளுமே உடனிருக்க, அவசர காலக் கூட்டமே ஏற்பாடு செய்து விட்டார்!



• மாநகராட்சி அலுவலர்கள் - பேட்டியின் போது!

மாநகராட்சி அதிகாரிகளின் கூட்டத்தில் நாம் முன் வைத்த பிரச்னைகளும் கிடைத்த பதில்களும் இங்கே:

● நாவலர் நகர், எஸ்.எஸ். காலனி, அனுப்பானடி, அரசரடி உள்ளிட்ட பல இடங்களில் பாதாளச் சாக்கடை வசதி இல்லை. இதில் வரி அதிகம் செலுத்துவோர் வாழும் பகுதிகளும் விலக்கல்ல. பெரும்பாலான இடங்களில் டிரைனேஜ் வசதி இன்னும் செய்யப்படாமலிருப்பது ஏன்?

பாதாளச் சாக்கடைத் திட்டம் பகுதி பகுதியாகச் செயல்படுத்தப்பட்டு வருகிறது. கடந்த ஆண்டு 55 கோடி ரூபாய் இதற்காக ஒதுக்கப்பட்டது. இதுவரை 42 வார்டுகளில் பகுதியளவு சாக்கடை போடப்பட்டிருக்கிறது. 29 வார்டுகளில் முழுமையாக டிரைனேஜ் வசதி செய்யப்பட்டு விட்டது. அடுத்த ஆண்டுக்குள் மாநகராட்சிக்குட்பட்ட அத்தனை வார்டுகளும் படு சுத்தமாகி விடும்.

● நகரின் போக்குவரத்து நெரிசலைக் குறைப்பதற்காகவே பை-பாஸ் சாலை போடப்பட்டது. ஆனால், அந்தச் சாலையில், நடக்கக் கூட முடியாதபடி லாரிகளும் கடைகளும் ஆக்கிரமித்து விட்டனவே? இரவு நேரங்களில் வழிப்பறியும் நடப்பதாகச் சொல்கிறார்கள்?

பை-பாஸ் சாலை நெடுஞ்சாலைத் துறையின் கட்டுப்பாட்டுக்குட்பட்டது. எனினும் அவர்களே கேட்டுக் கொண்டதற்கிணங்க, மாநகராட்சியும் மாநகரக் காவல் துறையும் இணைந்து, பல முறை அங்கே ஆக்கிரமிப்புகளை அகற்றியிருக்கிறோம். வைகை ஆற்றின் தென் பகுதியில் முறைகேடாகக் கட்டப்பட்ட 400 வீடுகளை இடித்தே தள்ளி, சாலை போட்டோம். ஆயினும் லாரி, சிறு கடைகள் ஆக்கிரமிப்பை முழுமையாக நீக்க முடியவில்லை; மறுபடி மறுபடி வந்து விடுகிறார்கள். நாங்களும் அடிக்கடி சென்று ஆக்கிரமிப்பை அகற்றிக் கொண்டுதானிருக்கிறோம்.

● வேறெந்த ஊரிலும் இல்லாத அளவு இங்கு நாய், பன்றி மற்றும் கொசுத் தொல்லை ஏராளமாக இருக்கின்றதே?

அதை ஏன் கேட்கிறீர்கள்? இதுவரை நாலாயிரம் தெரு நாய்களைப் பிடித்திருக்கிறோம். பன்றி பிடிப்பதில் 'தேசிய சாதனை' செய்திருக்கிறோம் என்று சொன்னாலும் மிகையில்லை! அரசே எங்களிடம், 'எப்படி இத்தனை பன்றிகள் பிடிக்கிறீர்கள்? மற்ற மாநகராட்சிகளுக்கும் சொல்லித் தரலாமே' என்று கேட்டிருக்கிறது! அத்தனை தீவிரமாகச் செயல்பட்டாலும் இங்கு போதவில்லை! வேட்டை தொடர்கிறது.

அடுத்து, கொசுப் பிரச்னை. கொசு உற்பத்தியாகும் பதினான்கு முக்கிய சாக்கடைப் பாதைகளில் வாரந்தோறும் 'ஆயில் பால்ஸ்' (எண்ணெயில் தோய்த்த துணிச்சுருள்) போடுகிறோம். அது, அதிக செலவில்லாதது. கொசு உற்பத்தியாவதை முட்டையளவிலேயே தடுக்கிறது. தவிர, நகரில் வாரம் தோறும் கொசு மருந்து அடிக்கப்படுகிறது.

நவீன தொழில்நுட்பம் மூலம் இந்தப் பிரச்னைகளை முற்றிலுமாக நீக்க வழியிருக்கிறதா என்றும் பார்த்து வருகிறோம்.

● நேரு நகரில் சாலைகள், தெரு விளக்கு, அடி குழாய் என எந்த வசதியுமே இல்லாமலிருக்கிறதே? சொக்கலிங்கம் நகரிலும் 3000 வீடுகளுக்குச் சாக்கடை வசதி இல்லை?

நேரு நகரின் ஒரு பகுதி அன் அப்ரூவ்ட் ஏரியா. நீங்கள் குறிப்பிடுவது அதைத்தான். அதிகாரபூர்வமாக அப்பகுதி மாநகராட்சியுடன் இணைக்கப்படுகிற வரை பிரச்னைகளைத் தீர்க்க முடியாது. இருப்பினும், குடிநீர் வசதிக்கான ஏற்பாடு நடந்து கொண்

டிருக்கிறது. சாலைகளைப் பொறுத்தவரை, நகர் முழுவதும் நல்ல சாலை போடப்படு மென்று உத்தரவாதம் தர இயலாத சூழ் நிலை. ஆனால், முக்கியமான பகுதிகளில் நல்ல சாலைகள் கண்டிப்பாகப் போடப் படும். இவ்வாண்டு பத்துக்கோடி செலவில் புதிய சாலைகள் போடப்படவிருக்கின்றன.

● தினமும் குடிநீர் வருகிறது என்றாலும் குழாய்களில் மிக மெலிதாகவே நீர் வருவ தாகவும் சில இடங்களில் உப்புநீர் கலந்து வருவதாகவும் புகார் கூறுகிறார்களே?

பிரஷர் குறைவாக நீர் விடப்படுகிறது என்பதை ஒப்புக் கொள்கிறோம். ஆனால், எல்லா இடங்களிலுமல்ல. மேற்கு, வடக்குப் பகுதிகளில்-செல்லூர், கிருஷ்ணாபுரம் போன்ற இடங்களில் மட்டும்தான் இப் பிரச்னை. மற்ற பகுதிகளுக்கு ஒழுங்காகவே நீர் விடப்படுகிறது. பிரச்னைக்குரிய பகுதி களிலும் நிலைமை விரைவில் சரிசெய்யப் படும்.

உப்புநீர் கலப்பதாகக் கூறுகிறீர்கள். அப்படியேதும் எங்களுக்குப் புகார் இல்லை. சில இடங்களில் சாக்கடைக் குழாய் உடைந்தோ, கசிந்தோ குடிநீருடன் கலந்து விடுவதாகப் புகார் வரும். அப்படிப்பட்ட புகார்களுக்கு உடனே நடவடிக்கை எடுத்து விடுவோம். உடைப்பு ஏற்பட்ட சாக்கடைக் குழாய்களை எங்களது இஞ்சினீயர்கள் புகார் வந்த தினமே சென்று சரிசெய்து விடுவதுதான் வாடிக்கை.

● இறுதியாக, அனுப்பானடி விவகாரம். பத்தாயிரம் பேர்களுக்கு மேல் வசிக்கிற இந்த பகுதியில் ஒரு திறந்தவெளி மைதானமே பொதுக் கழிப்பிடமாகப் பயன்படுகிறது. பெரும்பாலான வீடுகளில் கழிப்பிடம் இல்லை. பகுதிக்குள் நுழைந்தாலே துர்நாற் றம். சுகாதாரக் கேடு. என்னதான் செய்கிறது மாநகராட்சி?

அனுப்பானடி மைதானப் பிரச்னை பல ஆண்டுகளாக இருந்து வருவது. எல்லைப்புற வார்டான அந்தப் பகுதிக்கு விரைவில் அடிப்படை சுகாதார வசதிகள் செய்து தரப் படும். ஆனால், எங்கள் கேள்வி இதுதான். மாநகராட்சி கட்டித் தந்துள்ள கழிப் பிடங்களை ஏன் அம்மக்கள் உபயோகிக்க மறுக்கிறார்கள்? அனுப்பானடியில் மட்டும் சுமார் 10 கழிப்பிடங்கள் உள்ளன- அனைத் தும் மாநகராட்சியின் துப்புரவான பராமரிப் பில், நல்ல நிலையிலேயே இருப்பவை.

மக்கள் ஆண்டாண்டுகளாக வெட்ட வெளியில் அமர்ந்தே பழகி விட்டார்கள். கழிப்பிடத்தை உபயோகிக்காமல், ஊர் துர்நாற்றமடிக்கிறது என்று புலம்புவது என்ன நியாயம்?

இப்போது அதிரடியாக ஒரு முடிவு செய்து செயல்படுத்திக் கொண்டிருக் கிறோம். அந்த மைதானத்தை சுத்தம் செய்து விளையாட்டுத் திடலாகவும் பூங்காவாகவும் மாற்றிவிடப் போகிறோம். பணி தொடங்கி விட்டது. காவலுக்கும் ஆள் போட்டு விட் டால், வேறு வழியின்றி, மாநகராட்சிக் கழிப் பிடங்களுக்கு மக்கள் போய்த்தானே ஆக வேண்டும்?

● ஆறாயிரம் பேருக்குப் பத்து கழிப் பிடங்கள் எப்படிப் போதும்? அந்தப் பகு திக்கு எப்போது பாதாள சாக்கடைத் திட் டமும் வீடு தோறும் கழிப்பிட வசதியும் செய்யப் போகிறீர்கள்? செப்டிக் டாங்க் கட்டிக் கொள்ளக் கூட வசதியில்லாத ஏழை கள் அல்லவா அங்கு வாழ்கிறார்கள்?

முன்பே கூறியது போல, பகுதி பகுதி யாகச் சாக்கடைத் திட்டங்கள் நடைபெற்று வருகின்றன. ஆக்கிரமிப்பு அகற்றல், பாதா ளச் சாக்கடை, சாலை வசதி அனைத்துமே ஒன்றோடொன்று தொடர்பு உடையவை. எனினும் மிக விரைவில் அனுப்பானடி பிரச்னையைத் தீர்த்து விடுவோம். மக்களை யும் எங்களுடன் ஒத்துழைக்கச் சொல்லுங் கள்!

சந்திப்பு: **ஔரங்கசீப்**
படங்கள்: **வெங்கடேஷ்**

**''இத பாருங்க, சீக்கிரமா உருளைக் கிழங்கு ரோஸ்ட் செய்யறது எப்படின்னு கொஞ்சம் சொல்லுங்க!''**

**''எதுக்கு கமலா?''**

**''அதைப் பத்தி நான் எங்க லேடீஸ் கிளப்பிலே பேசணும்! அதுக்காகத்தான்!''**

**– மெலட்டூர் விசுவநாதன்**



ரூமியின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள், வைதேகி. அவள் நின்ற இடம் நிழலாக இருந்தது என்றாலும், இரண்டடிக்குள் ஓடும் திறந்த சாக்கடை, அதன் பக்கத்திலேயே இருந்த நடமாடும் உணவுக் கடை, மனிதர்களின் சப்த மயமான வேடிக்கைப் பேச்சு. அதில் தெறித்து விழும் அசிங்கமான வார்த்தைகள் என்று சங்கடமாக உணரத் தொடங்கி இருந்தாள், அவள்.

'இதோ வர்றேன்' என்றுவிட்டுச் சென்றவன் ரூமி. அரைமணிக்கும் மேல் ஆகியிருந்தது.

கண்களைச் சுழல விட்டாள். தூரத்தில் இருந்த ஒரு சினிமா தியேட்டரின் போஸ்டர் தெரிந்தது. ஒரு பெண்ணின் பிரும்மாண்டமான படம் தெரிந்தது. அதன் மார்பில், பேப்பர் ஒட்டியிருந்தார்கள். அந்தப் பெண்ணை விடவும் பெரிதாக ஆங்கில முதல் எழுத்து இருந்தது. வைதேகிக்குப் புரிந்தது. திடுமென எரிச்சல் மண்டிக் கொண்டு வந்தது, அவளுக்கு.

ஒரு இடத்தில் நிற்கவும் சாத்தியப்படாத ஸ்திதியை நினைத்து எரிச்சல் மீதூற, போகலாம் என்று முடிவெடுத்தபோது ரூமி வந்து சேர்ந்தான்.

''என்னாச்சு?'' என்றாள் வைதேகி, ஆவலுடன்.

ரூமி, இல்லை என்பது போலத் தலையை அசைத்தான்.

''கவலைப்படாதே. உலகம், இந்தக் கம்பெனியோடு முடிந்து போயிடலை. வேலை, எங்கேயோ உனக்குக் கிடைக்க இருக்கு.''

அவன் கசப்பாகச் சிரித்தான்.

''அது எனக்குத் தெரியுது. எங்கேயோ எனக்கு ஒரு வேலை கிடைக்கத்தான் போகுது. ஆனா, இந்த அதிகாரிங்க, முதலாளிங்க, ஆடற 'இன்டர்வியூ' நாடகத்தைத் தான் சகிக்க முடியலை. நான் ஒரு வரலாற்று மாணவன். ஆராய்ச்சியாளன்.' என்னைப் பரீட்சிக்கிற மாதிரியான கேள்வி கூட வேணாம். என்னைக் கௌரவிக்கிற மாதிரியான கேள்வியாவது கேட்டிருக்கலாம். ஏற்கெனவே யாரோ ஒருத்தரைத் தேர்ந்தெடுத்துட்டு, இந்த இன்டர்வியூ வேஷம் என்னத்துக்கு? இளைஞர்களைக் கேவலப்படுத்தற மாதிரி இல்லையா இது? எனக்கு அதுதான் வருத்தம்.''

அவர்கள் நடந்தார்கள்.

''களைப்பா இருக்கு... ஒரு காப்பி சாப்பிடலாமே'' என்றாள் அவள்.

இருட்டும், குளிர்ச்சியுமாக இருந்தது அந்தக் கான்டீன் உள்பக்கம்.

''என்ன நடந்தது?''

''உள்ளே போனேன். அங்கிருந்த எவருக்கும், அவர்கள் செய்து கொண்டிருக்கிற வேலையின் முக்கியத்துவம் தெரியலை. ஏதோ தமாஷுக்குக் கூடியிருப்பவர்கள் போல இருந்தார்கள். ஒருத்தர், என் சட்டையைப் பார்த்து, ''இது எந்தக் கம்பெனி சர்ட்? என்ன விலை?'' என்றார். அதுக்கு, ஒரு அம்மாள், ''இதுவும் புராதான காலத்ததா? ஏதோ, பூமியில் தோண்டி எடுத்தது மாதிரி கேட்கிறீர்களே'' என்றாள். அப்புறம், எங்கே படிச்சேன்னு கேள்வி வேற.''

''என்ன சொன்னே?''

''டி.சி.யைப் பாருங்கன்னு சொன்னேன்.''

''அப்போ வேலை கிடைச்சா மாதிரி தான்.''

''கிடைக்காதுன்னு தெரிஞ்சு போச்சு. அப்புறம் எதுக்குக் கவலை?''

அவன் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கிறான் என்பது தெரிந்தது. இந்த நேரத்தில் தான் அவனுக்கு அவள் துணை அவசியப்படும் என்பதை அவள் உணர்ந்தாள்.

''ஏதாவது சாப்பிடேன். எனக்குப் பசிக்குது'' என்றாள் வைதேகி. பொய்தான். கூடுமானவரை, இடை நேரத்தில் அவள் சாப்பிடுவது இல்லை. அவன் சாப்பிட வேண்டும் என்பதற்காகத் தனக்குப் பசிக்கிறது என்று

22

# முதல் மழைத்துளி




ஒரு அரிசி மண்டியை வாடகைக்கு எடுத்து, இன்ஜினீயரிங் காலேஜ் தொடங்கியிருக்கிறார். செமை அறுவடை. அந்த உற்சாகத்தில் மெடிக்கல் காலேஜ், ஆர்ட்ஸ் காலேஜ் தொடங்கிவிட்டார். அவர் குவாலிபிகேஷன் எல்லாம் கேட்கலை. பொம்பளை வாத்தியார்தான் வேலைக்கு வச்சுப்பாராம். காரணம், தகராறு பண்ண மாட்டோமாம். பீடி சிகரெட்டுன்னு நேரத்தை வேஸ்ட் பண்ண மாட்டோமாம். சொல்றார். பிரச்னை என்னன்னா, சம்பளம் ரெண்டாயிரம்தான் தருவாராம். கையெழுத்து, எட்டாயிரத்துக்குப் போடணுமாம். முடியாதுன்னு சொல்லிட்டேன்."

"ஜெயிலில் இருக்க வேண்டியவன் எல்லாம் கல்வித்துறைக்கு வந்துட்டாங்க."

வைதேகி நிதானமாகச் சாப்பிட்டபடி சொன்னாள்.

"ரொம்ப முக்கியமான இடத்தில் எல்லாம் அவங்கதான். ஜனங்கள் தலையெழுத்தைத் தீர்மானிக்கிற இடத்துல, கலாசாரம், நீதி, சட்டம், ஆன்மீகம் எல்லாத்தையும் அவங்கதான் வடிவமைக்கிறாங்க."

"இதையெல்லாம் நாம எப்போ மாத்தப் போறோம்?" என்றான் ரூமி.

"நாமா?"

"நாமதான்."

"சாக்கடையைச் சுத்தம் பண்ண முடியுமா?"

"எல்லாரும் ஒதுங்கினால், சாத்தான்

அவள் சொன்னாள்.

"சொல்லேன். பிடிச்சதைச் சொல்" என்றான் ரூமி.

சொன்னாள்.

"உன் அனுபவம் எப்படி?"

"எனக்கு அழைப்பு அனுப்பினது ஒரு கல்லூரி. தனியார் கல்லூரி. கல்லூரி உரிமையாளர் முன்னாள் அரசியல்வாதியாம். ஏதோ காரணத்தால், அதை விட்டு, சினிமாக் கொட்டகை, மதுக்கடை நடத்தியிருக்கிறார். இப்ப எல்லாம், பள்ளிக்கூடம், காலேஜ் நல்ல பிசினஸ் இல்லையா? இதுக்கு வந்திருக்கிறார்.

ஆட்சிதானே நடக்கும்."

"சரி. யாரிடம் போய் வேலையை ஆரம்பிக்கிறது? கீழே இருந்து எல்லாருமே பிராடுகள். சுயமாக ஏதேனும் செய்யலாம் என்றால், கைச் செலவுக்கும் கூட வேலை இருந்தால் தானே?"

அவர்கள் வெளியே வந்தார்கள். அழகாக மாலை, தெருவுக்கு வந்து இருந்தது.

ருமி மனம் தெளிந்திருந்தான்.

"இருக்கட்டும். நமக்கான நாற்காலி கிடைக்காமலா போகும்? கிடைக்கும் ஒருநாள். என்ன, சில பேருக்கு உடனே. சிலருக்குக் காலம் ஆகி. ஆனால், கிடைக்காமல் போகாது."

"வெரிகுட். இந்த ஸ்பிரிட்தான் அவசியம், ருமி."



"அந்த கேடிக்கு எவ்வளவு திமிர் பாரு!"

"என்ன சேதி?"

"எனக்கு எழுதிய லெட்டரை, 'அனேக கேடி நமஸ்காரம்'னு ஆரம்பிச்சு இருக்கான்!"

– காட்டாங்குளத்தூர் கிருஷ்ணரத்னம்

சற்று நேரம் நடந்த பிறகு அவள் சொன்னாள்.

"என் பாரதி அக்காவை எடுத்துக்கோ. எத்தனை பிரச்னை. புருஷனால் எத்தனை கஷ்டம். என்றாலும், அவள் துறையில், சாதனை செய்யத்தானே செய்தாள்?"

"உண்மைதான் வைதேகி. அவங்களுக்கு, அரவிந்தன்னு ஒரு நல்ல மனுஷன் சிநேகிதனா வாச்சான்."

"எல்லாருக்கும், அவங்களுக்குத் தகுந்த மாதிரி, தகுதிக்கேற்ப சிநேகம் அமையும்."

"எனக்கு வாய்க்கலையே. எனக்கு நீதானே கிடைச்சே" அவன் ஓட, அவள் துரத்திக் கொண்டு ஓடினாள்.

ஆட்டோவில் வந்து இறங்கும் அரவிந்தனை ஆச்சர்யமுடன் வரவேற்றாள், பாரதி.

"என்ன விஷயம், அரவிந்தன்?"

தண்ணீர் சாப்பிட்டு தம்ளரைத் தரையில் வைத்தான்.

"வெளிநாட்டு நிகழ்ச்சிகளுக்கு ஒப்புதல், தேதி எல்லாம் வந்தாச்சு, மேடம்."

அவன் கொடுத்த காகிதங்களை வாங்கிப் பார்த்தாள். நாலைந்து நாடுகளின் நிகழ்ச்சி நிரல் இருந்தன. அடுத்த இரு மாதங்களில் அவள் புறப்பட அவகாசமும் இருந்தது.

அரவிந்தன் பாரதியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். எந்த விகசிப்பும் சந்தோஷப் பீறிடுதலும் அதில் இல்லை. என்றாலும் ஒரு வகை திருப்தி இருந்தது.

பாரதி, அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டு சொன்னாள்.

"உங்கள் வெற்றி இது. உங்கள் முயற்சிகளின் வெற்றி."

"இல்லை."

அவன் மௌனமாக இருந்து விட்டுச் சொன்னான்.

"உங்கள் பாட்டுக்கு."

பாரதி சிரித்தாள்.

"இல்லையா?"

"இல்லை. தியாகையருக்கும், தீட்சிதருக்கும், அருணாசல கவிக்கும், பாரதிக்கும் போக வேண்டிய பெருமையை நான் வழி மறிக்கலாமா?"

"அவர்கள் ஆத்மாவைப் பாட்டில் சேர்க்கிறீர்களே? உங்கள் பொறுப்புக்கு உங்களையும் சேர்க்கிறீர்கள். கரைக்கிறீர்கள். அதனோட வெற்றி."

அப்பா, உறக்கத்தில் இருந்து எழுந்து, பேச்சுச் சப்தம் கேட்டு வெளியே வந்தார்.

அவரிடம் பேப்பரை நீட்டினாள், பாரதி.

அவர், ஒவ்வொன்றாகப் படித்து, பூஜை அறை படங்களுக்கு முன் போய் வணங்கி விட்டுத் திரும்பினார்.

"கடவுள் சித்தம். உங்களைப் போன்ற சிநேகிதர்களின் ஆத்மார்த்த ஈடுபாடு."

சற்று நேரம், இறுக்கமான அமைதி நிலவியது, அங்கு.

வைத்தியநாதன் மகளின் முகத்தைப் பார்த்தார்.

"என்னம்மா பண்ணப் போறே?"

"நீங்க சொல்லுங்கப்பா."

"கட்டாயம் நீ போகணும். வெளிநாடு போற வாய்ப்பு எல்லார்க்கும் சுலபமா வாய்க்கிறது இல்லை. வெளிநாடு போய்த்தான், நம் வித்வத் நிரூபணம் ஆறது இல்லை. நமக்குப் புது மனுஷாள். புது மண், புது ரசனை பார்க்கக் கிடைக்குமே."

பாரதி மகிழ்ச்சியுடன் சொன்னாள்.

"அது மட்டும் இல்லைப்பா. அரவிந்தன் மாதிரி நம்ம மேன்மையை விரும்பற மனுஷாளுக்கும் சந்தோஷம் கிடைக்கிறது."

"ரொம்பச் சரி."

பேச்சு, பாட்டைப் பற்றித் திரும்பியது.

"வெளிநாடு போறோம். அங்க நம்ம ஊர் சங்கீதம்தான் பிரதானமா பாடப்படணும். அதுவும் கலப்பு இல்லாமே இருக்கணும். நம் மோட மொழிகளைப் பிரதானப்படுத்தணும். தமிழ்ல ஆரம்பிப்போம். நம்ம சிவன், மாரி முத்தா பிள்ளை, கோபாலகிருஷ்ண பாரதி, மகாகவி பாரதி, தியாகையர்வாள், தீட்சிதர். சாஸ்திரிகன்னு நிரவலா பாடணும்" என்றார் வைத்தியநாதன்.

"அரவிந்தன்... அவசர வேலை ஒன்றும் இல்லையே?"

"இல்லை."

பாரதி அவன் முன் வந்து அமர்ந்தாள்.

"ஒரு விஷயம் கேட்கணும். அரவிந்தன், இத்தனை உதவிகள் எனக்குப் பண்ண ணும்னு உங்களுக்கு என்ன தேவை?"

அவன் சிரித்தான்.

"தெரியலை."

"எனக்கு, பல சமயங்கள்லே லேசான குற்றமனப்பான்மையே ஏற்படுது."

"எதுக்கு ஏற்படணும்?"

"தெரியலை. ஏற்படுது."

"மேடம் உங்களைப் பத்தி என்னோட முதல் மனப்பதிவு, உங்க பாட்டுதான். உங்க கிட்ட அபூர்வமான திறமை இருக்குன்னு எனக்குத் தோணிச்சு. அதிர்ஷ்டவசமா உங்களைப் பார்க்கவும், பேசவும் எனக்கு வாய்ப்பு ஏற்பட்டுச்சு. உங்க வாழ்க்கை, சூழ்நிலை, உங்க குடும்ப நிலைமை எல்லாம் எனக்குத் தெரியவந்தது. உங்க மேல கூடு தலான ஈடுபாடு வந்துச்சு."

"எனக்கு நீங்க செய்த அளவுக்கு, நான் உங்களுக்கு ஒன்றும் தரலியே..."

"சினேகத்துல, கணக்கு வழக்கு என்ன? நான் ரெண்டு கொடுத்தா, நீங்க நாலு கொடுக்கணும்கிறது, சினேகத்துல இல்லை. வியாபாரத்துல இருக்கலாம்."

மங்கும் மாலை, சற்று நேரத்தில், இருட்டைக் கொண்டு வந்து விடும் போல் இருந்தது. பாரதி எழுந்து விளக்கைப் போட்டாள்.

"நான் பெண்ணா பிறந்தது, ஒரு காரணம். எனக்கு ஆண் சினேகம் கிடைக்கலை. அதெல்லாம் தப்புன்னு சொல்லி வளர்க்கப் பட்டவ நான். இப்ப வைதேகி மாதிரி, சினேகத்தை அழகா வளர்த்து, கொடுத்து, வாங்கி அனுபவிக்க, எங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படலை. நான் நண்பர்னு, என் கணவரைத்தான் நினைச்சேன். அதை உணர்ற, அதைக் கௌரவிக்கிற தகுதி அவருக்கு இல்லாம போச்சு. புருஷங்கிற ஹோதாவை விடவும் உயர்ந்த ஸ்திதி, சினேகம்கிறது அவருக்குத் தெரியலை. அதனால, பிரிய நேர்ந்தது. நான் அதிர்ஷ்டம் செய்யலைன்னும் சொல்ல முடியாது. எனக்கு நீங்க கிடைச்சீங்க... அதை இப்ப நான் அனுபவிக்க முடியறது எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு, அரவிந்தன்."

கிணங்கள், மஞ்சள் வர்ணத்தில் தங்கக் குழம்பாக, பொன் துகளாகக் கரைந்து, காற்றில் பறந்து கொண்டிருந்தன.

அரவிந்தன் எழுந்தான்.

"நிறைய வேலைகள் இருக்கு. பாஸ் போர்ட் மாதிரியான சடங்குகள் நிறைய இருக்கு."

"எனக்குன்னு பிறந்தவர் மாதிரி, உங் களுக்குத்தான் எத்தனை வேலை நான் கொடுக்க வேண்டியிருக்கு?"



**"அந்த எழுத்தாளருக்கு சமீபத்துல கல்யாணமாயிடுச்சுன்னு எப்படி தீர் மானமா சொல்றே?"**

**"குடும்பக் கதையா எழுதி வந்தவரு திடீர்னு பேய்க்கதை எழுத ஆரம்பிச் சுட்டாரே, அதை வச்சுதான்!"**

**– திருச்செங்கோடு கந்தசாமி**

"எனக்குச் சந்தோஷம்தான் அதில்."

அவன் புறப்பட்டான்.

அவள், அவன் போவதையே பார்த்துக் கொண்டு நின்றாள். ஆட்டோ போய் விட்டது போலும். நடந்து, தெருமுனை போனால்தான், ஆட்டோ பிடிக்கலாம். அவன், நடந்து போய்க் கொண்டிருப்பதை, தெருவாசலில் நின்று பார்த்தபடி இருந்தாள்.

மாலை ஸ்நானத்தை முடித்துக் கொண்டு திரும்பிய வைத்தியநாதன், "என்னம்மா, அரவிந்தன் சார் போய்ட்டாரா" என்றார்.

"இப்பத்தான் போனார்."

"மழை மாதிரி சில பேர் இருக்கிறதால தான் உலகம் நடக்கிறது, இந்த அரவிந்தன் மாதிரி."

பாரதி பதில் சொல்லவில்லை.

(அடுத்த இதழில் நிறைவுறும்)

# கம்பீரவல்லி!

மதுரவல்லிக்கு வயது 38. மதுரை ஆர்த்தி ஓட்டல் இட்லியும் காப்பியும் பிடித்த டிபன்.

இதிலென்ன செய்தி என்கிறீர்களா?

மதுரவல்லி, மதுரை கூடலழகர் பெருமாள் கோயிலின் யானை!

நூறு சதவீதம், ஒரு ராணி போலவே வாழும் இந்த யானையைக் கண்டால் மதுரை வாசிகளுக்குக் கொள்ளை பிரியம்.

''மதுரவல்லி ரொம்ப ஆசாரமான யானைங்க. தினமும் அவளுக்கு முக்கால் மணி நேரம் கண்டிப்பா குளிச்சாகணும்'' என்கிற இதன் பாகன் ரவீந்திரன், கோவிலை ஒட்டிய கொட்டடியில் இதைக் குளிப்பாட்டும் அழகே தனி.

• குளித்து...

இரண்டு மூன்று உதவியாளர்களுடன் யானையைப் படுக்க வைத்து, 'பைப்' மூலம் நீர் பாய்ச்சி, அங்குலம் அங்குலமாகத் தேய்த்துக் குளிப்பாட்டுகிறார்.

குளித்ததும் சுத்தபத்தமாகத் திருமண் இட்டுக் கொள்ளும் மதுரவல்லிக்கு ஆர்த்தி ஓட்டலில் காலை டிபனாக முதல் ஈடு இட்லி முழுக்கக் காத்திருக்கிறது!

• டிபன் முடித்து...

''முன்னூறு இட்லியை ரெண்டு நிமிஷத்துல சாப்பிட்டுடுவா. நடுவுல கொறிக்கக் கொஞ்சம் ஓமப் பொடி. அப்புறம் பிட்டர் காப்பி. இதாங்க மார்னிங் டிபன்'' என்கிறார் ரவீந்திரன்.

மதிய உணவாக ஐம்பது கட்டி சாதம் சாப்பிடும் மதுரவல்லி, இரவு மட்டும் 'டயட்'டில் இருக்கிறாள். அதாவது 20 கட்டுப் புல் மட்டும்!

• கம்பீரமாக...!

''ஒண்ணரை வயசுல எங்கிட்ட வந்தது, கோமேஸ்வரி இவ! கோயில் நிர்வாகத்துல ஜோரா வெச்சிருக்காங்க. தினம் சாப்பாட்டுக்கு மட்டும் நாநூறுக்கும் குறையாம செலவு செய்யறாங்க. பாருங்க, என்ன கம்பீரம்! என்ன அழகு! நாத்துல ஒரு யானைக்குக் கூட இத்தினி கம்பீரம் வராதுங்க!'' என்கிறார் ரவீந்திரன்.

— ஜக்கு

படங்கள்: வெங்கடேஷ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

